# பியர்ஸ் டால்கம்

—அழகோடு பழகும் உறவு!




கொண்டாடுங்கள் பியர்ஸ் நறுமணத்தை—புத்தம் புதுமணம் அது, புதுமை கொண்டாடும் நறுமணம்! நெஞ்சுக்கு இன்ப நினைவே போல் கொஞ்சிப் பிரியாத வாசம்...உங்கள் நேசம் எவர்க்கும் உல்லாசம்! எந்நேரமும் புதுமை குன்றாத எழிலுக்கான டால்கம்: பியர்ஸ்! உங்கள் வனப்புக்குப் பாதுகாப்பான தூய, மென்குண கிளிசரின் சோப்பாகிய பியர்ஸ் சோப்பின் உற்பத்தியாளர்களால் தயாரிக்கப்படும் டால்கம்.

**பியர்ஸ்**—அழகுள்ள மாதர் வழிவழியாக
ஆண்டுவரும் அழகு சாதனச் செல்வம்!

2 சைஸ்களிலே வருகிறது:
பெரிய சைஸ், எகானமி சைஸ்.

[illegible] TM லண்டனிலுள்ள ஏ. அண்ட் எஃப். பியர்ஸ் சார்பாக இந்துஸ்தான் லீவர் லிமிடெடினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது

## ரீடா கூந்தலைப் பாதுகாக்கு



**தொல்லைகளைத் துரிதமாகவும்
திறமையாகவும் நீக்குகிறது.**

ரீடாவை உபயோகித்து மயிர்க்கால்களுக்
குப் போஷாக்குத் தருவதால் உங்கள்
கூந்தல் நீண்டு வளர்ந்து மிருதுவாகவும்
பளபளப்பான கருமை நிறத்துடனும்
காணப்படும். இதிலுள்ள மருந்துச்சத்துக்
கள், மயிர் கொட்டுதலை நிறுத்தி,
பொடுகைபபோக்கி, நரைக்காமல் பாது
காக்கும். புட்டியிலுள்ள ரீடாவைத்
தேங்காய் எண்ணெய், கடுகு அல்லது
நல்லெண்ணெயில் கலந்து எப்போதும்
உபயோகியுங்கள். காரிருள் போன்ற
கருங்கூந்தல் அழகை நிச்சயம் நீங்கள்
பெறலாம். ரீடாவை உபயோகிப்பதுடன்
உங்கள் நண்பர்களுக்கும் சிபாரிசு
செய்யுங்கள்.




# ரீடா

கவர்ச்சி தரும் கூந்தலின் ரகசியம்

ரீடா கம்பெனி, சென்னை-1.

பிலவ, ஆவணி 25



# கல்கி

செப்டம்பர் 10, 1961

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

மிகப் பழங்கால முதலாகவே அமெரிக்கப் பூர்வீகக் குடிகள் புகையிலையைப் பரம் பொருளிடமிருந்து பெற்ற வரப்பிரசாதமாகப் போற்றித் தொழுததுண்டு. விசேஷச் சடங்குகளின்போது புகையிலையை யாகத் தீயிலிடுவதும், மழையற்ற வறட்சியின் போது பொடித்த புகையிலையைக் காற்றில் தூவிவிடுவதும், மீன்கள் கிடைக்காத போது கடலில் புகையிலைத் தூள்களை இறைப்பதும் அவர்களிடமிருந்த சம்பிரதாயம்.



## புகையிலையின் வரலாறு... 2

Panama

20

CIGARETTES




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

பனாமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT.702 TM

Greens' Advtg.



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 6

# அச்சந்தவிர்

பாரதியார் பாக்கியசாலி—சுதந்திர பாரதத்தின் அவல நிலையைக் காண இன்று அவர் நம்மிடையே இல்லை.

சுதந்திர பாரதத்தில் இப்போது மக்கள் படும் பயத்தையும் பீதியையும் அவர் பார்த்தால் மனம் உருகித் துயர் பெருகும் வகையில் பாடியிருப்பார்.

அந்நிய ஆட்சியினின்று விடுதலை கோரிய பாரதியார், ஆண்மையும் திறமும் மிக்க மக்களாகப் பாரத நாட்டு மக்களைப் பார்க்க விரும்பினார். அதற்காக வேண்டி மக்களுக்குத் தைரியமூட்டப் பலப் பல பாவங்களில் கவிதையைப் புனைந்து கொடுத்தார். ஒரு சமயம் கட்டளையாகச் சொன்னார்: "அச்சந்தவிர்" என்று.

மற்றொரு சமயம் மனம் கசந்து தலையிலடித்துக் கொள்ளும் பாவனையில்,

"நெஞ்ச பொறுக்குதில்லையே—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்,
அஞ்சி யஞ்சிச் சாவார்—இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே"

என்றும் பாடினார்.

"அச்சமில்லை அச்சமில்லை அச்சமென் பதில்லையே
உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதினும்"

என்று சொல்லிலும் சந்தத்திலும் பயமின்மையைக் குழைத்து ஊட்டினார்!

அவர் பாடல்களைப் பாடிப் பாடி, வீர உணர்ச்சியும் தியாக உணர்ச்சியும் பெற்று, நம் மக்கள் விடுதலை பெற்றனர். விடுதலையடைந்த பாரதத்தில் வாழும் மக்கள் இப்போது நாள்தோறும், நிமிடந்தோறும் அனுபவிக்கும் பயத்தையும் பீதியையும் பார்த்தால் பெரும் துக்கமாக இருக்கிறது.

முன்பு வெள்ளையர் இருந்தார்கள், துப்பாக்கி முனையைக் காட்டினார்கள்; அதுவதில் ஓரளவு நியாயமிருந்தது. இன்று நம்மவர்களே நம்மை ஆள்கின்றனர். நேற்று வரை நம்மோடு பழகினவர்கள் ஒரு கட்சியாகச் சேர்ந்துகொண்டு ஆட்சி பீடத்தில் இருக்கின்றனர். இவர்களைக் கண்டு நாம் பயப்பட வேண்டியிருக்கிறது என்றால் இதை விடக் கேவலமான நிலையுண்டா?

நாட்டில் உற்பத்தித் தொழில்கள் நடத்துபவர்கள், வியாபாரம் செய்பவர்கள், விவசாயம் செய்பவர்கள் ஆகிய முக்கியமான மூன்று பிரிவினர்களும் மந்திரிகளையும், காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்களையும், இவர்கள் ஆட்சியில் வேலை செய்யும் பெரிய அதிகாரி முதல் விற்பனை வரி இலாகா குமாஸ்தா வரையுள்ளவர்களையும் கண்டு அஞ்சி நடுங்க வேண்டியதாக இருக்கிறது! கம்யூனிஸ்ட் நாட்டில் பக்கத்தில் இருப்பவன் 'ரகசிய போலீஸ் உளவாளியோ' என்று சந்தேகப்பட வேண்டியிருக்குமாம்! இங்கும் அதைப் போலவே ஆளும் கட்சியைச் சேர்ந்த சாமான்யத் தொண்டர்களைக் கூடக் கண்டு பயப்படவேண்டியிருக்கிறது! பர்மிட் என்றும், லைசென்ஸ் என்றும், உச்சவரம்பு என்றும்,

கூட்டுப்பண்ணை என்றும், சர்க்கார் தொழில்கள் என்றும், தனியார் தொழில்கள் என்றும் சொல்லிக்கொண்டு மக்களின் ஜீவாதாரமான அத்தனை தொழில்களிலும் சர்க்கார் பிரவேசித்திருப்பதால், மக்கள் காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்களைத் தினம் வலம் வந்து பயபக்தியோடு பூசை செய்ய வேண்டியிருக்கிறது. அந்நிய ஆட்சியில் கூட இவ்வளவு கேவலமான நிலை இல்லை. அன்று, அஞ்சிய மக்களை வீரம் கொள்ளும்படி செய்ய முடிந்தது. ஆனால் இன்று, இந்தக் காங்கிரஸ் தரகனுக்குப் பயப்படவில்லையெனில், தங்கள் தொழிலும் வியாபாரமும் நசித்து, குடும்பம், மனைவி, மக்கள் அனைத்தும் தொலைந்து போகுமோ என்று ஏங்கும் மக்களை உண்மை உணர்ந்து வீறுகொண்டு எழச் செய்யும் பணி மிக மிகச் சிரம சாத்தியமானதாகும்.

யாருக்கும் அஞ்சா தீர வாழ்க்கையே மனிதனின் லட்சியம் என்ற பாரதியாரின் உன்னதமான உபதேசத்தை அவருக்கு நினைவு நாள் கொண்டாடும் இப்புனித வாரத்தில் நினைவுகொள்வோமாக.

# மந்திரத்தால் மாங்காய் விழுமா?

இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் தேசிய திட்டக் கமிட்டி என்பதாக ஒன்றை நேருஜி அமைத்தார். அப்போது காந்தி அடிகள் ஸ்ரீமதி ராஜகுமாரி அமிருத கௌருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் 'அவருடைய (நேருஜியின்) திட்டமெல்லாம் வீண் பிரயாசையே. பிரம்மாண்டமான விஷயங்கள் மட்டுமே அவரைத் திருப்தி செய்ய முடியும்' என்று எழுதினார். எவ்வளவு பொருள் பொதிந்த தீர்க்கதரிசன வாக்கு!

மலைப்பூட்டும் சாதனைகள் செய்வதில் நேருஜிக்கு உள்ள மோகத்துக்காக நாம் எவ்வளவோ மோசம் போகிறோம். கோடி கோடியாக விழுங்கி ஏப்பம் விடும் அணு உலைகள், விமானந்தாங்கிக் கப்பல் கட்டும் தளங்கள் இவைகளை நிர்மாணித்து உலகத்தைப் பிரமிக்கச் செய்ய வேண்டும் என்பது நேருஜியின் பேராசை. நம் நாட்டில் எதை யெதைக் குறைந்த செலவில் தயாரிக்க முடியும் என்பது பற்றி அவருக்குக் கவலை கிடையாது. பெனிசிலின் மருந்து இறக்குமதிச் சரக்கானால் பத்து காசுதான் கொடுக்க வேண்டியிருக்கும். அதையே உள்நாட்டில் தயாரிப்பதால் ஒன்றேகால் ரூபாய்க்கு வாங்குகிறோம். இறக்குமதி செய்யும் உரத்தைவிட அதிக விலை கொடுத்துச் சிந்திரியிலுள்ள ராட்சத ஆலையின் உற்பத்திப் பொருளை வாங்குகிறோம். பிரிட்டனிலிருந்து ஆயிரம் ரூபாய்க்குத் தருவிக்கக்கூடிய குளிர் பதனப் பெட்டிக்கு, 'நாமே செய்கிறோம்' என்ற வெற்றுப் பெருமைக்காக ரூ. 2,250 விலை தருகிறோம். சர்க்கரை விஷயம் சொல்லிச் சொல்லித் திகட்டி விட்டது. சில நாடுகள் விவசாய உற்பத்தியில் மட்டும்தான் சிறந்து நிற்க முடியும்; இன்னும் சில, தொழில் துறையில் மட்டுமே உயர்ந்து விளங்கமுடியும் என்ற உண்மையை உணருவதற்குப் பிரதமர் நேருஜி மறுப்பதாலேயே இந்த வேண்டாத விளைவுகள் நிகழ்கின்றன. இதையெல்லாம் பார்க்கும்போது,

> யந்திரசாலை யென்பர் எங்கள் துணிகளென்பர்
> மந்திரத்தாலே எங்கும்—கிளியே!
> மாங்கனி வீழ்வதுண்டோ?

என்று 'நடிப்புச் சுதேசி'களை இடித்துப் பாடிய அமர கவியின் வாக்கு நினைவுக்கு வருகிறது.

# சென்னையில் பாரதியார் விழா

'தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்' என்று முழங்கிய கவியரசர் பாரதியார் விழாவைச் செப்டம்பர் 10, 11 தேதிகளில் நாடெங்கும் கொண்டாடப் போகிறார்கள். இந்த வருடம் சென்னை தியாகராயநகர் வாணி மகாலில் பாட்டுக்கொரு புலவனின் விழாவைச் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி திரு எம். அனந்தநாராயணன் அவர்கள் தொடங்கி வைக்கிறார். அறிஞர்கள் பலரும் இவ்விழாவில் கலந்து கொள்கிறார்கள். பாரதியார் நூல்களைப் பரப்பிய சான்றோர் நால்வருக்கு நிதி மந்திரி திரு சுப்பிரமணியம் அவர்கள் கேடயங்கள் வழங்கிக் கௌரவிக்கப் போகிறார். சேவா ஸ்டேஜின் 'பாஞ்சாலி சபத'மும், நிருத்யோதயா குழுவினரின் 'கிருஷ்ண துலாபார' நாட்டிய நாடகமும் நடக்க விருக்கின்றன. சென்னை மக்கள் திரளாகப் பாரதி விழாவிலே கலந்து கொண்டு மகாகவிக்கு அஞ்சலி செலுத்துமாறு வேண்டுகிறோம்.

# இதைச் செயலாக்குங்கள்

தேச சுதந்திரம் பெறுவதே பொது நலனாக இருந்த அன்று, மகாத்மாஜியின் அறைகூவலுக்குச் செவிசாய்த்துக் கல்லூரிகளை நீத்தவர் பலர். தேசத்தின் ஒவ்வொரு பிரஜையுடைய சுதந்திரத்தையும் காக்க வேண்டிய இன்று, கல்வி நிலையங்களிலிருந்து யாரும் வெளியேற வேண்டியதில்லை. நவபாரதத்தின் புது சமுதாயத்தையே இன்றைய கல்வி நிலையங்கள், முக்கியமாகக் கல்லூரிகள் தாம், தோற்றுவிக்க வேண்டும். இக்கருத்தையே இவ்வாண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தின் பட்டமளிப்பு விழாவில் உரை நிகழ்த்திய ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் அவர்கள் வலியுறுத்தினார்கள்.

அந்தரங்கசுத்தமான முறையில் கடினமாக உழைத்து, பண்பட்ட இலட்சியங்களை உள்ளத்தால் உருவாக்கி, இந்த உழைப்பையும், இலட்சியங்களையும் நாட்டு முன்னேற்றத்துக்கு அர்ப்பணிக்க வேண்டியதன் அவசியத்தை ஸ்ரீ பாலசுப்பிரமணிய அய்யர் அவர்களின் உரை ஆணித்தரமாக எடுத்துரைத்தது.

தேசத்தில் ஒற்றுமை உண்டாக்குவது பற்றி எவ்வளவோ பேசப்படுகிறது. ஆனால் இப்படிப் பேசுபவர்கள் ஒரு விஷயத்தை மறந்து விடுகிறார்கள். மதத்தைப் பற்றி மதம் கொண்டு திரியாமல் எம்மதமும் சம்மதம் என்ற உன்னத மனோபாவத்துடன் யாவருக்கும் இடம் அளித்த சமய உணர்வுதான் இந்நாட்டின் ஐக்கியப் பான்மைக்கு முக்கிய காரணமாக இருந்தது என்பதை மறந்து விடுகிறார்கள். 'மதங்கள் மக்களைப் பிரித்துப் பாகுபடுத்தவில்லை; அவற்றின் அடிப்படைத் தத்துவம் ஒன்றேதான்; எனவே மதக் கோட்பாடுகளை ஒப்பிட்டுப் படிக்கும் ஒரு பாடத் திட்டத்தை ஏற்படுத்தினால் அது நாட்டின் ஒற்றுமைக்கு அடிகோலும்' என்று ஸ்ரீ அய்யர் அவர்கள் தருணமறிந்து கூறியுள்ள யோசனையை அரசியல்வாதிகளும், ஆட்சியாளர்களும், பல்கலைக் கழக நிர்வாகிகளும் கவனிக்க வேண்டும்.

மதபோதனையென்று நேரடியாகப் புகட்ட முடியாவிட்டாலும் மதத்தின் இடத்தில் பண்பை வைத்துப் பாடத் திட்டங்களை வகுக்கலாம் என்பது ஸ்ரீ அய்யர் அவர்களின் கருத்து. பட்டமளிப்புப் பிரசங்கங்கள் வெளியானதும் அவற்றைப் பெரிதுபடுத்தி விட்டுப் பின் மறந்து விடுவது வழக்கம். அப்படியல்லாமல், இந்த வருடப் பட்டமளிப்பு உரைக்குச் செவிசாய்த்து, படிப்பின் மூலம் வெறும் அறிவை மட்டும் வளர்க்காமல், பண்பையும் வளர்ப்பதற்குச் சம்பந்தப் பட்டவர்கள் வழிவகைகள் காண முயல வேண்டும்.

இந்து மதமும், இலக்கியமும் ஒருமித்துப் பரிணமித்த பாரதப் பண்பின் ஊற்றான வடமொழிக்கு உரிய இடம் தேடித் தர வேண்டுமென்பது உரையின் இன்னொரு யோசனை. தாய்மொழி, ஆங்கிலம், இந்தி இவற்றுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தால் வடமொழி புறக்கணிப்புக்கு ஆளாகி விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

பின்தங்கியுள்ளவர்களுக்கு அளிக்கும் சலுகைகள் காரணமாக ஏனையோரின் கல்வி ஆர்வத்துக்கு அணை போட்டு விடலாகாது; கற்கத் திறமையும், வசதியும் படைத்த யாவரும் கல்வி பெற வேண்டும் என்று ஸ்ரீ அய்யர் அவர்கள் கூறியிருக்கிறார். நல்ல முறையில் மட்டும் கல்வித் திட்டம் அமைந்து விட்டால் அதற்கு எவ்வளவு செலவிட்டாலும் தேச சுபிட்சத்துக்குச் செய்யும் முதலீடுதானே அது!



நமது புராதன மருத்துவ முறைகளையும், மூலிகைகளின் சக்தியையும் விஞ்ஞான ரீதியில் ஆராய்ந்து பார்க்குமாறு வைத்தியப் பட்டதாரிகளை ஸ்ரீ அய்யரவர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார். சட்டப் பட்டதாரிகள், மக்களின் வாழ்க்கையில் ஓயாமல் தலையிடும் இன்றைய சட்டங்களை உன்னிப்பாகக் கவனித்து, சட்டசபைகளுக்கு அவற்றின் நியாய, அநியாயங்களை அறிவுறுத்த வேண்டும்; அரசியல் நிர்ணயச் சட்டத்தை ஆட்சியாளர் மீறுமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதும் அவரது யோசனை. இந்த அறிவுரையைப் பட்டதாரி சமூகம் ஏற்றுச் செயலாற்றினால் இது, மக்கள் சுதந்திரத்துக்கு உண்மையாக வழி வகுக்கும்.

# வரம்புகடந்த விரயம்

கண்ணுக்குத் தெரிந்தும் நஷ்டத்துக்கு விற்பனை செய்யும் வியாபார தந்திரத்தைப் பற்றி ஒரு விவரம் வெளியாகியுள்ளது. தனது உடைமை என்ற அக்கறை சிறிதும் இல்லாமல், பொதுப் பணத்தை வாரிவிடும் நமது அருமைச் சர்க்கார்தான் இந்தப் புது யுக்தியைக் கண்டு பிடித்திருக்கிறது.

1950-ம் ஆண்டு மாதர் நல இலாகாவின் உபயோகத்துக்காகத் தமிழ்நாட்டு அரசாங்கம் ரூ. 18,846க்கு ஒரு கட்டிடம் வாங்கியது. மூன்றாண்டுகளுக்குப் பின் இக் கட்டிடத்தைப் புதுப்பிக்க ரூ. 81,000 தேவையாகும் என்று தெரிய வந்ததாம். இவ்வளவு மோசமான நிலையிலுள்ள ஒரு கட்டிடத்தை அரசாங்கம் ஏன் வாங்கியது என்பதற்குக் காரணம் புரியவில்லை.

அதுதான் போகட்டும். மேற்கொண்டு நடந்ததைக் கேளுங்கள். செப்பனிட இவ்வளவு செலவு செய்வது தவறு என்ற சரியான முடிவைச் செய்தது சர்க்கார். அதற்குப் பிறகும் ஏழு வருடங்களுக்குக் காவலாள் போட்டு அந்தப் பாழடைந்த பங்களாவைப் பராமரித்தது. கட்டிடத்தின் வாங்கின விலையுடன் செலவினமும் சேர்ந்து சுமார் 27,000 ரூபாய் வரை உயர்ந்தது. பிறகு அந்தக் கட்டிடத்தை ஏலம் விட முடிவு செய்து ஏல விளம்பரத்துக்காக மேலும் ரூ. 600 செலவு செய்தனர். கடைசியில் அந்தக் கட்டிடம் ரூ. 690க்கு ஏலத்தில் போயிற்று.

காங்கிரஸ் சர்க்காரின் வீண் செலவுகளைக் கண்டு பழகிப் போன நமக்கும் கூட இது அதிர்ச்சியை உண்டாக்குகிறது. மனைக் கட்டுகளின் விலையே ஒரேயடியாக உயர்ந்துள்ள இந்த நாளில் 690 ரூபாய்க்கு ஒரு கட்டிடமே விற்பனையானதென்றால் ஆச்சரியமாக இல்லையா?

தனியார் துறையில் இத்தகைய காரியம் நடந்தால் சம்பந்தப்பட்டவர்கள் தண்டனைக்காளாகி யிருப்பார்கள். ஆனால் பொதுத் துறையில் நேரும் பெருந் தவறுகளால் ஏற்படும் கணக்கற்ற நஷ்டத்தைத் தனிப்பட்ட யாரும் தாங்க வேண்டியதில்லை. ஆதலால் பதவியில் உள்ளவர்களுக்குப் பொறுப்பில்லாமல் போகிறது. இருந்தாலும் அரசாங்கத்தின் செயல்களுக்குத் தீர்ப்புக் கூற வேண்டிய மக்களும் தேர்தல் சமயத்தில் இவ்விஷயங்களை மனத்தில் கொண்டு நீதி வழங்குவார்களென நம்புகிறோம்.

# சட்டம் தளருமா?

கொழும்பு, ஆகஸ்ட் 28உ.

சென்ற வாரம் இலங்கைப் பார்லிமெண்ட் சபையில் வரவுசெலவுத் திட்டத்தைப் பற்றி விவாதம் நடைபெற்ற பொழுது, இலங்கை இந்தியப் பிரச்னையைப் பற்றிச் சில அங்கத்தினர்கள் பிரஸ்தாபித்து நாடற்ற நிலைக்கு உட்படுத்தப்பட்டிருக்கும் பத்து லட்சம் மக்களின் வருங்காலத்தை நிர்ணயிப்பதில் காலம் கடத்துவது எவ்வளவு ஆபத்தானது என்பதை இடித்துக் காட்டினார்கள். திரு தொண்டைமான் பேசியபொழுது இலங்கை அரசாங்கம் இலங்கை இந்திய பிரச்னையைப் பற்றி இந்திய அரசாங்கத்துடன் பேச்சு நடத்துவதின் முன்னும் இலங்கையிலுள்ள இந்திய வம்சாவளியினர்களின் பிரதிநிதிகளுடன் பேச்சு நடத்த வேண்டுமென்றும் இலங்கையிலேயே பேசி ஒரு நல்ல முடிவு செய்து கொண்டால் பிறகு இந்தியாவுடன் பேச்சு நடத்துவது சுலபம் என்றும் குறிப்பிட்டார்.

இதற்கிடையில் இலங்கை இந்தியப் பிரச்னை சம்பந்தமாகப் பேச்சுநடத்தத் தில்லியிலிருந்து இங்கு வரவிருந்த இலங்கை ஹை கமிஷனரின் வருகை முற்றிலும் எதிர்பாராத விதமாகக் கடைசி நிமிஷத்தில் ரத்து செய்யப்பட்டு விட்டது. இதற்கு என்ன காரணம் என்பதும் அறிவிக்கப்படவில்லை. இது யாருக்கும் ஏமாற்றத்தை அளிக்கவில்லை. ஏனெனில் இலங்கை இந்திய அரசாங்கங்களுக்கிடையில் பேச்சுக்கள் நடக்கப் போகின்றன என்று சென்ற பல ஆண்டுகளாகவே சொல்லப்பட்டு வருவதால் உண்மையாகப் பேச்சுக்கள் ஆரம்பமாகும் வரை பேச்சு நடக்கும் என்பதை யாரும் நம்பும் நிலையில் இல்லை.

தடுப்புக் காவலில் தமிழ் அரசுக் கட்சித் தலைவர்கள் தொடர்ந்து வைக்கப்பட்டிருப்பதையும் அவசரகாலச் சட்டம் காலவரையின்றி அமுலில் இருந்து வருவதையும் சமசமாஜக் கட்சியையும் கம்யூனிஸ்ட் கட்சியையும்சேர்ந்த அங்கத்தினர்களும் தமிழ்க் காங்கிரஸ் அங்கத்தினர் திரு சிவ சிதம்பரமும் பார்லிமெண்டில் பலமாகக் கண்டித்தார்கள். அவசரகாலச் சட்டத்தை வாபஸ் வாங்கக்கூடிய நிலைமை ஏற்பட்டதும் அச்சட்டம் வாபஸ் வாங்கப்பட்டு விடும் என்று இலங்கை நிதிமந்திரி பதிலளித்திருக்கிறார். இதற்கிடையில் தமிழ் அரசுக் கட்சியைச் சேர்ந்த பலர் தடுப்புக் காவலிலிருந்து விடுதலை செய்யப்பட்டு வருகிறார்கள். இதுவரையில் தமிழரசுக் கட்சி பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் யாரும் விடுதலை செய்யப்படவில்லை. திரு செல்வநாயகம் சில நிபந்தனைகளுடன் விடுதலை செய்யப்பட்டு லண்டனில் சிகிச்சை பெற்று வருகிறார்.

பெல்கிரேட் நடுநிலைமை மகாநாட்டுக்குப் பிரதம மந்திரி ஸ்ரீமதி பண்டாரநாயகா போயிருக்கிறார். அங்கு நேருஜியுடன் அவர் இலங்கை இந்தியர் பிரச்னை பற்றிப் பேசக் கூடுமென எதிர்பார்க்கப்படுகிறது. —ரஜனி

# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி

## 6-திருவிழாக் கூட்டம்

நாளங்காடியில் நெருங்கி நின்ற பெருங் கூட்டம் கலைந்தபோது யவனர்கள் சுமந்து நின்ற அந்தப் பல்லக்கும் மெல்ல நகர்ந்தது. ஆனால் பல்லக்குக்கு உள்ளே இருந்தவர்களின் சிந்தனை மட்டும் அந்த இடத்தை விட்டுச் சிறிதும் நகரவே இல்லை. கூட்டத்தில் தடுமாறி விழுந்த கிழவியைக் கண்டதும் அவளைத் தூக்கி விடுவதற்காக விரைந்து வந்தவனையும், அப்படி விரைந்து வந்தபோதும் அதிராமல், பதறாமல், பூ உதிர்வது போல் அவன் நடந்த நிதான நடையையும், புன்னகையுடனே தலை நிமிர்ந்து 'மனத்தை அரித் தெடுக்கின்றதனால் ஆசைதான் பெருநோய்'-என்று எண்ணத்திலே தைக்கும்படி வார்த்தைகளைச் சொல்லிய துணிவையும், நினைத்து நினைத்து, நினைவு அந்த இடத்திலிருந்து நகராதபோது பல்லக்கு மட்டும் நகர்ந்து முன்னேறிச் சென்றது. அதுவரை அமைதியாகப் பல்லக்கில் எதிரே உட்கார்ந்திருந்த தோழி வாய் திறந்து மெல்லக் கேட்டாள்:

"அது ஏனம்மா அப்படிப் பொய் சொன்னீர்கள்? 'சுரமஞ்சரியா'-என்று அவர் கேட்டபோது இவ்வளவு நீண்ட கால இடைவெளிக்குப் பின் முதல்முறையாக அவரைச் சந்திக்கிற நீங்கள் ஆர்வத்தை மறைக்காமல் 'ஆம்' என்று ஒப்புக் கொண்டிருக்கலாமே? எதற்காக வானவல்லியின் பெயரைச் சொல்லி உங்களை நீங்களே மறைத்துக் கொண்டீர்கள்......?"

"மாளிகையிலிருந்து வெளியேறி வருவதற்கே வாய்ப்பில்லாமல் என்னைத் தந்தையார் சிறை வைத்திருக்கிறார் என்பதை அதற்குள் மறந்து விட்டாயா? இந்திர விழாவின் முதல் நாளாகிய இன்றைக்கு நகரத்தைச் சுற்றிப் பார்க்கும் ஆசையை அடக்கமுடியாமல் அங்கே வானவல்லியைச் சுரமஞ்சரியாக நடிக்கச் செய்து விட்டு இங்கே நான் வானவல்லியாக நடிப்பதாய் ஒப்புக் கொண்டு புறப்பட்டதைக் கூடவா அதற்குள் மறந்து விட்டாய்?" என்று இரகசியம் பேசுகிறாற் போன்ற மெல்லிய குரலில் கேட்டாள் சுரமஞ்சரி.

"ஒன்றும் மறக்கவில்லை. மறப்பதற்கு எனக்குப் பித்துப் பிடித்து விட்டதா, என்ன? 'நான் சுரமஞ்சரிதான்' என்று நீங்கள் அவரிடம் ஒப்புக்கொள்வதனால் உங்கள் இரகசியம் ஒன்றும் வெளியாகி விடப் போவதில்லையே? இவ்வளவு காலத்துக்குப் பின்பும் உங்களை நினைவு வைத்துக்கொண்டு கேட்டவரிடம் ஏமாற்றமளிக்கும் மறுமொழியை நீங்கள் கூறியிருக்க வேண்டாமே என்று தான் சொன்னேன், அம்மா."

"என்னுடைய மறுமொழி அவருக்கு ஏமாற்றம் அளித்திருக்கும் என்று நீ நினைக்கிறாய்?... அப்படி நீ நினைப்பதாயிருந்தால் உன்னைப்போல் உலகம் தெரியாதவள் வேறு யாரும் இருக்க முடியாது. 'எல்லாப் பெண்களிலும் தாயைக் காண்கிறேன். எல்லாத் தாய்களிலும் பெண்ணைக் காண்கிறேனில்லை' என்று நெகிழ்ச்சியும் நெருக்கமும் இல்லாமல் முகத்தில் அறைந்தாற்போல் பேசுகிற மனிதரிடத்தில் 'நான்தான் சுரமஞ்சரி'—என்பதைச் சொல்வதனால் என்ன பயன் விளைந்துவிடப் போகிறது?"

"பயன் விளைய வேண்டும் என்று எதிர்பார்த்துக் கொண்டே எல்லாக் காரியங்களையும் செய்ய முடியுமா? பெருநோய்க் காரியான அந்தக் கிழவியைத் தொட வேண்டாமென்று நீங்களாகத் தானே வலுவில் அவரை எச்சரித்தீர்கள். என்ன பயனை எதிர்பார்த்து அந்த எச்சரிக்கையைச் செய்தீர்கள், அம்மா?"

வசந்தமாலையின் இந்தக் கேள்விக்குச் சுரமஞ்சரியால் பதில் சொல்ல முடியவில்லை. அவள் நாணித் தலை குனிந்தாள்.

"ஒரு பயனையும் எதிர்பார்த்து எச்சரிக்கை செய்யவில்லை. ஏதோ மனத்தில் தோன்றியது, செய்தேன்" என்று வெட்கத்தினால் ஒடுங்கிய குரலில் அவளிடமிருந்து பேச்சுப் பிறந்தது.

"ஏதோ தோன்றியதென்று சொல்லிவிட்டுத் தோன்றியிருப்பதை உங்களுக்குள்ளேயே அந்தரங்கமாக வைத்துக் கொள்ள முயல்கிறீர்களே? ஏதோ தோன்றியதென்றுதான் காமன்கோவிலை வலம் வந்தீர்கள். ஏதோ தோன்றியதென்றுதான் அன்றைக்கு அந்த ஓவிய

விடத்தில் மடல் எழுதிக் கொடுத்து அனுப்பினீர்கள். ஏதோ தோன்றிய தென்றுதான் முதல் முதலாக அவரைச் சந்திக்க இந்திர விழாவின் போது மணிமாலையைக் கழற்றிப் பரிசளிக்கத் துணிந்தீர்கள். இப்படியே அவரைப் பார்க்கும் போதும், நினைக்கும்போதும் உங்களுக்கு ஏதோ தோன்றிக்கொண்டே இருக்கிறது.''

இதைக்கேட்டுக் கரமஞ்சரி சிரித்தாள். அவளுடைய கண்களில் மென்மையான உணர்வுகளின் சாயல்கள் மாறி மாறித் தோற்றின. வெளிப்படலாமா, வேண்டாமா என்று தயங்குவது போல் இதழ்களில் ஏதோ ஒரு கனிவு நிறைந்து நின்று தயங்கியது.

''நீண்ட நாட்களுக்குப் பின் உங்கள் முகத்தில் சிரிப்பைப் பார்க்கிறேன் அம்மா! பூமியின் வறட்சியைத் தணிப்பதற்காக மேகங்கள் கனியும் வானத்தைப் போல் உங்கள் வதனத்தில் எதற்காகவோ நளினமான உணர்வுகள் கனிகின்றனவே? நீங்கள் இந்தச் சில விநாடிகளில் அதிகமான அழகைப் பெற்றுவிட்டாற்போல் தோன்றுகிறீர்கள், அம்மா! நான் சொல்வதில் உங்களுக்குச் சந்தேகம் இருந்தால் இதோ என் தலைக்குமேல் பல்லக்கில் பதித்திருக்கும் கண்ணாடியில் நீங்களே உங்களுடைய முகத்தைப் பார்த்துக் கொள்ளுங்கள்.''

கரமஞ்சரி தன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். வசந்தமாலை கூறியது மெய்தான். தன் முகத்தில் மலர்ச்சி உண்டாகியிருப்பதைக் கரமஞ்சரி தானே உணர்ந்தாள். தனக்கு அந்த மலர்ச்சியைத் தந்தவனைப் பற்றி அவளுடைய சிந்தனைகள் படர்ந்தன. இப்போது கொடி போல் இளைத்திருந்த அவன் தோற்றமும் தீயில் உருகி ஓடும் மாற்றுக் குறையாத பொன்னின் நிறமும், படிப்பினால் ஒளி பெற்றிருக்கும் முகமும், கண்களும், அவள் நினைவில் ஒவ்வொன்றாகத் தோன்றின. ஒவ்வொரு புள்ளியாக வைத்துக் கொண்டு இறுதியில் எல்லாப் புள்ளிகளையும் கோடுகளால் இணைத்துக் கோலமாக்குவது போல அவனுடைய தனித்தனி அழகுகளையும், தனித்தனிச் சிறப்புக்களையும், ஒவ்வொன்றாக எண்ணிக் கூட்டி மனத்துக்குள்ளேயே அந்த ஆண்மைக் கோலத்தை வரைந்து பார்த்தாள் அவள். நாளுக்கு நாள் அவன் தன்னிடமிருந்து நீண்ட தொலைவு விலகிப் போய்க் கொண்டிருக்கிறான் என்பதை எண்ணியபோது துக்கத்தினால் நெஞ்சை அடைத்தது. கண்களில் நீர் நெகிழ்ந்தது. மனத்தை அடைத்த துக்கத்தை வார்த்தைகள் வெளிக் கொணர முடியவில்லை. நினைத்தாள்:- சில ஆண்டுகளுக்கு முன் இதே போல் இந்திரவிழாவின் முதல் நாள் ஒன்றில் மற்போரில் வென்ற வீரனாக அவனைச் சந்திக்க நேர்ந்ததையும், இன்று மீண்டும் சொற்போரில் வெல்லும் வீரனாகச் சந்திப்பதையும், இந்த இரண்டு சந்திப்புக்களுக்கும் நடுவில் எப்போதோ ஒரு கணத்தில் தன் மனத்தையே அவன் வெற்றி கொண்டதையும், அதன் பின் கணம் கணமாகத் தன் மனமே அவனுக்குத் தோற்றுப் போய்க் கொண்டு வருவதையும் - சேர்த்து நினைத்தாள் கரமஞ்சரி. முதற் பார்வையிலேயே தன் கண்களில் நிறைந்துகொண்ட அந்தச் சுந்தர மணித் தோள்களை நினைத்தபோது அவள் நெட்டுயிர்த்தாள்.

'மழையும் புயலுமாகக் கழிந்த ஏதோ ஓர் இரவில் கடலின் நடுவே கப்பல் காப்புத் தீவில் நான் சாய்ந்து கொள்ளுவதற்கு அணையாக நீண்ட கை இது-இந்த அழகிய கைகள் உதவி செய்வதற்கு மட்டுமே முன் விரிகின்றன. அன்புடன் தழுவிக் கொள்ள நீள்வதில்லையே என்று எண்ணி எண்ணி நான் பெருமூச்சு விடுவதுதான் கண்ட பயன். துன்பப்படுகிறவர்களின் துன்பத்தைக் களைவதற்காக விரைந்து முன் நீளும் இந்தக் கைகள் அன்பு செலுத்துகிறவளுடைய அன்பை ஏற்றுக் கொள்வதற்கு மட்டும் ஏன் தயங்குகின்றனவோ? உடம்பெல்லாம் அழுகி நாறும் பெருநோய் பிடித்த கிழவியைத் தீண்டுவதற்கும் கூசாத கைகள் தன்னையே நினைத்துத் தனக்காக ஏங்கிக் கொண்டும் தவித்துக் கொண்டுமிருக்கும் பெண்ணுக்கு முன்னால் மட்டும் ஏன் துவண்டு போய் விடுகின்றனவோ? 'துன்பப்படுகிறவர்களுக்கு உதவும் அநுதாபத்தையே செல்வமாக நினைக்கிறேன்' என்கிறாரே. நான் இவரையே எண்ணி ஏங்கித் துன்பப் பட்டுக் கொண்டிருக்கிறேனே. எனக்கு இவரிடமிருந்து என்ன அநுதாபம் கிடைத்தது? எதிர்பார்க்கிற இடத்திலிருந்து கிடைக்க வேண்டிய அன்பைப் பெற முடியாமல் வேதனைப் படுகிற என்னுடைய காதலும் ஒரு துன்பந்தானே?' —

தனக்குள் தானே கரமஞ்சரி இப்படி நினைத்துக் கொண்டிருந்த போது பல்லக்கின் திரையை விலக்கி வெளியில் பார்த்துக் கொண்டிருந்த வசந்தமாலை, ''அம்மா! அம்மா! அதோ அங்கே பாருங்கள்'' என்று பரபரப்போடு கூறிக் கவனத்தை வெளிப்புறமாகத் திருப்பினாள்.

கரமஞ்சரி வெளியே தலைநீட்டிப் பார்த்தாள். கூட்டத்தில் ஓவியன் மணி

> காங்கிரஸ் கட்சி பண பலத்தையே முற்றும் நம்பியிருப்பதும், பதவிகளை மந்திரிகள் தேர்தல் காலங்களிலும் விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருப்பதும், எதிர்க் கட்சிகள் ஒன்று சேராமலிருக்க வேண்டுமென்று கவலைப் படுவதும், காங்கிரஸ் தர்ம நியாய மான முறையில் வெல்ல முடியாது என்பதை அதுவே ஒப்புக் கொள்கிறது என்பதற்குச் சான்றுகளாகும்.
>
> —ராஜாஜி

மார்பனும் ஓர் அழகிய இளம் பெண்ணும் கைகோர்த்தபடி நடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

நெடுங் காலத்துக்குப் பின் அவனைக் கண்ட ஆவலை அடக்க முடியாமல், "வசந்தமாலை! மணிமார்பனைக் கூப்பிடடி. அவரைப் பற்றிய விவரங்களை யெல்லாம் மணிமார்பனிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்" என்றாள் கரமஞ்சரி. வசந்தமாலை கூப்பிடுவதற்குள் மணிமார்பனும், அவனுடன் சென்ற பெண்ணும் கூட்டத்தில் எங்கோ மறைந்து விட்டார்கள். வசந்தமாலை 'ஐயா ஓவியரே!' என்று விளித்த குரல் கூட்டத்திலிருந்த வேறு பலரைப் பல்லக்கின் பக்கமாகத் திரும்பிப் பார்க்கச் செய்ததைத் தவிர வேறு ஒரு பயனும் விளைய வில்லை. வசந்தமாலை ஏமாற்றத்தோடு கரமஞ்சரியிடம் அலுத்துக்கொண்டாள்:

"எப்போதுமே திருவிழாக் கூட்டத்தில் இந்தத் தொல்லைதான். நாம் யாரையோ அழைத்தால் வேறு யாரோ திரும்பிப் பார்க்கிறார்கள்."

"வாழ்க்கையே திருவிழாக் கூட்டத்தில் அழைப்பதுபோல் தான் இருக்கிறதடி வசந்தமாலை! நாம் யாரை அழைக்கிறோமோ அவர்கள் திரும்பிப் பார்ப்பதில்லை. யாருடைய செவிகளில் கேட்க வேண்டும் என்பதற்காக நம்முடைய இதயத்திலிருந்து ஆசையும் நாவிலிருந்து சொற்களும் பிறக்கின்றனவோ, அவருடைய செவிகளுக்கு அவை எட்டுவதே இல்லை. யாரை நினைத்தோ கூவுகிறோம். நினைவுக்குக் காரணமாகாத வேறு யாரோ பதிலுக்குத் திரும்பிப் பார்க்கிறார்கள். யாருக்காகவோ கண் திறக்கிறோம். ஆனால் திறந்த கண்களுக்கு முன்னால் வேறு யாரோ தென்படுகிறார்கள். என்ன உலகமோ? என்ன வாழ்க்கையோ? எல்லாமே சாரமில்லாமல் தெரிகிறதடி!" என்று தன் தலைவி கூறியபோது அவளுடைய வார்த்தைகள் இதயத்தின் ஆழத்தில் குவிந்து கிடக்கும் சோகத்தை யெல்லாம் திரட்டிக் கொண்டு வந்து கொட்டுவதை வசந்தமாலை உணர்ந்தாள்.

"மாளிகையிலிருந்து வெளியேற முடியாமல் இத்தனை காலம் சிறைப்பட்டுக் கிடந்த போதும் இதே வார்த்தைகளைத் தான் சொல்லிக் கொண்டிருந்தீர்கள். இன்று வெளியே வந்து சுதந்திரமாகச் சுற்றிப் பார்க்கும்போதும் இதே வார்த்தைகளையே சொல்லுகிறீர்களே?"

"அடி! அசடே! உடம்பைக் கட்டிப் போடுவதுதான் சிறை என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? மனம் விரும்புவதையும், நினைப்பதையும் அடைய முடியாமையே ஒரு சிறைதான்." இப்படிக் கூறித் துயரத்தைத் தவிர வேறெந்த உணர்வையும் காட்டாத வறட்சியானதொரு நகை புரிந்தாள் கரமஞ்சரி. தலைவியின் மனம் அளவற்று நொந்து போயிருப்பது தோழிக்குப் புரிந்தது. அவள் பேச்சைத் திருப்பி வேறு வழிக்குக் கொண்டு போனாள்:-

"விரைவில் மாளிகைக்குத் திரும்பி விடுவது நல்லதம்மா! உங்கள் தந்தையாரும், நகைவேழம்பரும் கூட இந்தப் பக்கமாகத்தான் தேரில் புறப்பட்டு வந்திருக்கிறார்களாம். எங்கேயாவது அவர்கள் பார்வையில் நாமிருவரும் தென்பட்டால் வம்பு வந்து சேரும்" என்று தலைவியிடம் மெல்லக் கூறி விட்டு வெளியே பல்லக்குத் தூக்குகிறவர்களுக்குக் கேட்கிற படி இரைந்த குரலில் வேகமாகச் செல்வதற்கான கட்டளையை இட்டாள் வசந்தமாலை. பல்லக்குத் தூக்குகிறவர்கள் நடையைத் துரிதமாக்கிக் கொண்டு முன்னேறினார்கள்.

"இந்திர விழா முடிவதற்குள் மணிமார்பனை எப்படியும் சந்தித்து விட முயற்சி செய்ய வேண்டுமடி, வசந்தமாலை.....!"

"முயற்சி செய்வதைப் பற்றித் தடையில்லை. ஆனால் முயற்சி நிறைவேறுவதும், நிறைவேறாமற் போவதும் நம் கையில் இல்லையே?"

"எதற்கும் முயன்று பார்க்கலாமே? இந்திர விழா முடிவதற்குள் இன்னும் ஒருநாள் வானவல்லி கரமஞ்சரியாகவும் கரமஞ்சரி வானவல்லியாகவும் நடித்தால் போயிற்று."

"நம்முடைய சாமர்த்தியத்தை நகைவேழம்பரும் உங்கள் தந்தையாரும் புரிந்து கொள்ளவோ, சந்தேகப்படவோ செய்யாதவரை எப்படி வேண்டுமானால் நடிக்கலாம் அம்மா! திருவிழாக் கூட்டத்தில் நடப்பதுபோல நாம் சிறிதும் எதிர்பாராமல் அவர்கள் இருவரும் நம் பக்கம் திரும்பிப் பார்த்து விட்டால் எல்லாம் சீரழிந்து போகுமே?" என்று பயத்தோடு பதில் சொன்னாள் வசந்தமாலை.

# உன் அன்னைக்குத் தெரியாதா?

# உட்வர்ட்ஸ்

## கிரைப் வாட்டர்

குழந்தை வளர்ப்புக்கு
இன்றியமையாத தேவை







அங்கீகரிக்கப்பட்ட ஏஜெண்டுகள்: கோமல் மானுபாக். கெமிஸ்ட்ஸ் (பிரைவேட்) லிட்., பம்பாய், எம். ஜி. ஷஹானி & கோ. (கல்கத்தா) பிரை லிட்., கல்கத்தா. டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ. மதராஸ். எம். ஜி ஷஹானி & கோ. (டில்லி) பிரை லிட்., டில்லி.

# 7 - பூக்களும் பேசின



தன் கழுத்தை நெரிக்கும் வலிய கைகளின் பிடியில் சிக்குண்டு அந்தக் காபாலிகை விகாரமாகக் கூக்குரலிட்ட மரண ஓலம் சக்கரவாளத்தைச் சூழ்ந்திருந்த காடெல்லாம் எதிரொலித்தது. இளங்குமரன் வியப்படைந்து பார்த்தான். காபாலிகைக்குப் பின்புறம் நீலநாக மறவருடைய முகம் தெரிந்தது. அவள் கழுத்தை இறுக்கும் கரங்கள் அவருடையவை என்று கண்டான்.

''ஐயா! விட்டு விடுங்கள்...பாவம்... இவள் நமக்கு என்ன கொடுமையைச் செய்வதற்கிருந்தாளோ அந்தக் கொடுமையையே இவளுக்கு நாம் செய்து பழி சுமக்க வேண்டாம்'' என்றான் இளங்குமரன்.

''கொலை வெறி பிடித்த பேய்மகளே! இனி இத்தகைய செயலைச் செய்யவும் நினைக்காதே. செய்ய நினைத்தாயோ நீ செய்ய நினைத்தது உனக்கே செய்யப்படும். இதோ இப்படி ஒரு விநாடி என்னைத் திரும்பிப் பார்த்து விட்டுப் போய்த் தொலை....'' என்று இடிமுழக்கக் குரலில் எச்சரித்து விட்டுக் கீழே தள்ளுவது போலக் கைகளின் பிடியிலிருந்து அவளை உதறினார் நீலநாக மறவர்.

நிலைகுலைந்து விழுந்த பைரவி எழுந்து ஓடுவதற்கு முன்னால் தன்னை ஒடுக்கிய பெருவலிமை எது என்று காண்பவள்போல் ஒரு கணம் திரும்பி நிமிர்ந்து பார்த்தாள். ஆகாயத்துக்கும் பூமிக்குமாக நின்ற அந்தக் கம்பீர ஆகிருதியைப் பார்த்தாளோ, இல்லையோ, அலறி யடித்துக்கொண்டு தலைதெறிக்க ஓட்டமெடுத்தாள் அவள்.

''ஓடிப் போய் விடு!...மறுபடி திரும்பிப் பார்த்தாயோ எல்லாக் கபாலங்களுக்கும் நடுவே உன்னுடைய கபாலமும் கிடக்கும்'' - நீலநாகருடைய இந்த வார்த்தைகள் அவளை இன்னும் வேகமாக விரட்டின. குதிகால் பிடரியில் படுகிறாற் போல ஓடி மறைந்தாள் காபாலிகை.

''நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்?'' என்று இளங்குமரன் தன்னைக் கேட்ட கேள்விக்குப் பதில் கூறாமல் இடியிடித்து ஓய்ந்ததெனப் பெரிதாய்ச் சிரித்தார் நீலநாகமறவர். அவரிடம் மேலும் கூறினான் இளங்குமரன்:

''என் மனத்தில் இப்படியெல்லாம் நடக்கும் என்று சிறிதும் சந்தேகமே உண்டாகவில்லை, ஐயா! ஏதோ இவள் வந்து சொன்னாள். நம்பி விட்டேன். சுடுகாட்டுக் கோட்டத்தில் வன்னி மன்றத்தின் அருகே தன்னுடைய குரு காத்துக் கொண்டிருப்பதாகவும், அவருடனே சமயவாதம் புரிவதற்கு நான் வர வேண்டும் என்றும் அழைத்தாள். உடனே புறப்பட்டு விட்டேன்.''

''நீ புறப்பட்டது தவறில்லை, இளங்குமரா! அறிவின் முடிந்த எல்லை கருணை, பிறர்மேல் இரக்கம், எவ்வளவு தீய வன்மை பொதிந்ததாயிருந்தாலும் நல்லதாகவே பாவித்தல் - இவைதாம். ஆனால் சூழ்ச்சியின் முடிந்த எல்லையோ சந்தேகம் மட்டும்தான். நீயும் நானும் இப்போது வேறு, வேறு எல்லைகளில் வந்து நிற்கிறோம். நீ ஞானத்தையே வீரமாகக் கொண்டு ஞானவீரனாக வந்து நிற்கிறாய். நான் எப்போதும்போல் வீரத்தையும் ஞானமாகவே கொண்டு நிற்கிறேன். எதையும் எதிர்மறையாக எண்ணிப் பார்த்து விட்டுப் பின்புதான் உடன்பாடாக எண்ணிப் பார்க்கவேண்டுமென்பது வீரனின் சிந்தனைச் சூழ்ச்சிகளில் முதன்மையானது. உடன்பாடாகவே எண்ணிப் பார்ப்பது ஞானியின் பாவனை. கொடியும் கையுமாக யானைமேல் ஏறிக்கொண்டு நீ படைக்கலச் சாலையிலிருந்து புறப்பட்ட சிறிது நாழிகைக்கெல்லாம் நானும் உன்னைப் பின் தொடர்ந்து புறப்பட்டேன் என்பது உனக்குத் தெரியாது. நாளங்காடியில் நீ நின்ற இடங்களிலும் சென்ற இடங்களிலும் மறைந்து மறைந்து, தோன்றாத் துணையாக உன்னைப் பின்தொடர்ந்தேனென்பதும் உனக்குத் தெரிந்திருக்க முடியாது. நீ எதையும் சத்தியமாகவே உடன்பட்டுப் பாவனை செய்துகொண்டிருப்பதால் அங்கிருந்து புறப்படுகிறபோது சமயவாதம் புரியப்போவதையும் வேறுபட்ட கருத்துடைய அறிஞர்களைச் சந்திக்கப் போவதையும் மட்டும்தான் நினைத்துக் கொண்டு புறப்பட்டாய். நானோ உன்னுடைய பகைவர்கள் உன்னைக் கொல்ல நினைத்துத் திரிந்து கொண்டிருப்பவர்கள், - எல்லாரையும் எண்ணிப் பின் தொடர்ந்தேன். நீ உன்னுடைய அறிவுக்குப் பகைவர்களாக எதிரே வந்து கொடி நடப் போகிறவர்களை மட்டும் எதிர்பார்த்து வந்தாய். நானோ உன்னுடைய உயிருக்குப் பகைவர்களை எதிர்பார்த்தும் எதிர்த்துப் பார்க்கவும் வந்தேன். நீ பிரமவாதியைச் சொற்களால் மடக்கி வென்றதையும் சாருவாகனின் செருக்கை வேரோடு சாய்த்து வென்றதையும் 'கருணைதான்

செல்வம்' என்று அந்தப் பல்லக்குச் செல்லக் குமரிக்குப் பதில் சொல்லி விட்டுக் கீழே விழுந்த முதுமகளைத் தூக்கி வழியனுப்பியதையும் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்த நான் கடைசியில் இந்தக் காபாலிகையின் பொய்யான வேண்டுகோளுக்கு நீ செவி சாய்த்த போதுதான் மகிழ்வதை நிறுத்திக் கொண்டு சந்தேகப்படத் தொடங்கினேன். இவள் உன்னிடம் பேசிய விதமும், இந்த அகாலத்தில் வன்னி மன்றத்துக்கு அழைத்த முறையும் எனக்குச் சந்தேகமூட்டின. நீ இவளோடு புறப்பட்டால் நானும் பின்தொடர்வதென்று முடிவு செய்தேன். அப்படியே நடந்தது.''

''ஐயா! எதிர்மறையாக எண்ணிப் பார்ப்பதற்கும், சந்தேகப்படுவதற்கும் எனக்குத் தோன்றவே இல்லையே? கையைக் கூப்பி வணங்குகிறாற் போன்ற மதிப்போடு இவள் கூப்பிட்டவுடனே மெய்யென்று நம்பி விட்டேன்.''

''ஞானம் உலகத்தை நம்பிக்கை மயமாகவும் கருணை மயமாகவும் பார்ப்பதற்கு உன்னைப் பழக்கியிருப்பது நல்லது தான். ஆனால் கையை ஓங்கிக் கொண்டு அறைய வருகிற பகைவர்களைக் காட்டிலும் கைகூப்பிக் கொண்டு மனம் கூம்பாமல் வருகிற பகைவர்கள் பயங்கரமானவர்கள். உலகத்தில் கையைக் கூப்பிக் கொண்டு நண்பர் போல் வரும் பகைவர்கள்தாம் அதிகமாக இருக்கிறார்கள். 'தொழுத கை உள்ளும் படை ஒடுங்கும் ஒன்னார் அழுத கண்ணீரும் அனைத்து' என்று படித்திருப்பாயே?''

''படித்திருக்கிறேன். ஆனால் அது அரச தந்திரிகளுக்கும் மதி அமைச்சர்களுக்கும் சொன்ன உண்மை அல்லவா?''

''ஒவ்வொரு மனமும் ஓர் அரசுதான். அரச தந்திரமும், அமைச்சும் இருந்தால் மனத்தையும் மனோராச்சியத்தையும் அற்புதமாக ஆளலாம்.''

''எல்லாவற்றையும் விடவேண்டுமென்று நான் கற்று வந்திருக்க, எல்லாவற்றையும் ஆள்வதற்கு நீங்கள் வழி சொல்லிக் கொடுக்கிறீர்கள் ஐயா?'' என்றான் இளங்குமரன்.

இதைக் கேட்டு நீலநாகமறவர் புன்னகை புரிந்தார்.

''ஒன்றைப் பற்றிக் கொள்ள முடியாமல் மற்றொன்றைவிட முடியுமா, இளங்குமரா? கவலையில்லாமல் உன்னுடைய அறிவுப் போராட்டத்தை நடத்து. அறிவுடையவனுக்கு அந்த அறிவே பெரிய அரண். வேறு பாதுகாப்பு அவசியமில்லை. ஆனால் கண்ணுக்கு அழகாயிருக்கின்றது என்று மற்றவர்கள் புகழும் மையைக் கண்ணே கண்டு அநுபவிக்க முடியாதது போல அறிஞனுக்கும் மயக்கங்கள் வருவதுண்டு. இது போல் உயிர் போகிற ஆபத்துக்களும் அப்படி மயங்கி வரும். இன்று நீ இந்தக் காபாலிகையிடம் சிக்கிக் கொண்டதற்கும் அப்படிப் பிறழ்ந்த அநுமானம் தான் காரணம். இந்த நகரத்து எல்லைக்குள் நான் ஒருவன் உயிரோடு இருக்கிறவரை உன்னை யாரும் எதுவும் செய்து விட முடியாது. வா, போகலாம்'' என்று அவனை அழைத்துக் கொண்டு புறப்பட்டார், நீலநாகமறவர். இருவரும் நாளங்காடிவரை நடந்து வந்து பின்பு யானை மேல் ஏறிக்கொண்டு படைக்கலச்சாலைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அப்போது பின்னிரவு தொடங்கும் நேரமாகியிருந்தது. மேகங்களே இல்லாத தெளிந்த வானத்தில் ஆலமுற்றத்துக் கோவிலுக்கு அப்பால் முழுநிலா அற்புதமாகத் தோன்றிக் கொண்டிருந்தது. வானில் ஊர்ந்து திரிந்து வந்து அலுத்தது போல் அந்தப் பின்னிரவு நிலாவில் சற்றே ஒளி மங்கியுமிருந்தது.

ஏமாற்றத்தால் அன்று யாரிடமோ சாவதற்கிருந்த தன் உயிரைக்

காத்த இருவரையும் எண்ணி ஆலமுற்றத்தை நோக்கிக் கைகூப்பி வணங்கினான் இளங்குமரன். அந்த நேரத்துக்குப் பின்பும் நீலநாகமறவர் சில நாழிகைகள் உறங்கினார். இளங்குமரனுக்கு உறக்கம் வரவில்லை. கண்களை மூடியபடி அன்று காலையிலிருந்து நடந்த நிகழ்ச்சிகளை ஒவ்வொன்றாக நினைவுக்குக் கொண்டு வந்து சிந்தித்தவாறே படுத்திருந்தான் அவன். விடிகிற நேரம் நெருங்கியது.

ஆலமுற்றத்து மரத்தில் காகங்கள் கரைந்தன. எங்கோ கோழி ஒன்று விடிகாலைக் குரல் எழுப்பியது. விடிவதற்கு இன்னும் இரண்டு மூன்று நாழிகைகள் இருக்கும் என்று தோன்றியது. அப்போது நீலநாகமறவர் அவனை எழுப்பி அழைத்துக் கொண்டு ஆலமுற்றத்துக் கடற்கரை ஓரமாக உலாவப் புறப்பட்டு விட்டார். கரையோரத்து நெய்தற் கழி முகங்களில் பூத்திருந்த தாழம் பூக்களின் நறுமணம் வெள்ளமாய்ப் பரவிக் கொண்டிருந்தது. "பூக்களுக்கு மணம்தான் பாஷை மணம்தான் அர்த்தம். மணம்தான் இலக்கணம். மணம்தான் கவி. மணம்தான் அலங்காரம்" என்று பூம்பொழிலில் குருகுல வாசம் செய்த காலத்தில் திருநாங்கூர் அடிகள் அடிக்கடி கூறிய வாக்கியங்களை இன்றும் இளங்குமரன் நினைவு கூர்ந்தான். திருநாங்கூரில் இருந்தபோது அடிகளும் இதே போல வைகறையில் அவனை அழைத்துக் கொண்டு உலாவப் புறப்பட்டு விடுவார். அப்படிப் பனி புலராக் காலையில் அடிகளோடு புறப்பட்டுப் போகும்போது இப்படி எத்தனை எத்தனையோ அழகிய சிந்தனைகள் அவரிடமிருந்து பூத்து அவன் செவிகளில் உதிர்ந்திருக்கின்றன.




தாழம் பூக்களின் மணத்தை உணர்ந்தபோது அவனுக்கு ஏதேதோ பழைய நினைவுகள் எல்லாம் உண்டாயின. அந்த நினைவுகளும் புதரில் பூத்த தாழம் பூக்களைப் போலப் பூத்திருக்கும் இடம் தெரியாமல் மணத்தையே பாஷையாகக் கொண்டு அவனிடம் பேசின.

(தொடரும்)

# பேராசை

ஸோமாஸ்



கங்காதரனுக்குப் பேராசை அதிகம். ஆமாம், பேர் ஆசைதான்! பத்திரிகைகளில் தன் பெயர் வரவேண்டும் என்னும் ஆசை. அதற்காக அவன் மேற்கொண்ட முயற்சிகள் சாதாரணமானவையல்ல. ஏதோவொரு கம்பெனியில் பணியாற்றிக் கொண்டிருந்த கங்காதரனுக்குத் தான் ஒரு பிரசித்தி பெற்ற மனிதனாக விளங்க வேண்டும் என்னும் ஆசை எப்படியோ தோன்றி வேரூன்றி விட்டது. ஆபீஸ் வேலை நேரம் தவிர மற்ற நேரம் முழுவதையும் பொதுப் பணியிலேயே செலவிட்டான்.

ஆலயத் திருப்பணிக் கமிட்டியா? அதிலே கங்காதரனுடைய பெயர் ஒரு மூலையில் இடம் பெற்றிருக்கும். அநாதை மாணவர் இல்லமா? அதன் கௌரவ நிர்வாகி கங்காதரன் தான். வேலையில்லாதவர் சங்கமா? அதில் கங்காதரனுக்கு மட்டும் நிச்சயம் வேலையிருக்கும். சன்மார்க்க சங்கமா? அதில் கங்காதரனின் புகழ் மங்காமல் ஒளி வீசிக் கொண்டிருக்கும்.

ஊரில் எந்தப் பொதுக் காரியமானாலும் கங்காதரன் அதைத் தன் சொந்தக் காரியமாக ஏற்றுக் கொண்டு உழைப்பான். எந்தப் பெரிய மனிதர் ஊருக்கு விஜயம் செய்தாலும் அவருக்கு நடக்கும் பாராட்டுக் கூட்டம் கங்காதரனுடைய ஏற்பாடாகத்தான் இருக்கும். பாராட்டுக் கூட்டத்தில் போடப்படும் முதல் மாலை கங்காதரனுடையதாகத்தானிருக்கும். பிரபல ஆங்கில தினசரி ஒன்றில் ''ஆசிரியருக்குக் கடிதங்கள்'' என்ற பகுதியில் அனேகமாகத் தினந்தோறும் கங்காதரனுடைய கடிதம் பிரசுரமாகும். அந்தப் பகுதியில் எழுத அவனுக்கென்று ஏதாவது ஒரு விஷயம் காத்துக் கொண்டிருக்கும்.

எழுதுவதில் மட்டுமல்ல; சமயோசிதமாகப் பேசுவதிலும் கங்காதரனுக்கு இணை கங்காதரன்தான். சந்தர்ப்பத்துக்கு ஏற்ற சாதுர்யமான பேச்சு அவனுக்கு ஒரு புகழைத் தேடித் தந்திருந்தது.



ஒரு சமயம் கங்காதரன் ஒரு கூட்டத்தில் பேச நேர்ந்தது; மேடையில் ஏறினதும், ''கனவான்களே!'' என்று கணீரென்ற குரலில் ஆரம்பித்தான்.

கூட்டத்துக்குத் தலைமை தாங்கியவருக்குத் தம்மை மதியாமல் கங்காதரன் பேச ஆரம்பித்தது பிடிக்கவில்லை. உடனே அவர் ''தலைவர் அவர்களே, கனவான்களே!'' என்று முறைப்படி அழையுங்கள்'' என முகத்தைச் சுளித்தார்.

''மன்னிக்க வேண்டும். நான் தலைவரையும் கனவான்களில் ஒருவராக நினைத்து விட்டது பெரிய தவறுதான்!'' என்று மறு நிமிஷம் கங்காதரன் ஒரு போடு போட்டான். எழுந்தது கரகோஷம்! விழுந்தது தலைவர் முகம்!

மேடையில் பேசும்போது மட்டும்தான் கங்காதரன் புத்திசாலித்தனமாய்ப் பேசுவான் என்று நினைத்தால் அது மாபெரும் தவறு. வேறு யாராவது மேடையில் பேசும்போதுகூட அவன் புத்தி கூர்மை அவனைக் கைவிட்டதில்லை.

ஒரு சமயம் தேர்தல் பிரசாரக் கூட்டம் ஒன்று நடந்தது. அந்தத் தொகுதி அபேட்சகர் வெகுநேரம் தம்மைப் பற்றியே பேசி 'போர்' அடித்து விட்டார். கடைசியாக அந்த அபேட்சகர், ''இந்தத் தேர்தலில் நான் வெற்றி பெற வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்?''' என்று கூட்டத்தைப் பார்த்துக் கேட்டார்.

''உங்கள் ஸ்தானத்தில் வேறு ஒருவரை நிறுத்தி வைக்க வேண்டும்!'' என்ற பதில் கூட்டத்தின் முற்பகுதியிலிருந்து பளிச்சென்று வந்தது. அதைச் சொன்னவன் கங்காதரன் தான் என்று சொல்ல வேண்டுமா?

ஒரு நாள் கங்காதரன் தன் நண்பன் ஒருவனிடம் வகையாக மாட்டிக்கொண்டு விட்டான்.

''என்னடா பழி, நேற்று நடந்த இலக்கிய விழாவிலே, நீ பம்பாயிலிருந்து வாழ்த்துச் செய்தி அனுப்பியிருப்பதாகக் கூறி உன்னுடைய வாழ்த்துச் செய்தியைப் படித்தார்களே.....!'' என்றான் அந்த நண்பன்.

''ஏன் அதில் என்ன அதிசயத்தைக் கண்டு விட்டாய் நீ? பம்பாய்க்குப் போகாமல் உன் ஊருக்குள்ளே சுற்றி வருகிறேனே என்கிறாயா? நான் பம்பாயிலிருந்து என் வாழ்த்துச் செய்தியைத் தபாலில் அந்தச் சங்கத்துக்கு அனுப்ப ஏற்பாடு செய்திராவிட்டால் என் பெயரை அந்தக் கூட்டத்தில் விளம்பரப்படுத்துவார்களா?'' என்று கேட்டான்.

''நான் அதைச் சொல்லவில்லையடா! நேற்றையக் கூட்டத்தில் ஒரு மூலையில் உன்னை நான் பார்த்ததை நீ கவனிக்கவில்லையே!''

''ஆமாம். நான் கூட்டத்துக்குப் போயிருந்தேன். போகக் கூடாதா?''

''அது எப்படியப்பா? ஊருக்குப் போயிருப்பதாக வாழ்த்துச் செய்தியை அனுப்பி விட்டு நீயும் அங்கு வந்திருக்கிறாயே! கௌரவமாக வீட்டிலேயே இருந்திருக்கக் கூடாதோ!'' என்று சிரித்தான் நண்பன்.

கங்காதரனுக்குக் கோபம் வந்து விட்டது. ''இதில் என்னடா சிரிப்பதற்கு இருக்கிறது? கூட்டத்துக்கு வராமல் நான் கௌரவமாக வீட்டிலேயே இருந்தால் என் வாழ்த்துச் செய்தியைப் படித்தாரென்பது எப்படித் தெரியும்?'' நண்பன் பதில் பேசவில்லை!

# நீங்கள் ஆஸ்துமா-விஞல் அவஸ்தைப்பட்டால்

## இதை அவசியம் படியுங்கள்

இபஸோன் மாத்திரைகள் இந்தியாவிலே திரும்பவும் கிடைக்கின்றன. ஆஸ்துமா, ப்ராங்கைடிஸ், ப்ராங்கைடிஸினால் ஏற்படும் ஜலதோஷம், மார்புச் சளி, நெற காய்ச்சல், மற்றும் இது சம்பந்தப்பட்ட நோய்களினால் அவஸ்தைப்படுகிறவர்களுக்கு இபஸோன் மிகவும் உதவியளிக்கிறது. இபஸோன் எளிதில் உட்கொள்ளக்கூடியது. பயமின்றி உபயோகிக்கலாம். உடனடியாகச் சமனமூட்டி, நிச்சய பலனளிக்கிறது.

இபஸோன் தயாரிப்பில் சேர்க்கப்பட்டுள்ள வைத்திய முறையின் அம்சங்களின் இயல்புகள் சுருக்கமாக கீழே குறிப்பிடப்பட்டுள்ளன:

1. சுவாசக் குழாய்களின் தசைநார்களுக்கு ஏற்படும் வலிப்புக்கு சமனமூட்ட ஒரு சக்தி வாய்ந்த தன்மை இபஸோனுக்கு உண்டு. சுவாசாசயங்களில் மூச்சு எளிதில் செல்லவும், வெளியில் வரவும் இது உதவி செய்கிறது. அது மாத்திரமல்ல; ஆஸ்துமாவினால் ஏற்படும் உக்கிரத்திற்கு ஆசுவாசமளிக்கிறது.

2. சுவாசக் குழாய்களிலும் மற்றும் மார்பு உறுப்புகளிலும் உள்ள கபத்தை இபஸோன் மிருதுவாக்கி, திரவமாக இருமலில் எளிதாக வெளியே தள்ளிவிடுகிறது.

3. சுவாசாசயத்திலுள்ள இரத்தக் குழாய்களில் ஏற்படும் அடைப்பிற்கு இபஸோன் சமனமூட்டுகிறது.

4. இபஸோன் இருதயத்தின் கஷ்டங்களைக் குறைத்து. அதிகம் வேலை செய்யக் கூடிய அளவுக்கு சக்தியை அளிக்க உதவி செய்கிறது.

5. இபஸோன் ஆஸ்துமாவினால் நிச்சயமாக ஏற்படும் உக்கிரத்தைக் குறைத்து, எக்கத்தை நிவர்த்தி செய்து, மிருதுவாக நரம்புகளுக்கு சமனமளிக்கிறது. அது மட்டுமல்ல; ப்ராங்கைடிஸினால் ஏற்படும் அகோரமான இருமலைக்கூட சரிசெய்து விடுகிறது.

ஆஸ்துமா வெகு சீக்கிரம் உங்களைப் பீடிக்கிறது. ஆஸ்துமாவினால் நீங்கள் பீடிக்கப்படுவீர்கள் என சிறிய சந்தேகம் வந்தவுடன் ஒரு இபஸோன் மாத்திரையை உட்கொண்டு, அதிசீக்கிரத்திலே நிச்சயமாக நிவாரணமடையுங்கள்.

இபஸோனின் அரிய தன்மைகள், ஆஸ்துமாவினால் அவஸ்தைப்பட்டு இதை உபயோகித்து குணமடைந்தவர்களாலும், அதை சிபாரிசு செய்யும் டாக்டர்களாலும் நிரூபிக்கப்பட்டுள்ளன.

வழக்கத்தை ஊட்டிவிடும் மருந்துகள் எதுவும் இபஸோனில் சேர்க்கப்படவில்லை.

இபஸோன் 15, 45, 100 மாத்திரைகள் கொண்ட வசதியான பாக்கட்டுகளில் எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கின்றன.




# EPHAZONE

இபஸோன் தயாரித்து, விநியோகிப்பவர்கள்:

ஜே எல் மோரிஸன், சன் அன்டு ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்.

பம்பாய் — கல்கத்தா — மதராஸ் — டில்லி.



# மருதநாட்டு வீரன்

ஒரு தமிழ்நாட்டு வீரன்: தாய் நாட்டுக்குப் பணியாற்றப் படையில் சேர்ந்தான். மன்னன் மகளின் அன்புக்குப் பாத்திரமானான். அது பொறுக்கவில்லை படத்தின் வில்லனுக்கு. வீரன் மீது பொய்க் குற்றம் ஒன்றைப் புனைந்து நீதி மன்றத்தின் வாயிலாக மரண தண்டனை வாங்கித் தந்தான். வீரன் வேற்று நாட்டுக்கு மாற்றுடையில் சென்று அந்நாட்டு இளவரசரின் உதவியால் சூழ்ச்சி செய்து இளவரசிக்கு மாலையிட்டான். பிறகு இளவரசிக்கும் துன்பம்; வீரனுக்கும் துன்பம். படம் பார்ப்பவர்களின் துயரம் இந்தக் கட்டத்தில் யாருக்குத் தெரியப் போகிறது! தாமரைக் குளத்தில் நீந்திப்போன மாதிரியிருக்கிறது திரைக்கதையின் சிக்கல்.

பெற்ற மகளைச் சந்தேகிக்க தந்தை மரண தண்டனை விதிக்கிறார். அவளை வண்டியில் கட்டி இழுத்துச் செல்லும்போது மக்கள் அவளைக் கல்லால் அடித்துத் துன்புறுத்துகின்றனர்....வலிய உருக்கத்தை வரவழைத்திருக்கும் கொடுமையை என்னென்றுரைப்பது!

மருதநாட்டுவீரனாக, சிவாஜி கணேசன் வருகிறார்; அந்தப் பாத்திரத்துக்கு அவரைப் போட்டிருக்க வேண்டிய அவசியமே இல்லை. அவர் முயன்றுதான் நடித்திருக்கிறார். ஆனால் எடுபடவில்லை. காரணம், திரைக்கதை குப்பையும், கூளமுமாயிருப்பதுதான்.

குதிரையில் போகும்போது பாடித்தான் ஆக வேண்டுமா? பாட்டுக்காகக் குதிரையா, அல்லது குதிரைக்காகப் பாட்டா? ஒரு வேளை, பாட்டுப் பாடினால்தான் அந்தக் குதிரை ஓடுமோ என்னவோ!

சிறையிலிருந்த மருநாட்டு வீரனை அவன் நண்பன் விடுவிக்கும் காட்சி தமிழ்ப் படங்களில் வழக்கமாக அத்தகைய கட்டங்களில் வரும் பாணிக்குச் சற்றுப் புதுமையாக இருந்தது. சிறைக் காவலர்கள் முன் நாட்டியமாடி ஒரு மங்கை மயக்குவாள்; திறவுகோல் அவன் கைக்கு வந்து விடும். இல்லையானால், உணவில் மயக்க மருந்தைக் கலந்து சிறைக் காவலர்களை மயக்குவதும் உண்டு. ஆனால் இந்தப் படத்தில், விதவிதமான பலகார வகைகளைத் தின்னக் கொடுத்து ஏமாற்றுகிறான், கதாநாயகனின் நண்பன். பாவம், சிறைக்காவலர்கள் முழுப் பட்டினி போலும்! சம்பிரமமாக உட்கார்ந்து சாப்பிடுகிறார்கள்! சாப்பிடட்டும், சாப்பிடட்டும்! பதினெட்டாயிரம் அடிகளைச் சாப்பிட்டுவிட்ட படத்தில் காவலர்கள் சாப்பிடுவதற்குத் தானா அவகாசம் இல்லை!

இளவரசியாக வருபவர் ஜமுனா. ஆனால் மருதநாட்டு வீரனிடம் வாள் பயிற்சி பெற்றும், அவனைக் காதலித்தும், பிறகு தாய்மையை அடைந்து அதன் பரிசாகத் தண்டனை அடைந்தும், தப்பி ஓடியும்கூட அந்தப் பாத்திரம் மனத்தில் நிற்கவில்லையே! தப்பி ஓடி விடுகிறதே!

படத்தில் வரும் அலாவுத்தீன் மகாவுத்தீன், இக்ரம்கான், ஆஷா இவர்களெல்லாம் யார், திரைக்கதைக்கும் இவர்களுக்கும் என்ன சம்பந்தம் என்றெல்லாம் தயவு செய்து என்னைக் கேட்க வேண்டாம். அது படத் தயாரிப்பாளர்களுக்கே தெரியாதே!

ஹாஸ்ய நடிகர் ராமராவ் இந்தப் படத்தில் அசடு வழிகிறார். ''ஐயா, தெரியாதய்யா'' என்று கூறியே ''தெய்வப் பிறவி''யில் தம்மை எல்லோருக்கும் தெரியும்படி செய்துகொண்டவருக்கு இம்மாதிரி அர்த்தமற்ற பாத்திரங்களை ஏற்கக் கூடாதென்று தெரியவில்லையே !

''மருதநாட்டு வீரன்'' இனி வரப்போகும் வெறும் ராஜா ராணிப் படங்களில் கடைசிப் படமாக இருக்கட்டும் என்று தமிழன்னையைப் பிரார்த்திக்கிறேன் !

— காந்தன்



எந்நாளிலும் பீச்சஸ்

பாலைவனத்தில் சாப்பிடலாம்

அது வீணான யோசனையல்ல

மிட்லண்ட் இருக்கும்போது எங்கும், எச்சமயத்திலும் அற்புதமானது. தனிமையாகச் சாப்பிட்டால் சுவைமிகுந்தது பாலாடையோடு உண்டாலோ கேட்கவே வேண்டாம். ஐஸ் க்ரீமுடன் சாப்பிட்டால் ஆஹா! திவ்யமாக இருக்கும்.

# *Midland*

மிட்லண்ட் - சுவை மிகுந்த 28 வகைகள் பழங்களாகவும், மரக்கறிகளாகவும், ஜாம்களாகவும், ஜெலிகளாகவும், மற்றும் கெச்சப்களாகவும் கிடைக்கின்றன.




தயாரிப்பாளர்கள்: மிட்லண்ட் ஃப்ரூட் அன்டு வெஜிடபிள் ப்ராடக்ட்ஸ் (இந்தியா) மதுரா.

ஏகபோக விநியோகஸ்தர்கள்: கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்., பம்பாய்.

தென்னிந்தியாவுக்கு ஏஜெண்டுகள்: பாரி அண்டு கம்பெனி லிமிடெட்

# சபாஷ் மாப்பிள்ளே!

காந்தன்

ஏராளமான பொருள் இருந்தும் ஏழையாக வாழ வேண்டும் என்னும் ஆசையினால் தன் வாழ்க்கையே மாற்றிக் கொள்ளுகிறான் வாசு. கொட்டும் மழையில் வசந்தியின் அன்பு கிடைக்கிறது அவனுக்கு. பணக்காரரான தன் தகப்பனார் நிச்சயிக்க விரும்பிய வாலிபனுக்கு மாலையிட விரும்பாமல், வீட்டை விட்டு வெளியேறித் தன் உள்ளம் கவர்ந்த வாசுவைப் பதிவுத் திருமணம் செய்து கொள்கிறாள் வசந்தி. ஆபீஸ் பணத்தைப் பறி கொடுத்த வாசு சிறை சென்று, பிறகு உண்மை வெளியாகி விடுதலை யடைகிறான். கடைசியில் வாசு தன் மாமனார் வாயினால், "சபாஷ் மாப்பிள்ளே!" என்ற பட்டத்தைப் பெறுகிறான்.

கதையை ஒழுங்காகப் புனைய வில்லை. ஆகவே, ஓட்டை, உடைசல்களுக்குச் சிறிதும் பஞ்சமில்லை.

எம். ஜி. ஆருக்குப் புதுமையான பாகந்தான். ஒரே தமாஷாக நடித்திருக்கிறார். மாலினியுடன் காதல் கட்டங்களில் ரொம்ப ரொம்பத் தாராளமாகவும், நெருங்கியும் நடித்திருக்கிறார். அவரது வழக்கமான ராஜ உடையும், கிருதாக் கிராப்பும் மாறியிருப்பதே மாறுதல்தானே! அசல் காமெடியனாக மாறிச் சக்கைப் போடு போட்டு விட்டார். நடனம் ஆடுகிறார். கத்திச் சண்டை, குத்துச் சண்டை ஆகியவற்றுக்கும் இடம் அளித்திருக்கிறார். "சபாஷ் மாப்பிள்ளே"யில் எம். ஜி. ஆரின் முழுத் திறமையையும் கண்டு அவருக்கு ஒரு 'சபாஷ்' போடாமல் இருக்க முடிய வில்லை. இந்தப் படம் அவரைப் பொறுத்த வரையில் பூரண வெற்றிதான்!

"வாசு துன்பம், துயரம், மனக்கவலை இத்தனையும் ஏற்றான். தொல்லைகளைக் கண்டு சிரித்தான். அவன் லட்சியம் மேட்டுக் குடியினரின் மனத்தை மாற்றிச் சமதர்மத்தை ஏற்படுத்த வேண்டும் என்பது..." என்று பாட்டுப் புத்தகத்தில் பாத்திர விளக்கம் தரப்பட்டிருக்கிறது. ஆனால் படத்தில் அந்த விளக்கத்தை விளக்குப் போட்டு அல்லவா தேட வேண்டியிருக்கிறது!

"'சபாஷ் மாப்பிள்ளே'க்கும் முன்பு வந்த 'சபாஷ் மீனு'வுக்கும் என்ன வித்தியாசம்?" என்று என் நண்பர் கேட்டார்.

"ஒரே ஒரு வார்த்தைதான் வித்தியாசம்!" என்றேன் நான்.

படத்தில் அடங்கியிருக்கும் கதைப் பகுதிக்கும், சிரிப்புப் பகுதிக்கும் இடையில் அதிகமாக இடம் பெற்று நம்மை யெல்லாம் வேதனைக்குள்ளாக்குவது எம். ஆர். ராதாவின் ராக்ஷஸக் குரல்தான். அவரது அசட்டு அலறலில் ஒரு வார்த்தைகூட உருப்படியாகக் காதில் விழ வில்லையே! என்னத்துக்காக அவர் அப்படி அடித் தொண்டையிலிருந்து கத்தித் தொலைக்கிறாரோ! அதுதான் சிறந்த நடிப் பென்று எண்ணம் போலும்!

வசந்தியின் அத்தை மகனாக வரும் டி. கே. ராமச்சந்திரன் அழகாக நடிக்கிறார். வில்லனாகத் தோன்றி அனுபவப்பட்டவர் விளையாட்டுப் பிள்ளையாக அபாரமாக நடிக்கிறார்.

மாலினியின் நடிப்பில் விசேஷமாக எதுவும் கூறுவதற்கில்லை. நன்றாகத் தும்மல் போட்டு, நடனமாடிக் குதூகலமாகக் காதல் புரிகிறார்!

வி. ஆர். ராஜகோபால் எம். ஜி. ஆரின் தோழனாக வருகிறார். நடிப்பில் புதுமை யெதையும் காணோம்.

இந்தப் படத்தில் கௌரவ நடிகராக ரயில் வண்டியைக் கூறலாம். அதியற்புதமாக நடித்திருக்கிறது. படத்துக்கு நல்ல ஓட்டத்தையும் தந்திருக்கிறது. உண்மையிலேயே திரைக் கதை அங்காங்கு ரயிலில் ஏறித்தான் செல்லுகிறது. ரயில் வண்டி இல்லாவிட்டால் திரைக் கதை இளைறி ஒரேயடியாக உட்கார்ந்து போயிருக்கும்!

பாட்டு ஒன்றுகூட உருப்படியாக இல்லையே.

தக்ளியில் நூற்கும்போது நூல் உறுதியாக இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். அதே சமயத்தில் அதிக முறுக்கு ஏறிவிடாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும். அதிக முறுக்கு ஏறினால் நூல் அறுந்து விடும். அது போலத்தான் ஹாஸ்யமும். ஹாஸ்யம் அதிகமாகி விட்டால் வெறும் கேலிக் கூத்தாகி விடும். "சபாஷ் மாப்பிள்ளே"க்கு அந்தக் கதிதான் நேர்ந்திருக்கிறது!







# முன்னுரைக்கு ஒரு பின்னுரை

[நூலென்றால் அதில் ஒரு முன்னுரை இருக்கும். முன்னுரை இல்லாத புத்தகமும் ஒரு புத்தகமா? 'இன்னாருடைய முன்னுரையுடன்' என்று விளம்பரப்படுத்தினால்தான் சிறப்பு என்று கருதும் காலம் இது: இல்லை, இல்லை; மார்க்கெட் பிடிக்கும் காலம். இம்மாதிரி முன்னுரைகள் சிலவற்றையும் அந்த முன்னுரைக்குப் பின்னுரையாக அமைந்திருக்கும் சில இரகசியங்களையும் ஆராய்ந்ததால் ஏற்பட்ட விளைவுதான் இது.]

**ஆசிரியர் திரு...கேட்டுக் கொண்டதற்கிணங்க முன்னுரை இட்ட(?) முன் வந்தேன்.**

*கேட்டுக் கொண்டதற்கிணங்க......யார்? நூலாசிரியரா, நானா? மொத்தமாகவும் சில்லறையாகவும் முன்னுரை கிடைக்கும் என்று விளம்பரம் செய்யாத குறையாகக் காத்துக் கொண்டிருந்தது யார்?*

**இந்த நூலாசிரியரை எனக்குப் பல ஆண்டுகளாகத் தெரியும்.**

*அட சட்! போன வாரம்தானே யாரோ ஒருவர் அறிமுகப்படுத்தினார்! பெயர் கூட என்னவோ சொன்னாரே!*

**இவர் அளிக்கும் கருத்துரைகள் என்றால் எனக்கு உயிர்**

*எந்தக் கருத்துரையை நான் வாசித்தேன்? மனுஷன் முந்நூறு நானூறு பக்கங்கள் இறுக்கித் தள்ளியிருக்கிறான். 'இம்' எனும் முன்னர் இருநூறு கவியெழுதும் காளமேகத்துக்கு ஒரு படி உயர்ந்தவனாயிற்றே நான்! புத்தகத்தைப் பாராமலே முன்னுரை எழுதுவதில் எனக்கு உள்ள திறன் வேறு யாருக்குத்தான் உண்டு?*

**இந்நூல் இலக்கிய உலகிலே ஓர் ஈடு இணையற்ற சாதனை**

*ஆமாம், ஓர் ஈடு இணையற்ற சோதனைதான் படிக்கிறவர்களுக்கு. அப்படி என்ன சாதனையைச் சாதித்து விட்டான் என்று கேட்கிறேன். நான் இதற்கு முன்னுரை எழுதியதல்லவா சாதனை.*

**இவரது நடையே ஓர் அலாதி நடை.**

*நடையாம் நடை! என்ன நடையோ இது? கத்துக் கால் நடை!*

**தோண்டத் தோண்ட ஊற்றெடுக்கும் இவரது கற்பனை நம்மை வியப்பில் ஆழ்த்தி விடுகிறது.**

*கற்பனையா? காசுக்கு எத்தனை? எந்தக் கடையில் விற்கிறது என்று கேட்பான்போல் அல்லவா தோன்றுகிறது!*

**இயற்கையோடு இரண்டறக் கலந்து உறவாடுகிறார் ஆசிரியர்**

*அநுமார் சஞ்சீவி மலையையே பெயர்த்துக் கொண்டு வந்தது போலச் சென்னைப்பட்டணத்துக்குள்ளே சாத்தனூரை நிர்மாணிப்பவர். கூவத்தைக் காவிரியாக வர்ணிப்பவர். இயற்கையோடு இரண்டறக் கலந்து உறவாட மாட்டாரா?*

**இந்த நூல் அற்புதம்: பலே ஜோர்.**

*உஷ். ரகசியமாக இருக்கட்டும். இது ஒரே போர்; படு போர். வாசியுங்கள்; அல்லது தலையணையாக வைத்துக் கொண்டு தூங்குங்கள். எனக்கென்ன வந்தது? என்னைக் கேட்டால் தூங்குவதுதான் நல்லது என்று சொல்வேன். நான் செய்த நல்ல காரியத்தைத்தானே உங்களுக்கும் சொல்ல முடியும்?*

**இனி நீங்களே நூலை வாசித்துத் தெரிந்து கொள்ளுங்கள் நான் ஏன் குறுக்கே வந்து நிற்கிறேன்?**

*ஐயோ, இன்னும் எதையாவது எவனாவது எழுதிக் கொண்டு வந்து முன்னுரை, பின்னுரை என்று தொணதொணத்தால்... நல்லதாகப் போயிற்று. நூறு முன்னுரைகள் எழுதியதும் நமக்கு நாமே விழாக் கொண்டாடி 'முன்னுரை மன்னர்' என்று பட்டமும் சூட்டிக் கொண்டு விடலாம். அப்போது நூற்றாண்டு விழா மலர் ஏதாவது போட்டால் அதற்கு யாரிடம் முன்னுரை கேட்பது?...சே! பிறரிடம் போய்க் கையைப் பிசைவானேன்! அதையும் நாமே எழுதிப் போட்டுக் கொண்டால் போயிற்று!*



— கமலா தோதாத்திரி

## கடும் உஷ்ணகாலத்தில் மிகவும் இதமளிப்பது...

# பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்




**புத்துணர்ச்சியளிக்கக்கூடியது. வியர்வையை உறிஞ்சக் கூடியது. லேசான வாசனையுள்ளது**

பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைக்கும்! காலை ஸ்நானத்திற்குப் பிறகு பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உங்கள் உடம்பின் மேல் தாராளமாகத் தூவிக்கொள்ளுங்கள். கோடைகாலத்தில் நாள் முழுவதும் உங்களுக்கு இதமும் நறுமணமும் அளிக்கும்!

நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் விளங்க எப்பொழுதும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரையே உபயோகியுங்கள்.

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்பொரேடட்*

( வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ.வில் இணைக்கப் பெற்றது )




"நாவல் பிறக்கிறது" வரிசைக்குத் தங்கள் அநுபவங்களையும் எழுதி அனுப்பக் கோருகிறோம் என்று கல்வி ஆசிரியரிடமிருந்து வந்த கடிதத்தைக் கண்டதும் நான் திகைத்து நின்றேன். நாவல்கள் எழுதப் பரந்த உலகில் பழகும் அநுபவம் வேண்டும் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். பெண்களாகிய எங்களுக்கோ, இந்தப் பரந்த உலகம் அநேகமாக வீடுகளும் குடும்ப வாழ்வும் தான். நாவல் எழுதும் முத்திரையைப் போட்டுக் கொண்ட பிறகு. இந்தப் பரந்த உலகில் முக்கால்வாசிப் பேரும் ஏதோ பயங்கரப் பிராணியைப் பார்ப்பதுபோல், நம்மை ஒதுக்கமாக நின்று நோக்க ஆரம்பித்து விடும்போது அந்தச் சங்கட நிலையை எப்படி விவரிப்பது? 'நாம் எதுவும் நெருங்கிப் பேசக்கூடாது. கதையில் வந்து விடுவோம்' என்று ஒதுங்குவது போதாதென்று. "அந்தக் கதையில்...பாத்திரம் யார் தெரியுமா?" என்று நாம் படைத்த பாத்திரங்களின் சாயை கொண்ட உண்மைப் பேர்வழிகளையும், பாத்திரங்களையும் ஒட்டுப் போட்டுப் பேசத் தொடங்கினால் நம் நிலைமை எக்கச்சக்கமாகிவிடும். நாம் எப்படிப் பாத்திரங்களை உருவாக்கி, கதைகளைப் புனைகிறோம் என்பதைப் படு இரகசியங்களாக வைத்துக் கொண்டிருக்கும்போதே, நிலைமை இப்படி இருக்கிறது. ஏதோ ஒரு மாதிரியாகக் காலத்தை ஓட்டிக்கொண்டு வருகிறோம். இந்த இரகசியங்களையெல்லாம் இந்தக் கல்வி ஆசிரியர் இப்போது பல பேர்கள் முன்னிலையில் டமாரமடிக்கச் சொல்கிறாரே என்று தான் விழித்தேன்.

பத்து ஆண்டுகளுக்கு முன் நான் ஆசிரியை பர்ல் பக்கின் "பாவிலியன் ஆஃப்விமன்" என்ற நவீனத்தைப் படித்தேன். நாவலின் தலைப்பைக் கண்டதுமே நாமும் இதுபோன்ற தலைப்புக்குரியதாக ஏன் ஒரு நாவல் எழுதக் கூடாது என்ற எண்ணம் தோன்றியது. நாம் காணும் பெண்ணுலகில் எத்தனை எத்தனை வண்ணங்கள்! எத்தனை எத்தனை சாயல்கள்! எத்தனை ரகங்கள்! படித்தவர், மெருகடைந்தவர், கிராமத்தில் வாழ்பவர், அறியாமையும் அகங்காரமும் இருந்தாலும் தாய்மையின் மென்மை ஒளிருபவர், இரண்டாம் தாரக்காரர், வாழ்வில் தாம் ஆசைப்பட்டது நிறைவேறாததால் ஒளி குன்றியவர், விதி சதி செய்து விட்டதால் கசந்துபோனவர், முற்காலத்தவர், புதுமை எண்ணங்களுடன் பழமையைத் தகர்க்க எதிர்நீச்சுப் போடுபவர், புதுமையை ஏற்க முரண்டும் உள்ளத்தவர் என்றெல்லாம் எத்தனைஎத்தனையோ! இவர்கள் அனைவரையும் ஒரு கதைப் பின்னலில் மோதவிட்டால்! பல்வேறு வண்ணங்களையும் குணங்களையும், தன்மைகளையும் உருவாக்கி ஓர் எழில் மிக்க மலர்க் குவியலாக்கினால்! இந்த எண்ணம் அப்படியே மூழ்காமலே உள்ளத்திலே இருந்தது.

ஒரு கல்யாண வைபவம். சித்திரை வெய்யில். சிறு கூடம். மாங்கல்யதாரணம் ஆகும் சமயம். ஒரே கசகசப்பு. வியர்வை, நெருக்கடி, இரைச்சல், கெட்டிமேளம், பாட்டு, மந்திரகோஷங்கள்.

"தூக்கு! தூக்கு! பிடி, பிடி...எப்ப பார், எந்தக் கல்யாணத்திலும் இது சகஜம்...."

"பூஞ்சை உடம்பு." "தண்ணீர் கொண்டாப்பா, விசிறுங்கள்" என்று பல குரல்கள் கேட்டன. பரபரப்பு வந்த பக்கம் நானும் எட்டிப் பார்த்தேன். ஒரு பெண்ணை மயங்கிய நிலையில் இருவர் பிடித்துத் தூக்கிக் கொண்டு அறைப் பக்கம் சென்றனர். இளம் பெண். செந்தாழை நிறம். பின்னல் சாட்டை போல் தரையில் உராயத் தொடங்கியது. "ஹிஸ்டீரியா" என்றாள் ஓர் அம்மாள்.

"ஆமாம். இந்தக் காலத்தில் இது சர்வ சகஜமாகிப் போச்சு. முன்னெல்லாமானால் பேய் பிசாசு, பில்லி சூனியம் என்பார்கள். இப்ப அதற்குப் புதுப் பேர் வைத்திருக்கிறார்கள்" என்றாள் இன்னொரு அம்மாள்.

"இது ஒன்றும் இப்பல்லாம் பயமில்லை. அநேக இடங்களில் கல்யாணமானால் சரியாகிப் போகிறது. பெண் யார்? கல்யாணப் பிள்ளைக்குத் தங்

கையா?'' என்று அந்த அம்மாள் எழுந்து பார்க்க நகர்ந்தாள்.

இந்தச் சம்பவம் என் மனசில் நிரந்தரமாகப் பதிந்தது. அது மட்டுமில்லை. இந்தக் காலத்தில் இது சர்வசகஜமாகப் போச்சு. ஏன்? வாழ்க்கையின் நெருக்கடி, இருபாலாருக்கும் உடையதுதானே? பெண்களுக்கு மட்டும் இவ்வித மனக் கோளாறுகள் அதிகமாக வருவானேன்? ஏன்? ஏன்?

இந்த ஏன் என்ற கேள்வி என்னை அன்றிலிருந்து குடைந்து தள்ள ஆரம்பித்தது. அது என் சிந்தையை எங்கெல்லாமோ இட்டுச் செல்லத் தொடங்கியது. என் எண்ணங்களுக்குச் சாதகமாக ஓட்டம் கொடுக்க, அப்போது, பூவிருந்தவல்லியில் உளவியல் துறை அறிஞராக எனக்கு உளவியல் சம்பந்தமாக உரையாடவும், புத்தகங்கள் தந்து உதவவும் அரிய நண்பர் ஒருவர் கிடைத்தார். கொஞ்சம் உளவியலில் நுழைய ஆரம்பித்தபின், என் கேள்வி, பல கிளைகளிலும் பிறக்கத் தொடங்கியது. ஒரு குடும்பத்திலே, ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு விதமாக இருக்கிறாளே ஏன்? தற்புகழ்ச்சி, அடக்கியாளும் குணம் இவையெல்லாம் எப்படிப் பிறக்கின்றன? மணிக்கணக்காகக் கண்ணாடி முன்நின்று அலங்காரம் செய்யும் பதினாறு வயசுப் பெண்ணுக்கும் குடும்ப நெருக்கடியிலும் மாமியார் பிடுங்கலிலும் சிடுசிடுக்கும் அம்மாவுக்கும் ஓயாமல் ஏன் யுத்தம் உண்டாக வேண்டும்? வாசலில் கட்டுப் புத்தகங்களையும் மார்போடு அழுக்கிக் கொண்டு முதுகு கூன நடக்கும் பெண்கள் ஏன் அவ்விதம் கூனி விடுகிறார்கள்? இது போன்ற எண்ணற்ற கேள்விகள். நான் காணும் பெண்களை, பழகுபவர்களை, ஏன், என்னையே கூடத்தான் எனக்குப் பார்க்க, புதுப்பார்வை வந்து விட்டாற் போலிருந்தது. ஒவ்வொரு வண்ணத்துக்கும் மூலப் பொருளை ஆராயத் துடித்தது, இந்தப் பார்வையின் கூர்மை. ஒவ்வொரு தன்மைக்கும் ஆதி காரணத்தைத் துருவிப் பார்க்கத் தலைப்பட்டது இந்த நோக்கு. இந்தகைய நோக்கினால் புரிந்த உண்மைகளைக் கொண்டு, நான் வாழ்வில் கண்டிருக்கும் 'பிரத்தியட்ச மாதிரி'களை அடிப்படையாக வைத்துக்கொண்டு கதாபாத்திரங்களையும், ஏற்பக் கதையையும் ஜோடிக்க முனைந்தேன். பெரும்பாலும் பல குடும்பப் பெண்களிடையேயும், சுதந்திரமாக வளரும் தன்னம்பிக்கைக்குப் பங்கம் ஏற்படுவதாக எனக்குப் புலப்பட்டது.



பெண்களின் பெருமைகளைப் பற்றிக் காவியங்கள் வருணிக்கின்றன; வரலாறுகள் கூறுகின்றன. இந்தக் காலச் சினிமா, தொடர்கதைகள் சுருக, பெண்களின் பெருமை, மங்கையர் மகிமை தான். ஆனால், உண்மையாகவே பெண் உயர்ந்தவளாகக் குடும்பங்களில் கருதப்படுகிறாளா?

''இதுவும் பெண்கட்டையாகத்தான் பிறந்து தொலைத்திருக்கிறது!'' என்று தான் மூன்றுவதாகப் பிறக்கும் பெண்ணுக்கு ஒரு குடும்பத்தில் கிடைக்கும் வரவேற்பு. தாழ்வு மனப்பான்மைக்கு வித்தை அவர்களறியாமலேயே பெண்களின் உள்ளங்களில் பெரும்பாலான குடும்பங்களில் ஊன்றிவிடுகிறார்கள். இத்தாழ்வு மனப்பான்மை ஒரு மனிதனின் உள்ளத்தில் புகுந்தால், மனவளர்ச்சியை அது எப்படிப் பாதிக்கிறது என்பது பெரியவிஷயம். இயல்பாகவே ஊறிவிடும் இந்தத் தாழ்வு மனப்பான்மை தகுந்த சூழ்நிலை கிடைத்தால், பயங்கரமான நோயாகவே வளர வழி தேடிக்கொள்கிறது. அன்பும் அரவணைப்பும் உள்ள பெற்றோர்களிடையோ, அன்றி உற்றவர்களிடையோ நல்லறிவும் பண்பும் பெற்றுச் சுதந்திரமாக வளரும் வாய்ப்பிருந்தால் தன்னம்பிக்கையுடன் பெண் ஒளிருகிறாள். தன் எண்ணங்களுக்கோ, கனவுகளுக்கோ, செயல்களுக்கோ எதிராக என்ன நேர்ந்தாலும் கலங்கி விடாமல் செல்லும் துணிவாற்றலைப் பெறுகிறாள்.

''ஐயோ, இந்தப் பெண் வளர்ந்து நிற்கிறாளே?'' என்று பெண்களின் கய வளர்ச்சியைப் பயங்கரமான கட்டமாக எண்ணும் தாய்மாரும் மூதியோரும், நம் குடும்பங்களிடையே இருக்கிறார்கள். பருவத்தில் காணும் அசாதாரணமான வளர்ச்சியும் மனக் கிளர்ச்சியும்

பெற்றேரோ, பெரியோரோ அறிந்து கொண்டு சிறுவர் சிறுமியருக்கு நல் வழிகாட்டிகளாக நின்ருலே சிக்கலாகாமல் நன்மலர்ச்சி பெறக் கூடும். வாழ்வின் நெருக்கடி விநாடிக்கு விநாடி ஏறும் இந்தக் காலத்திலே, எத்தனை குடும்பங்களில் பெற்ருேர் தங்கள் மக்களைப் புரிந்து கொள்கிருர்கள்? எத்தனை குடும்பங்களில் குழந்தைகளின் மன வளர்ச்சியைப் பற்றி நினைக்கிருர்கள்? சமுதாயமாகிற பெருஞ் செடியிலே மலர்களாக விளங்கப் போகும் பெண்கள், உரிய வகையில் ஒளிர எத்தனை குடும்பங்களில் நல்வாய்ப்புக்கள் இருக்கின்றன?




மேற்கூறிய சிந்தனைகளில் ஊறி ஊறி நான் சித்திராவையும் நிர்மலாவையும், மாலாவையும், மங்களத்தையும், சூடாவையும், கல்யாணியையும் உருவாக்கினேன். பாத்திரங்களை உருவாக்கிவிட்டால், பிறகு ஆசிரியரே அவர்களை இயக்கத் தேவையில்லை என்பது என் அனுபவம். பல சமயங்களிலும் நான் போட்ட ''பிளான்'' ஒருபுறமிருக்கும். நான் ஜோடித்த நிகழ்ச்சிகளில் புகாமல் என் கோட்டை வரையறையை மீறி நான் உருவாக்கிய பாத்திரங்கள் 'அடங்காதவர்'களாகவே தங்கள் போக்கில் நடந்து கொண்டு என்கதைக்கு அப்பால் போய் விடுவார்கள்! நாம் படைக்கும் பாத்திரங்கள் நம்மையே ஆட்டி வைக்கும் அநுபவமும் ரசமானதுதான்! இதை ஆராயப் புகுவதும் ரசமானதுதான்!

வாழ்க்கையேதான் கலைகளில் பிரதிபலிக்கிறதென்ருலும், வாழ்க்கையில் காணும் பிரச்னைகளுக்கு ஒரு வழி தேடும் முயற்சியையேனும் கலைகள் தோற்றுவிக்க வேண்டும் என்பது என் கருத்து. வாழ்க்கையில் காணும் மக்களை கதைகளில் வந்தாலும் காணும் மாதிரிகளின் வண்ணங்களைக் கொண்டே கற்பனையுடன் கலைஞன் சித்திரத்தைத் தீட்டினாலும் 'வாழ்க்கையில் இவ்வாறு நடந்தால் பிரச்னைக்கு வழி தேடலாம்' என்று காணும் கனவைக் கலைஞன் தன் படைப்பில் விளக்க முயல்வது சிறந்தது என்பது என் அபிப்பிராயம். இந்த எண்ணங்களுடன் தான் சித்திராவையும் நிர்மலாவையும் படைத்து விட்டு, கோபியையும் மாதவனையும் உலவ விட்டேன்.

நான் என் முயற்சியில் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிறேன் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்வதற்கில்லை. ஆனல் எனக்குத் தோல்வியில்லை என்பதை வாசகர்களின் கடிதங்கள் உணர்த்தி யிருக்கின்றன.

கற்பனை கலவாதது எதையும் நான் இதுவரை (கடிதங்கள் தவிர) எழுதியதில்லை. கல்கி ஆசிரியரின் கடிதத்துக்காக 'மலர்கள்' பிறந்த கதையை அம்பலப்படுத்தி விட்டேன். இது காரணமாக, என்னுடைய 'பரந்த உலகில்' என்ன அநுபவம் நேரப் போகிறதோ?

---

அட்டைப்பட விளக்கம்

## காலக் கடலுக்கொரு பாலம்

தமிழில் 'மறுமலர்ச்சி யுகம்' என்ற ஒரு புது யுகத்துக்குத் தலைவராக நிற்கிறவர் கவி பாரதியார். அந்தக் கவியரசருடைய விழாவை இந்த வாரம் தமிழ்த்திரு நாடெங்கும் கொண்டாடி மகிழ்வதற்கு இருக்கிருர்கள். வங்காளிகளுக்குத் தாகூரைப் போலத் தமிழர்களுக்குப் பாரதியார் மகாகவி. செமமுற வேண்டுமென்று தமிழ் மொழிக்கும், நாட்டுக்கும், புதிய யுகத்தைப் படைத்துக் கொடுத்த கவியைப் போற்றுவதற்கு 'மகாகவி' என்பதைவிட வேறு சிறந்த பதம் எத்தனை இருந்தாலும் அத்தனையையும் சொல்லிப் போற்றலாம். கவியரசராகிய பாரதியார் 'பாரதமாதா நவரத்தின மாலை' என்ற பெயரில் பாரத தேசமாகிய பேரன்னைக்கு அஞ்சலி செலுத்துவதாகப் பாடல்கள் சில பாடியுள்ளார். அவற்றுள் பாரத மாதாவின் திருக்கோலத்தை வர்ணிக்கும் பகுதியில்,

> ''நீலக் கடலொத்த கோலத்தினுள்
> மூன்று நேத்திரத்தாள்
> காலக் கடலுக்கோர் பாலமிட்டாள்
> அன்னை காற்படினே......''

என்று பாரதமாதாவுக்குப் பாமாலையும் மணிமாலையும் சேர்த்துச் சூட்டுகிருர். அந்தக் காட்சியை நமது ஓவியர் விஜயா இவ்வாற அட்டைச் சித்திரமாக வரைந்தளித்திருக்கிருர்.

# ஊ! இதோ என் க்ளாக்ஸோ

எல்லாக் குழந்தைகளும் க்ளாக்ஸோவை விரும்பி அருந்தி நன்கு வளருகின்றன. பிரத்தியேகமாக, தேர்ந்தெடுக்கப்பட்ட பாலிலிருந்து தயாரிக்கப்பட்டு, இரும்புச் சத்தும், வைட்டமின் 'டி' யும் சேர்க்கப்பட்டு உள்ளதால், க்ளாக்ஸோவில், சிறந்த தாய்ப் பாலில் உள்ள எல்லா நல்ல அம்சங்களும் இருக்கின்றன. இலவசமாக க்ளாக்ஸோ குழந்தைப் புத்தகம் பெற விரும்புவோர், 50 ந. பைசா தபால் வில்லைகளை (தபால் செலவிற்காக) கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்புங்கள்:

க்ளாக்ஸோ
உட்ஸ் ரோடு,
மதராஸ்-2

**Glaxo**

க்ளாக்ஸோ – குழந்தைகளுக்கான
மிகச் சரியான பாலுணவு

க்ளாக்ஸோ லாபரெட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிட்.

பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . புதுடில்லி





# கண்ணால் கண்டான்!

முருகு சுந்தரம்

பனிமலையில் பராசக்தி முன்ன மர்ந்து
பாரதியும் கவிபாடிக் கொண்டிருந்தான்
இனிதான தமிழ்நாட்டின் எண்ணம் வந்து
எழுப்பியது சிந்தனையைக் கவிஞன் சொன்னான்.
"பணிகின்ற அடியார்க்கு இன்ப வாழ்வைப்
படைத்தளிக்கும் என்அன்னாய்! காளித் தாயே!
தணியாத காதலுற்றேன் தமிழர் நாட்டைத்
தற்சமயம் காணுதற்கு, அருள்செய் வாயே!

எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்ற
எக்களிப்பால் வாழ்கின்ற வாழ்வை, ஏழை
செல்வரென்று இல்லாமல் அடிமை மாறிச்
சிறப்பாக வாழ்கின்ற வாழ்வை, எங்கும்
கல்லாமை பிணித்துன்பம் இல்லா தாகிக்
களிப்போடு வாழ்கின்ற வாழ்வைச் சென்று
பல்லாறு பாய்கின்ற தமிழர் நாட்டில்
பார்த்துவிட்டுத் திரும்புகிறேன்" என்று
சொன்னான்.

கயிலாயம் விட்டிறங்கி வந்தான்; சென்னைக்
கடற்கரையில் கால்வைத்தான் கவிஞர்
கோமான்;

வெயிலாகக் காய்கின்ற மணற்ப ரப்பில்
வீழ்ந்திறந்து கிடந்தானோர் ஏழை மன்னன்!
அயலாக அமைந்திருந்த பாதை யோரம்
ஆந்தைபோல் பொந்தினிலே வாழ்ந்தார்
மக்கள்!
பயிலாத இளங்குரலில் பிச்சை கேட்டுப்
பாடிநின்றார் இளஞ்சிறுவர்; கண்ணால்
கண்டான்.

துடிக்கின்ற வெடிப்பேச்சால் திட்டந் தந்து
சொல்மாரி பொழிந்திட்டார் கட்சிக் காரர்!
வடிக்கின்ற வியர்வைநீர் ஆறாய் ஓட
வண்டிகளை இழுத்திட்டார் ஏழை மக்கள்!
படிக்கின்ற நீதிகளைக் காற்றில் விட்டுப்
பந்தயத்தில் பொருளிழந்தார் செல்வர்; கூடிக்
கடிக்கின்ற கொசுத்துன்பம் நீங்கி, ஏழை
கண்ணயரக் குடிசைக்கு வழியைக் காணோம்!

ஆறாகக் கண்ணீரைப் பெருக்கிக் கொண்டு
அயராத உள்ளத்தை உடைத்துக் கொண்டு
நேராகக் கயிலைக்குக் கவிஞன் சென்றான்
நெடுமரம்போல் பராசக்தி காலில் வீழ்ந்தான்.
சோறாக விழலுக்கு நீரைப் பாய்ச்சிச்
செயலற்றுப் போய்விட்டேன் என்றான்;
அன்னை
ஆறாத அவன்புண்ணை அன்பால் நீவி
அணைத்திட்டாள்; அவளணைப்பில் அமைதி
கண்டான்.

---

*('பாரதி மீண்டும் சென்னையை வந்து பார்த்தால்...' என்று கற்பனை செய்கிறார் இதை எழுதியவர்.)*

# வெள்ளிப் பனி மலை வீதியிலே

## 5. வழியில் வந்த வருத்தம்

**என்.வி.அனந்தராமன்**

**ம**றுநாள் பொழுது விடிந்தவுடன் சூடாகச் சப்பாத்தியும், தேநீரும் தயாரித்துச் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு ஆறு மைல்களுக்கு அப்பாலுள்ள மற்றொரு குகைக்குப் புறப்பட்டோம். போகும் வழியில் மலையைச் சரிவு சரிவாகத் துருவிப் பயிர் செய்திருந்த காட்சியும் இழுமென ஒலித்துப் பாயும் அருவிகளின் தோற்றமும், வழிநடைக்கு இன்பமும், உற்சாகமும் தந்தன. நெடுந்தொலைவு நடந்த பின் அரசாங்கத்தார் அமைத்திருந்த யாத்திரிகர் விடுதி ஒன்று தென்பட்டது. 'இங்கே தங்கலாம் போலிருக்கிறதே'- என்ற ஆசையுடன் அந்த விடுதிக்குள் சென்ற நாங்கள் கால் வைப்பதற்கும் இடமின்றி அங்கு நிறைந்திருந்த ஆட்டுச் சாணத்தையும் மாட்டுச் சாணத்தையும் பார்த்து விட்டுத் திரும்பினோம். அங்கே எங்களுக்கு முன் தங்கியிருந்த யாத்திரிகர்கள் யார் என்பதைக் குவிந்து கிடந்த சாணம் காட்டிவிட்டபின் நாங்கள் தங்க முடியுமோ? கால்நடையாகச் சென்று கொண்டிருந்தாலும் 'கால்நடை'களாகி விட விருப்பமில்லாததால் தொடர்ந்து நடந்தோம். 'பருதியார்'என்ற குகை வந்தது. அந்தக் குகைக்குள் நுழையப் போகிற வழி எல்லாம் மேலே பட்டால் அரிப்பெடுக்கக் கூடிய செந்தட்டிச் செடிகள் அடர்ந்திருந்தன. உடம்பை ஒடுக்கிக் குறுக்கிக் கொண்டு அந்தச் செடி மேலே பட்டு விடாமல் குறுகலான வழியில் நடந்து குகைக்குள்ளே போக எங்கள் சாமர்த்தியத்தை எல்லாம் செலவழித்தோம். குகைக்குள் போய்ப் பார்த்தால் பெரிய பெரிய கொசுக்கள் எங்களுக்கு வரவேற்பிதழ் வாசிப்பது போல் பறந்து பாடின. முன்பு வழியில் தங்கிய மாட்டுக் கொட்டத்துக் கொசுக்களை விட இவை மிகவும் பெரிதா யிருந்தன. கயிலாய மலையிலிருக்கிற முனிவர்களுக்குத் தான் ஆற்றல் அதிகமென நினைத்துக் கொண்டிருந்த எங்களுக்குத் தம்முடைய ஆற்றலையும் நிரூபித்தன இந்தக் கொசுக்கள். அன்றிரவு இந்தக் குகையில்தான் 'தூங்காமல் தூங்கி' வேதனைப்பட்டோம்.

அடுத்த நாள் சூரியோதயத்துக்கு முன்பே புறப்பட்டு 12 மைல்களுக்கு அப்பால் உள்ள 'மார்த்தோலி'க்குப் பயணமானோம். மார்த்தோலிக்குப் போகிற பாதை கௌரி கங்கைக் கரையைச் சார்ந்தே போகிறது. சிறிது தூரத்துக்கு அப்பால் வழியின் மேல் மெல்ல மெல்லப் பனி உறைந்திருப்பது தெரிந்தது. பனி உறைகளைப் பார்த்தவுடன் ஏற்கெனவே அவற்றைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த பயங்கரங்களெல்லாம் நினைவு வந்து வயிற்றைக் கலக்கின. உள்ளே பனி உருகிப் பொந்து வைத்து மேலே பார்ப்பதற்கு மட்டும் பாறை போலத் தோன்றும் இந்தப் பனி உறைவுகளில் நடக்கும்போதே 'சுபீரென்று'- கீழிறக்கி ஆளைப் பனிச் சமாதி வைத்து விடுவது உண்டாம். பனி உறைவுகளில் நடக்கும் போது பயன்படத்தக்க பூட்சுகளையும், ஊன்றுகோலையும் நாங்கள் பெற்றிருந்தோம். சில இடங்களில் முழங்காலளவு கால்கள் கீழே அழுந்தி இறங்கின. இப்பனி உறைவுகளின் மேலே நடக்கும்போது தலை கிறுக்கி மயக்கம் ஏற்படுகிறது. கண் பார்வையும் மங்குகிறது. சுவாசிப்பது கடுமையாக இருக்கிறது. இந்தப் பனி நடைப் பயணத்தில் சோர்வு நீக்கிக் கொள்ளச் சில மருந்துகள் உண்டு. அவற்றைத் தாராளமாக உபயோகித்தோம். உப்பிட்டு உலர்த்திய மாங்காய் வற்றல், மிளகு ஆகியவற்றை வாயில் அடக்கிக் கொண்டோம். மேலே கூறிய பனிப் பயண மருத்துவமும் இதுதான். இப்படி மூன்று மைல் நடந்த பின்னர் 'லஸ்பாகட்'- என்னும் கிளை நதி கௌரி கங்கையில் கலக்குமிடத்துக்கு வந்து சேர்ந்தோம். இந்த வட்டாரத்தில் கணக்கில்லாத சிற்றருவிகளும், பேரருவிகளும், மலைப்பகுதிகளில் இருந்து வெள்ளி உருக்கு ஒழுகுவது போல் கொட்டுவதைக் கண் பார்வைக்குத் தெரியும் இடங்களில் எல்லாம் காணலாம். அருவிகளின் நுண்ணிய நீர்த்துளிகள் பன்னீர் தெளிப்பது போல நடந்து போகிறவர்கள்மேல் எல்லாம் தெறிக்கும் போது அவை நம் மேலே படுவதே ஓர் இன்ப அநுபவமாகும்.

வழியில் 'ரில்கோட்' என்னும் கிராமத்தில் தங்கி மாலை ஐந்து மணி அளவில் மார்த்தோலி போய்ச் சேர்ந்தோம். அநேக இடங்களில் செங்குத்தான மலைகளைக் கடக்கும்போது ஆயாசம் ஏற்பட்டது. மேலே மேலே உயரத்துக்குச் செல்லும்போது மூச்சுத் திணறியது. கடல் மட்டத்துக்கு மேல் 12,000 அடி உயரத்தில் இருந்தோம் நாங்கள். காற்றும் அதிகம். குளிரும் தேள் கொட்டுகிறமாதிரி உறைக்கிற கடுங் குளிர். மலை உச்சியிலிருந்து கீழே நான்கு திசைகளிலும் பார்ப்பதற்கே பயமாக இருந்தது. கீழே இருந்தபோது அவ்வளவு உயரத்துக்குப் போக வேண்டுமே என்று பயமாக இருந்தது. மேலே வந்த பின் இவ்வளவு உயரத்துக்கா வந்திருக்கிறோம் என்று பயமாக இருந்தது. மேலிருந்து பார்த்தால் கீழே இருக்கிற ஆட்கள் கொசுக் கூட்டம் நகருவது போலச் சிறிதாகத் தோன்றினார்கள்.

மார்த்தோலியைச் சுற்றிலும் புல் அடர்ந்த சமவெளி காணப்படுகிறது. கடுமையான குளிர்ப்பிரதேசமாகிய இந்த ஊரில் பற்கள் கிட்டித்துப் போய்விடுகின்றன. இங்கே தங்குவதற்கென்று தனியாக எந்த இடமும் கிடைக்



யாக் சவாரி

காததால் பள்ளிக்கூடம் ஒன்றின் மாடியில் தங்கினோம். மறுநாள் காலை பதினாறு மைல்களுக்கு அப்பாலுள்ள 'மிலம்' என்ற ஊருக்குப் புறப்பட்டோம். மர்த்தோலிவாசிகள் எங்களை அன்போடும் பிரிய மனமின்றியும் வழியனுப்பினார்கள். கிராம எல்லையைக் கடந்ததும் ஏறத்தாழ இரண்டு மைலளவு ஒரே இறக்கம். மேலே ஏறுவது மட்டுமின்றிக் கீழே இறங்குவதும் மிக மிகக் கடினமானது என்கிற நிதரிசன உண்மை இங்கேதான் தெளிவாகத் தெரிந்தது. பல இடங்களில் வழுக்கியும், தடுமாறியும் நடந்தோம். இளைப்பாறி மெல்ல மெல்லச் செல்ல வேண்டியிருந்தது. ஐந்து மைல்களைக் கடந்ததும் இவ்வளவு சிரமப்பட்டது வீணுக்கில்லை என்பதுபோல் மிக அழகான தரிசனம் ஒன்று கிடைத்தது. 'நந்தா தேவி'யின் கிழக்குப் பக்கத்து மலைச் சிகரம் அற்புதமாகத் தெரிந்தது. அப்போது தான் பிறந்து தெரியும் புதிய சௌந்தரியம் போல் எங்களுக்குக் காட்சி யளித்தது அந்தச் சிகரம். சற்றும் மேகங்களால் மூடப்படாமல் கிழக்குப் பக்கத்தில் பனி மூடிய மாபெரும் வெண் தாமரைப் பூப்போலத் தெரியும் அதைப் பார்த்துப் புத்துணர்ச்சி பெற்றோம். இதுவரை அநேகர் முயற்சி செய்தும், 'நந்தா தேவி' சிகரத்தை அடையமுடியவில்லை என்று கேள்வி யுற்றிருந்தோம். அச்சிகரம் தேவியின் அம்சமென்றும், திரிசூலசிகரம் இறைவனின் அமைப்பென்றும் கருதி மதிக்கப் படுகிறது. காலை இளம்பரிதி வீசும் கதிர் ஒளியில் நந்தா தேவி காட்டும் காட்சி அழகைக் காணக் கண் கோடி வேண்டும். சிந்திக்க மனம் கோடி வேண்டும். நந்தா தேவி தரிசனம் அளித்த ஊக்கத்துடனே அன்று மாலையே மிலம் போய்ச் சேர்ந்து விட்டோம். மிலத்திலிருந்து மூன்று மைல் தொலைவில் கௌரி கங்கையின் உற்பத்தி ஸ்தானம் இருக்கிறது. மிலத்தில் இருக்கும் போது கௌரி கங்கைக் கரையில் அலுப்பின்றிச் சுற்றிப் பார்த்தோம். சுற்றும் முற்றும் எங்கே பார்த்தாலும் பனிப் பாறைகள்தாம். எங்கள் வழிகாட்டி அங்கிருந்த பனிப் பாறை ஒன்றைச் சுட்டிக்காட்டி, 'சில வருடங்களுக்கு முன்பு இந்தப் பனிப் பாறையின் மீது அமர்ந்திருந்த அந்நிய நாட்டு யாத்திரைக் குழுவினர் திடீரென்று பாறை வெடித்ததனால் அப்பிளவுக்குள் சிக்கி மொத்தமாக எல்லோரும் இறந்து போனார்கள்'- என்று தெரிவித்தான். அவன் இதைக் கூறியபின் நாங்கள் வந்திருக்கிற இடத்தின் பயங்கரம் எங்களுக்குச் சிறிது சிறிதாகப் புரியத் தொடங்கியது. மிலத்தைக் கடந்து மேலே போவதற்கு முன் கயிலாய யாத்திரைக்காரர்கள் ஒன்றரை மாதத்துக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் எல்லாவற்றையும் இங்கேயே தயாரித்துக் கொள்ள வேண்டும். ஆகவே அரிசி, கோதுமை மாவு, உருளைக் கிழங்கு, மண்ணெண்ணெய், உப்பு, மிளகாய், பருப்பு முதலிய எல்லாப் பொருள்களையும் இங்கே வாங்கி மூட்டை கட்டிக் கொண்டோம். சுவாமி வித்தியானந்த சரஸ்வதி அவர்களுடன் அடையாளச் சீட்டுகளும், பயணச் சீட்டுகளும் வழங்கப் படும் அலுவலகத்துக்குச் சென்று பெயர்களைப் பதிவு செய்தோம். மறு நாள் ஓய்வு நாள். அன்று அவ்வூரில் உள்ள மிகப் பெரிய வர்த்தகப் பிரமுகரான பகத்சிங் பாதே அவர்கள் எங்கள் குழுவினருக்கு விருந்தளித்தார்.

20-7-59 அன்று பயணத்துக்கு அனுமதிச் சீட்டு வழங்கும் அலுவலகத்தார் எங்களுக்கு அடையாளச் சீட்டு வழங்கினர். இரவிலும், விடியற் காலையிலும் மழை இடைவிடாமல் பெய்தது. பொருள்களையெல்லாம் ஏற்றிச் செல்வதற்காகவும் சவாரிக்காகவும் அமர்த்தப்பட்டிருந்த குதிரைகள் காலை பதினொரு மணிக்குத்தான் வந்து சேர்ந்தன. கூலியாட்களும் வந்து சேர்ந்தபின் பகல் பன்னிரண்டு மணியளவில் மிலத்திலிருந்து கிளம்பினோம். மிலத்துக்கு அப்பாலுள்ள வழி குறுகலாகவும், அபாயகரமாகவும் இருந்தது. கல்லும் மண்ணும் கலந்த சேற்று நிலப் பகுதியில் சென்றோம். மழை வேறு அடித்து நொறுக்கியது. ஒருவாறாக மாலை மூன்று மணி யளவில் 'லம்-கால்'- என்ற இடத்துக்குப் போய்ச் சேர்ந்தோம். அந்த இடத்தில் மருந்துக்குக் கூட மக்கள் பழக்கமே இல்லை. அது மட்டுமல்ல; இனிமேல் வழியிலே வீடுகளை எங்குமே காண முடியாதென்று எங்கள் வழிகாட்டி கூறினான். 'லம்-கால்'- அருகே கோபாங் ஆற்றங் கரையில் கூடாரமடித்துத் தங்கினோம்.

மறுநாள் காலை நன்றாக விடிவதற்கு முன்பே அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டால்தான் ஆயிற்று என்று எங்களுடைய குதிரைக்காரர்கள் கலகம் செய்யத் தொடங்கி விட்டார்கள்.

மிலத்திலிருந்து எங்களுடைய பொருள்களும், வழிகாட்டியான ஜீவன் சிங்கும் வந்து சேராததால் நாங்கள் குதிரைக்காரர்கள் சொற்படி கேட்டு உடனே புறப்பட இயலாமல்போயிற்று. கூலிக்காரர்களும், குதிரைக்காரர்களும், கண்ணியமாகவும், நாணயமாகவும் நடந்து கொள்ளாவிட்டால் கயிலாய யாத்திரையை நடத்த முடியாதென்று கேள்விப்பட்டிருந்ததை நினைத்துப் பயந்தோம். குதிரைக்காரர்கள் கலகம் செய்தது மன்றித் தங்கள் குதிரைகளைத் திருப்பி ஓட்டிக் கொண்டும் போய் விட்டார்கள். (தொடரும்)

காலம் மாறுது!
கருத்து மாறுது!
கோலம் மாறுது!
கொள்கை மாறுது!

பிரசாத் மூவீஸ்

# தாயில்லாப் பிள்ளை

சிந்தனையைத் தூண்டும் ஓர் சீர்திருத்தக் காவியம்...



இப்பொழுது

சென்னை

**வெலிங்டன் · பிரபாத் · சரஸ்வதி**

மூன்று தியேட்டர்களிலும் மற்றும்

தமிழ்நாடெங்கும் வெற்றியுடன் நடைபெறுகிறது...

| பிரசாத் | கருணாநிதி | கண்ணதாசன் | மகாதேவன் | ஜெமினி |
|---|---|---|---|---|
| டைரக்ஷன் | கதை, வசனம் | பாடல்கள் | இசை | ரிலீஸ் |



# கோலினாஸ்

## சூப்பர் ஒயிட் டெண்டல் க்ரீம்

## இந்தியாவின்

# புன்னகை ராஜாவின்

## பற்பசை !

ஆம், அவர் தைரியமாகச் சிரிக்க முடியும். அவருடைய பற்கள் பளபளக்கும் வெண்மையானவை. அவர் மூச்சில் மணம் கமழ்கின்றது. அவர் இந்தியாவின் புன்னகை ராஜா—பல்லாயிரக் கணக்கான போட்டியிட்டவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர். அவருடைய புன்சிரிப்பின் அழகைக் கெடுக்கக்கூடிய சொத்தைப் பற்கள் அவரிடமில்லை. ஏனென்றால், மூன்று சுத்திகரணிகளையுடைய, சிறந்து நுரைத்து, பல்லிடுக்குகளிலிருந்துகொண்டு பற்சிதைவை ஏற்படுத்துவதற்குக் காரணமான கிருமிகளை விளைவிக்கும் ஆகாரத் துணுக்குகளை அறவே அகற்றக்கூடிய கோலினாஸ் சூப்பர் ஒயிட் பற்பசையை அவர் உபயோகிக்கிறார்.

கோலினாஸ் சூப்பர் ஒயிட் டெண்டல் க்ரீமை உபயோகியுங்கள்—இந்தியாவின் புன்னகை ராஜாவின் பற்பசை இதுவே! பற்சிதைவை அறவே ஒழிக்கவும், உங்கள் மூச்சில் நறுமணங்கமழவும், உங்களுக்கு வெண்மையான, பளபளக்கும் பற்களை அளிக்கும் பற்பசை இதுதான்.

உங்கள் பல் டாக்டர் கூறுவார்—வேறெந்தப் பற்பசையும் உங்களுக்கு இதைவிட அதிகத் திருப்தியை அளிக்காது.



# சித்தர் மகள்



**ப**ழைய நடிகர்கள் ஒதுங்கிக்கொண்டு புது முகங்களுக்குச் சந்தர்ப்பமளிக்க வேண்டும் என்று பேசப்பட்டு வருகிறதே தவிர, அதனை யாரும் ஏற்றுக் கொண்டு கடைப் பிடிப்பதாய்த் தெரியவில்லை. இதற்கு விதிவிலக்காக விளங்குகிறார் ஸ்ரீ டி. கே. ஷண்முகம்.

சித்தர் மகள் நாடகத்தில் மேற்சொன்ன கருத்தை நாடக வசனத்திலேயே புகுத்தியிருக்கிறார். கொள்கை அளவில் ஒப்புக்கொண்டதுடன் நில்லாமல் செயலிலும் பின்பற்றியிருக்கிறார். பிரதான பாகங்களைப் பிறருக்கு அளித்து விட்டுச் சித்தரின் பாகத்தைத் தாம் ஏற்றிருக்கிறார் என்றாலும் அவரது நடிப்புத் திறன், வேஷப் பொருத்தம் இவை காரணமாகச் சித்தரே பிரதான பாகமாக மாறிவிட்டால் தவறு ஸ்ரீ ஷண்முகத்தினுடையது அல்ல.

சிற்சில காட்சிகளிலேயே வந்து போகும் சித்தர், கருத்துக்களை அள்ளிச் சொரிந்து நம்மைச் சிந்திக்க வைக்கிறார்; கம்பீரமாகப் பாடவும் செய்கிறார். சாந்தமே உருவெடுத்து விளங்கும் அவர், சின்னத்தனங்களைக் கண்டதும் சினம் பொங்கத் தடியைச் சுழற்றிச் சீறவும் செய்கிறார்.

அண்ணாமலை மன்றத்தில் நாடகத்துக்குத் தலைமை தாங்கிய ஸ்ரீ மு. வ. அவர்கள் கூறியது போல "டி. கே. எஸ்." என்றதுமே தரம் உயர்ந்த நாடகத்தை எதிர்பார்க்கத் தொடங்கிவிடுகிறோம் நாம். என்றைக்குமே நமக்கு ஏமாற்றமளித்ததுமில்லை அவர்கள். சித்தர் மகள் அவர்களுடைய நாடகங்கள் எல்லாவற்றுக்கும் சிகரமாக விளங்காவிடினும் சிறப்பாய்த்தான் உள்ளது.

சித்தர் மகளாக நடிப்பவர் ஹேமலதா. நீலமதியாக இருக்கும்போது நெக்குருகும் அவரே கோலமதியாகத் தோன்றும்போது பற்பல உணர்ச்சிகளுக்கும் உள்ளாகிறார். மாறி மாறித் தோன்றும் குண விசித்திரங்களைப் பிரதிபலிக்க வேண்டிய கடினமான பாத்திரம். நடிகை கதாபாத்திரத்தைக் கைவிடவில்லை; நன்றாகச் சோபிக்கச் செய்கிறார்.



விவேகசாராகத் தோன்றிச் சக்கைப்போடு போடுகிறார் ஸ்ரீ டி. கே. பகவதி. ஓவியர் மாதவனின் அரங்க நிர்மாணங்கள் அழகாயுள்ளன. புத்தனேரி சுப்பிரமணியம் பாடல்களைக் கதைக்கேற்பக் கருத்துடன் அமைத்திருக்கிறார்.

ஓர் உதாரணம்:

தீவினை அணைப்பது
   தீயல்ல - ஒரு
தீமைக்குத் தீமை
   மருந்தல்ல!
தீவினைத் தண்ணீர்
   அணைத்துவிடும் - செய்த
தீமையை நன்மை
   திருத்திவிடும்!

இவ்வளவிருந்தும் ஒரே ஒரு குறை. அது கதை. கதையோடு இழைந்த மாதிரியில் கருத்துக்கள், நீதிகள் அடங்கி அளவாக வெளிப்படாமல் துண்டாகத் தனித்து நிற்பது துரதிர்ஷ்டம்தான்.

புற அழகு அழகல்ல; அகத்தின் அழகே அழகு—முற்பகல் விதைத்தது பிற்பகல் விளையும்—கெடுவான் கேடு நினைப்பான்—தன் வினை தன்னைச் சுடும்—வினை விதைத்தவன் வினையறுப்பான்—இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்- -போன்ற நீதிகளை உணர்த்துவதற் காகவே எழுதப்பட்ட கதையாகத் தோன்றுகிறது. இதனாலேயே கதையில் பல திருப்பங்கள்; குழப்பங்கள்.

நீதிக் கதைகளாகவே எழுதிய காலத்தில் கூடக் கதையைச் சொல்லிவிட்டு நீதியைக் கடைசியில் ஒரே வரியில் சொல்லி முடிப்பது தான் வழக்கம். சித்தர் மகளில் அநேகமாகக் காட்சிக்குக் காட்சி அறிவுரை கூற முற்படுவது அலுப்புத் தட்டுகிறது.

''கோலமதிக்கும் நீலமதிக்கும் இடையிடையே ஏன் மறைந்து போகிறதே காரியமோ?'' என்றும் ''இவர்களை மாற்றி மாற்றிக் கடிப்பதற்கென்றே இங்கே ஒரு விஷ ஜந்து காத்துக்கிட்டிருக்கிறப்போ விருக்கே'' என்றும் சிவதாணு நகைச்சுவையுடன் சொல்லும்போது வசனத்தைப் பேசுவதுடன் நாடகக் கதையைப் பற்றி ஓர் அருமையான விமர்சனமே செய்து விடுகிறார்!

அவருடைய பொய்க்கால் குதிரை ஆட்டம் மெய்யாகவே சிரிப்பைத் தருவிக்கிறது.

விருந்திலே அன்னம் அரை வேக்காடாகிப் போனால் என்ன? சுற்றிலுமுள்ள ஜாங்கிரி, தயிர் வடை, பாயசம் எல்லாம் கனஜோர்!

## பாரதநாட்டுப் பருத்திக்கே, ஏலேலோ...பேரமாம் கத்திமுனையில், ஐலஸா...

18—ம் நூற்றாண்டின் பாலகாண்டம்...சந்தடிமயமான கல்கத்தாவின் வண்ணத்துறைமுகம்... பொங்கு கடலோடப் புறப்பட்டுவிட்டது கிழக்கிந்தியக் 'கும்பினிக்' கப்பலொன்று...ஏற்றியிருந்த சுமையோ விலைமதிப்பற்ற சரக்குகள்; மகத்தான வேலைப்பாடிழைந்த துகில்கள், ஏலம், மிளகு வகையறா, நுண்ணிய நெசவும், கோல வனப்பும் அமைந்த பருத்தித் துணிகள்.

பாரதநாட்டு வாணிப வரலாற்றிலேயே பரபரப்பு மிகுந்த பருவம்...பேர வணிகப் பேரேடும், போர் வாளும் நாட்டாண்மை செலுத்திய காலம். கடல்நெடுக, 'கும்பினிக்' கப்பல்களின் ஆனந்த நடனம்; புயல், கண்ணற்ற கடற்பாறை, வழிப்பறி, கொள்ளை, போட்டி வாணிபப் போர்ப் படையின் இடையீடு... எல்லாவற்றையும் ஏற்றவண்ணம் தீரமுடன் அக்கப்பல்கள் இந்தியப் பருத்தித் துணிகளைச் சுமந்து சென்றன, அத்துணிகளை மெச்சிப் போற்றிய மேனாட்டு விற்பனைத் தலங்களுக்கு.

இன்றும் சரி, இந்தியப் பருத்தித் துணிகள் வையகமெங்கும் செல்லாத இடம் இல்லை. அக்காலக் 'கும்பினிக்' கப்பல்கள் இன்று வெறும் நினைவுச் சின்னங்களாகவும், பண்டையக்கால நெசவு முறைகள் விசைத் தறிகளாகவும் மாறிவிட்டபோதிலும், பரம்பரை பரம்பரையாக வந்த பற்றும், ஒப்பற்ற கலைத் திறனும் அசையாது நிலைபெற்றுள்ளன. எம்முடைய ஆலைகளில் நாள் தோறும் நெசவிடப்படும் 80,000 கஜத் துணிகளில் ஒவ்வொரு சாணும் இதற்குச் சான்று கூறும்.

# சாயாஜீ மில்ஸ் நம்பர் 2

**பெர்குஸன் ரோடு, பம்பாய்–13**



**இது ஒரு ரோஹித் க்ரூப் ஸ்தாபனம்.**

# திருமூலர் தவ மொழி

## ராஜாஜி - சோமு

### 22

ஏது உண்மைக் கல்வி, எது உண்மையறிவு என்பதை மேலும் விளக்குகிறார் திருமூலர்.

தத்துவ ஞானத்தைக் 'கணக்கு' என்ற சொல்லால் குறிப்பது சித்தர்கள் மரபு. 'கணக்'கை அறிதல் என்றால் தத்துவங்களை ஆராய்ந்து தெரிந்துகொள்ளுதல் என்று பொருள். வடமொழியில் 'ஸாங்க்யம்' என்பார்கள்.

முனிவர் பாடுகிறார்;

**கணக்குஅறிந் தார்க்குஅன்றிக்**
**காணஒண் ணாது**

[கணக்கு—தத்துவங்களின் இயல்பு]

உலகின் தன்மைகளையும் இந்த உடலின் தன்மைகளையும் அறிந்தவர்களே தத்துவத்தைக் கண்டவர்கள். இவர்களுக்குத்தான் நித்தியமான உண்மைப் பொருளைக் காண முடியும்.

**கணக்குஅறிந் தார்க்குஅன்றிக்**
**கைகூடாக் காட்சி**

[காட்சி—தரிசன ஞானம்.]

தத்துவங்களைப் பகுத்து அறிந்தவர்களுக்குத்தான் தரிசனம், ஞானம் கைகூடும். கணக்கை அறிந்து, உண்மையைக் கண்டு, அதனை அணுகுவதற்காக நிற்கிற கல்வியைப் பெற்றவர்களே 'கற்றவர்கள்' என்று அழைக்கத் தகுதியுடையவர்கள்.

**கணக்குஅறிந்து, உண்மையைக்**
**கண்டு,அண்ட நிற்கும்**
**கணக்குஅறிந் தார்கல்வி**
**கற்றறிந் தாரே**

[அண்ட—அணுகுவதற்கு. அண்ட நிற்கும் கணக்கு—உண்மையை அடைவதற்கு என்று அமைந்துள்ள கல்வி. அதை அறிந்தவர்களே கற்றறிந்தார்—கல்வி பெற்றவர்கள்.]

தத்துவங்களின் இயல்பை அறிந்து, மெய்ப்பொருளை அடைவதற்கு உரிய கணக்கைக் கற்றவர்களே மெய்க்கல்வி பெற்றவர்கள் என்கிறார் முனிவர்.

**கணக்கறிந் தார்க்கன்றிக்**
**காணஒண் ணாது**
**கணக்கறிந் தார்க்கன்றிக்**
**கைகூடாக் காட்சி**
**கணக்கறிந் துண்மையைக்**
**கண்டுஅண்ட நிற்கும்**
**கணக்கறிந் தார்கல்வி**
**கற்றறிந் தாரே!**

இத்தகைய மெய்ப்பொருள் அறிவு இல்லாதவர்களோடு உறவு கொள்வதே தகாது என்று கண்டிக்கிறார் திருமூலர். ஒரு தந்தை மகனுக்கு எடுத்துச் சொல்வதுபோல் எடுத்துக் கூறுகிறார்.

**கல்லாத மூடரைக்**
**காணவும் ஆகாது**
**கல்லாத மூடர்சொல்**
**கேட்கக் கடனன்று**

[மூடர் சொல்—மூடர்களுடைய பேச்சை, கேட்கக் கடனன்று—கேட்பது முறைமை இல்லை.]

**கல்லாத மூடர்க்குக்**
**கல்லாதார் நல்லராம்.**

[கல்லாத மூடர்க்கு—கல்லாத மூடரைக் காட்டிலும், கல்லாதார்—ஒன்றுமே படியாத மக்கள். நல்லராம்—மேலானவர்களாம்.]

படித்தும் மெய்யறிவை அடையாதவர்கள் மூடர்களே ஆவார்கள். இத்தகைய மூடரைக் காட்டிலும், கல்லாதார் அதாவது படிப்பே இல்லாதவர்கள் மேலானவர்கள் ஆவார்கள்.

**கல்லாத மூடர்க்குக்**
**கல்லாதார் நல்லராம்**

மெய்யறிவாகிய கருத்தை அறியாதவர்கள்தான் 'கல்லாத மூடர்'. ஆகவே,

**கல்லாத மூடர்**
**கருத்தறி யாரே !**

[கருத்து—மெய்ப்பொருளின்—நிலை.]

மெய் அறிவு என்பதும், மெய் உணர்வு என்பதும் இறைவனைப் பற்றிய கல்வியே. இந்தக் கல்வி கற்காத மூடர்களின் உறவே கேடு விளைப்பதாகும். அவர்களுடைய உறவைக் காட்டிலும் ஒரு படிப்பும் இல்லாத மக்களின் உறவே மேலாகும். இத்தகைய மூடர்களின் தொடர்பு வேண்டாம் மகனே என்பார், படிப்படியாகத் தமது கல்லூரையைப் பேரனோடு எடுத்தோதுகிறார்.

**கல்லாத மூடரைக்**
**காணவும் ஆகாது**
**கல்லாத மூடர்சொல்**
**கேட்கக் கடனன்று.**
**கல்லாத மூடர்க்குக்**
**கல்லாதார் நல்லராம்**
**கல்லாத மூடர்**
**கருத்தறி யாரே !**



முதல் நாள் பத்திரிகையில் வந்த செய்தி : "தீபாவளிக்கு முதல் நாள் எல்லாப் பகுதிகளிலிருந்தும் விசேஷ ரயில்கள் மாப்பிள்ளைகள் வருகைக்காக விடவேண்டுமென்று இச்சங்கம் வற்புறுத்துகிறது."

—மாமனார்கள் சங்கத் தீர்மானம்

மறு நாள் பத்திரிகையில் வந்த செய்தி : "மாமனார்கள் சங்கத் தீர்மானத்தை இச்சங்கம் ஏகமனதாக வரவேற்கிறது. ஆனால் திரும்பச் செல்வதற்காகக் குறைந்தது ஆறு மாதங்களுக்குப் பிறகு இச்சங்கம் குறிப்பிடும் நாளன்றுதான் ஊர் திரும்புவதற்கு விசேஷ ரயில்கள் விடவேண்டுமென்று இச்சங்கம் கேட்டுக் கொள்ளுகிறது."

—மாப்பிள்ளைகள் சங்கத் தீர்மானம்

★

"அன்புள்ள மாமனாருக்கு,

இந்த ஆண்டு உங்கள் பேத்தியின் தலைதீபாவளியை இங்கேயே கொண்டாடுவதாக ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதால் வழக்கம் போல் நான் தங்கள் வீட்டில் தீபாவளிக்கு வர முடியவில்லையென வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்........

இப்படிக்கு,

............"

★

"நீங்கள் அதிர்ஷ்டசாலிகள் அப்பா! உங்கள் கம்பெனியில் தீபாவளிக்கு மூன்று மாதச் சம்பளம் தருகிறார்களாமே.....!"

"அட, நீ ஒண்ணு. அது தீபாவளி போனஸில்லே. கம்பெனியை மூட இருப்பதால் கொடுக்கும் தொகை."

★

"என் பிஸினஸ் ரொம்ப மோசமாயிடுத்துடா! என் கடைப் பக்கம் ஒரு ஈ காக்கா வர்றது கிடையாது."

"சரி! உடனே அந்தக் கடையை மூடிவிட்டு...முறுக்கு, மசால் வடை, சுண்டல் கடை வைத்து விடு... ஈ காக்கா எல்லாம் எப்படி வரது பார்."









"என்னய்யா அநியாயம்! பெண்ணை மாற்றி விட்டீர்களே!"

—பிள்ளையின் தந்தை

"ஐயையோ, அக்கிரமமாயில்லே இருக்கு. நாங்கள் பார்த்த மாப்பிள்ளை இவரல்ல. ஆளை மாற்றி விட்டீர்களே, ஐயா!"

—பெண்ணின் தந்தை

"சார்! இங்கே யாரும் யாரையும் மாற்றவில்லை. நீங்கள்தான் இடம் மாறி வந்து விட்டீர்கள். நீங்கள் போக வேண்டிய கல்யாணம் அடுத்த சத்திரத்தில் நடக்கிறது."

—ஓர் ஆபத்பாந்தவன்

★

"ஏண்டா! அவன் உன்னை அடித்தால் நீ திருப்பி அவனை அடிக்கலாமா? ஒரு கன்னத்தில் அடித்தால் மற்றொரு கன்னத்தைக் காட்டு என்று பெரியவர்கள் சொல்லி இருக்கிறார்களே, தெரியாதா?"

"தெரியும், ஆனால் அவன் என் கன்னத்தில் அடிக்கவில்லையே என் மூக்கில் அல்லவா குத்தினான்? எனக்கு ஒரு மூக்குத்தானே என்று அவன் மூக்கை உபயோகப்படுத்திக் கொண்டு விட்டேன்."

★

"ஏண்டா, தம்பி! இப்பவே வெறும் கையை முழம்போடறியே? பெரியவன் ஆனால் என்ன பண்ணப் போறே?"

"பூ விப்பேன்!"

★

"பணத்தை மிச்சம் பிடிக்க எங்கள் சிக்கனம் 'டூத் பேஸ்ட்'டை உபயோகியுங்கள். அதனால் வாய் வெந்துபோய் நான்கு நாட்கள் சாப்பிட முடியாது. மளிகைச் சாமான்கள் தானாகவே மிச்சமாகும்!"

★

சிப்பந்தி : என்ன அண்ணா இது? தோசையிலே காதை வைச்சுப் பார்க்கிறீர்கள்?

சாப்பிடுபவர் : தோசை ரேடியோ ஆவிலே செய்ததுன்னு சொன்னியே? அதுதான் பாடறதோன்னு கேட்டுப் பாக்கறேன்!

# சிரிக்காதே!

# கவுரவத்தை கொடுக்கக் கூடிய துணிகள்

## டெட்டினுல் சலவை செய்யப்பட்டதே

- **டெட்டினுல் சலவை செய்யப்பட்ட துணிகள் பிரகாசமாக தோற்றமளிக்கும்**

  டெட்டின் சிறந்த சுத்திகரிப்புச் சலவை உங்களுடைய ஆடைகளை புத்தம் புதியது போல் பிரகாசிக்கச் செய்கிறது.

- **டெட்டினுல் சலவை செய்யப்பட்ட துணிகள் மிக வெண்மையாக தோற்றமளிக்கும்.**

  டெட் ஆடைகளை சுத்தமாகவும், பிரகாசமாகவும் வெளுக்கும் சிறந்த பரிசுத்தகாரணி. டெட்டினுல் துவைக்கப்பட்ட துணிகளுடன் நீலத்தையோ அல்லது வெண்மையாக்கும் பொருள்களையோ சேர்க்க வேண்டிய தேவையில்லை. காரணம் கண் கவரும் வெண்மையைத் தரும் பொருள் டெட்டில் அடங்கியுள்ளது.

- **டெட்டினுல் சலவை செய்தல் என்பது நவீன முறையில் சலவை செய்யப்படுவது என்பது பொருள்.**

  வெந்நீரிலும், மென்னீரிலும் டெட்டை உபயோகித்து நன்கு சலவை செய்யலாம். டெட் அபரிமிதமாக நுரை தருகிறது. காட்டன், சில்க், ரேயான், கம்பளி, டெரிலின் அல்லது [illegible] துணிகள்-எல்லா விதமான ஆடைகளுக்கும் டெட்டை தாராளமாக உபயோகிக்கலாம்.




**ஸ்வஸ்திக்** ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்-1.

# வாழும் வர்ணனைகள்

## 1. பாரதியார்

### சூரியாஸ்தமனம்

"உலகத்தில் எங்கு பார்த்தாலும் நிறைந்து கிடக்கும் லாவண்யங்களைத் தமிழர்கள் கவனிப்பது கிடையாது. சனிக்கிழமை சாயங்காலந்தோறும் குளக் கரைகளிற் போய்க் கருடன் பார்ப்ப தற்கு என்றால் நம்மவர்கள் கூட்டம் கூட்டமாக ஓடுகிறார்கள். சூரியாஸ்த மன காலத்தில் வானத்திலே தோன் றும் அதிசயங்களைப் பார்க்க ஒருவன் கூடப் போவதில்லை. அப்போது வானத் திலே இந்திரஜால, மகேந்திர ஜாலங்க ளெல்லாம் நடக்கின்றன.

சகோதரா! சூரியாஸ்தமனத்தின் விநோதங்களைச் சென்று பார். சூரிய னைப் பார்த்தால் கண்ணுக்குக் கெடுதி என்ற குருடர் நம்பிக்கையைப் பொருட் டாக்காதே. சூரியனைப் பார்ப்பது பாவ மென்று சொல்லும் மூடர் சாஸ்திரத் தைக் கண்கொண்டு பார்க்காதே.

சில தினங்களின் முன்பு ஒரு மாலைப் பொழுதில் நான் கண்ட அதிசயங்களை ஒருவாறு இங்கு குறிப்பிடுகிறேன். அடி வானத்தில் சூரிய கோளம் தகதக வென்று சுழன்று கொண்டிருந்தது. இரு பது கோடி மின்னல்களை எடுத்து ஒரு சக்கரமாக வார்த்துச் சுழற்றுவதுபோல் இருந்தது. ஆரம்பத்திலேதான் கண் கூசும். சிறிது நேரம் உற்று நோக்கிக் கொண்டிருந்தால் பிறகு கண் கூச்சம் தீர்ந்து போய்விடும். இரண்டு வட்டத் தகடுகள் ஒன்றின்மேல் ஒன்று சுழலும். கீழே இருப்பது சுத்தமான மின் வட்டம். மேலே மரகத வட்டம். பச்சை வர்ணம்! அற்புதமான பசுமை.

பச்சைத் தகடு பின்புறத்திலிருக்கும் மின் தகட்டை முழுதும் மறைத்துக் கொண்டிருக்கும். ஆயினும் இடையிடையே பின்னுள்ள வட்டத்தின் வயிரக் கிரணங்கள் கண்மீது பாயும். பார்! சூரியனைச் சுற்றி மேகங்கள் எல்லாம் தீப்பட்டெரிவது போலத் தோன்றுகிறது! ஆஹா! என்ன வர்ணங்கள்! எத்தனைவித வடிவங்கள்! எத்தனை ஆயிர வித மான கலப்புக்கள்! அக்கினிக் குழம்பு! தங்கம் காய்ச்சி விட்ட ஓடைகள் எரி கின்ற தங்கத் தீவுகள்.

நீல ஏரிகள்! கரும் பூதங்கள்! எத்தனை வகை நீலம்! எத்தனை விதச் செம்மை! எத்தனை வகைப் பசுமை! எத்தனை வகைக் கருமை! நீல ஏரியின் மீது மிதக் கும் தங்கத் தோணிகள். எரிகின்ற தங்க ஜரிகைக் கரை போட்ட கரிய சிக ரங்கள்! தங்கத் திமிங்கிலங்கள் மிதக்கும் கருங்கடல்! எங்கு பார்த்தாலும் ஒளித் திரள், வர்ணக் களஞ்சியம், போ, போ, என்றால் அதை வர்ணிக்க முடியாது.

### கவிமலர்கள்

ஒருமையும், யௌவனத் தன்மையும் பெற்று விளங்கும் பாரத தேவியின் சர ணங்களிலே யான் பின்வரும் மலர்கள் கொண்டு சூட்டத் துணிந்தது எனக்குப் பிழையென்று தோன்றவில்லை. யான் சூட்டியிருக்கும் மலர்கள் மணமற்றன என்பதை நன்கறிவேன். தேவலோகத் துப் பாரிஜாத மலர்கள் சூடத் தகுதி கொண்ட திருவடிகளுக்கு எனது மண மற்ற முருக்கம் பூக்கள் அணிக் குறைவை விளைவிக்கும் என்பதையும் யான் தெரிந் துள்ளேன். ஆயினும் உள்ளன்பு மிகுதி யால் இந்தச் செய்கையிலே துணிவு கொண்டு விட்டேன்.

### தேசபக்தி

இனிய நிலவின் ஒளியால் விழுங்கப் பட்டு உலகம் அவாங்க மனகோசரமாகிய சௌந்தர்யத்தைப் பெற்றிருக்கும் சம யத்தில் ஒவ்வொரு கவிஞனுடைய உள்ள மும் தன்னையறியாது குதூகல மடைகின் றது. சூரியன் உதித்தவுடனே சேதனப் பிரகிருதி மட்டுமேயன்றி, அசேதனப் பிரகிருதியும், புதிய ஜீவனையும், உற்சாகத்தையும் பெற்றுத் திகழ்கிறது. இவற்றினையொப்பவே, நாட்டில் ஒரு புதிய ஆதர்சம்-ஓர் கிளர்ச்சி-ஓர் மார்க்கம்,-தோன்றுமேயானால், மேன் மக்களின் நெஞ்சமனைத்தும், இரவியை நோக்கித் திரும்பும். சூரியகாந்த மலர்



போல் அவ்வாதர்சத்தை நோக்கித் திரும்புகின்றன. சென்ற சுபகிருது வருஷத்திலே, பாரத நாட்டில், சர்வ சுபங்களுக்கும் மூலாதாரமாகிய 'தேச பக்தி' என்ற நவீன மார்க்கம் தோன்றியது. நல்லோர்களின் சிந்தை யெல்லாம் உடனே புளகிதமாயின. நல்லோருடைய குணங்களிலே குறையுடையவனாகிய யானும் தேவியினது கிருபையால் அப் புதிய கடவுளினிடத்து அன்பு பூண்டேன்.

## உஷை

வைகறையின் செம்மை இனிது. மலர்கள் போல நகைக்கும் உஷை வாழ்க! உஷையை நாங்கள் தொழுகின்றோம். அவள் திரு. அவள் விழிப்புத் தருகின்றாள். தெளிவு தருகின்றாள்; உயிர் தருகின்றாள்; ஊக்கம் தருகின்றாள். அழகு தருகின்றாள். கவிதை தருகின்றாள். அவள் வாழ்க!

அவள் தேன். சித்த வண்டு அவளை விரும்புகிறது. அவள் அமுதம். அவள் இறப்பதில்லை. அவள் வலிமையுடன் கலக்கின்றாள். வலிமைதான் அழகுடன் கலக்கும், இனிமை மிகவும் பெரியது.

வடமேருவிலே பலவாகத் தொடர்ந்து வருவாள். வானடியைச் சூழ நகைத்துத் திரிவாள். அவளுடைய நகைப்புக்கள் வாழ்க. தெற்கே நமக்கு ஒருத்தியாக வருகின்றாள். அன்பு மிகுதியால் ஒன்று பலவினும் இனிதன்றோ? வைகறை நன்று. அதனை வாழ்த்துகின்றோம்.

## மின்னல்

மழை பெய்கிறது. காற்றடிக்கிறது. இடி குமுறுகின்றது. மின்னல் வெட்டுகின்றது.

புலவர்களே, மின்னலைப் பாடுவோம், வாருங்கள். மின்னல் ஒளித் தெய்வத்தின் ஒரு லீலை, ஒளித் தெய்வத்தின் ஒரு தோற்றம். அதனை யவனர் வணங்கி ஒளி பெற்றனர். மின்னலைத் தொழுகின்றோம். அது நம்மறிவை ஒளியுறச் செய்க. மேகக் குழந்தைகள் மின்னற் பூச்சொரிகின்றன. மின்சக்தி இல்லாத இடமில்லை. எல்லாத் தெய்வங்களும் அங்ஙனமே. கருங்கல்லிலே, வெண் மணலிலே, பச்சையிலையிலே, செம்மலரிலே, நீல மேகத்திலே, காற்றினிலே, வரையிலே,-எங்கும் மின்சக்தி உறங்கிக் கிடக்கின்றது. அதனைப் போற்றுகிறோம்.

நமது விழிகளிலே மின்னல் பிறந்திடுக. நமது நெஞ்சிலே மின்னல் விசிறிப் பாய்க. நமது வலக் கையிலே மின்னல் தோன்றுக. நமது பாட்டு மின்னலுடைத்தாகுக. நமது வாக்கு மின்னல் போல் அடித்திடுக. மின் மெலியதைக் கொல்லும். வலியதிலே வலிமை சேர்க்கும். அது நம் வலிமையை வளர்த்திடுக.

ஒளியை, மின்னலை, சுடரை, மணியை ஞாயிற்றை, திங்களை, வானத்து வீடுகளை, மீன்களை, ஒளியுடைய அனைத்தையும் வாழ்த்துகின்றோம்.

## காற்று

காற்றே வா. மகரந்தத் தூளைச் சுமந்து கொண்டு, மனத்தை மயலுறுத்துகின்ற இனிய வாசனையுடன் வா. இலைகளின் மீதும், நீரலைகளின் மீதும் உராய்ந்து, மிகுந்த ப்ராண-ரசத்தை எங்களுக்குக் கொண்டு கொடு. காற்றே வா. எமது உயிர்-நெருப்பை நீடித்து நின்ற நல்லொளி தருமாறு நன்றாக வீசு. சக்தி குறைந்து போய் அதனை அவித்து விடாதே. பேய் போல வீசி, அதனை மடித்து விடாதே. மெதுவாக, நல்ல லயத்துடன் நெடுங்காலம் நின்று வீசிக் கொண்டிரு. உனக்குப் பாட்டுக்கள் பாடுகிறோம். உனக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறோம். உன்னை வழிபடுகின்றோம்.

## சக்தி

சக்தி வெள்ளத்திலே ஞாயிறு ஓர் குமிழியாம். சக்திப் பொய்கையிலே ஞாயிறு ஒரு மலர். சக்தி அநந்தம், எல்லையற்றது, முடிவற்றது; அசையாமலேயே அசைவு காட்டுவது.

சக்தி அடிப்பது, துரத்துவது, கூட்டுவது, பிணைப்பது, கலப்பது, உதறுவது, புடைப்பது, வீசுவது, சுழற்றுவது, கட்டுவது, சிதறடிப்பது, தூற்றுவது, ஊதி விடுவது, நிறுத்துவது, ஓட்டுவது, ஒன்றாக்குவது, பலவாக்குவது.

சக்தி குளிர் செய்வது, அனல் தருவது, குதுகுதுப்புத் தருவது, குதூஹலந் தருவது, நோவு தீர்ப்பது, இயல்பு தருவது, இயல்பு மாற்றுவது, சோர்வு தருவது, ஊக்கந் தருவது, எழுச்சி தருவது, கிளர்ச்சி தருவது, மலர்விப்பது, புளகஞ் செய்வது, கொல்வது, உயிர் தருவது.

சக்திக் கடலிலே ஞாயிறு ஒரு நுரை; சக்தி வீணையிலே ஞாயிறு ஒரு வீடு, ஒரு ஸ்வர ஸ்தானம். சக்திக் கூத்திலே ஒளி ஒரு தாளம். சக்தியின் கலைகளிலே ஒளி ஒன்று. சக்தி வாழ்க!

கவிதையில் மட்டுமின்றித் தமிழ் வசன இலக்கியத்தின் புதிய நடைமுறையும் பாரதியிலிருந்தே தொடங்குகிறது. பாரதி பரம்பரையில் தொடங்கி இன்றுவரை வளர்ந்த உரை நடை இலக்கியத்தில் என்றும் வாழ்கிற நயம் பெற்ற வர்ணனைகள் சிலவற்றை இந்த இதழிலிருந்து கல்கி வாசகர்களுக்குத் தொடர்ந்து அளிக்கிறோம்.




# சௌந்தர்யத்தின் முதல் பிரகாசம்




ஆச்சர்யமளிக்கும் வகையில் கிருமிகளைக் கொல்லக்கூடிய ஜி-11* சிந்தால் சோப்பில் சேர்க்கப்பட்டிருப்பதால் சருமங்களிலே சாதாரணமாக வளரும் லக்ஷக்கணக்கான கிருமிகளிலிருந்து அவளது மிருதுவான சருமத்தைக் காப்பாற்றுகிறது... வேர்க்குரு கருகிறப்படை மற்றும் பல்வேறு சருமநோய்களிலிருந்து பாதுகாக்கிறது. சிந்தால் உபயோகிக்கும் வருஷங்கள் பூராவும் அவளது களங்கமற்ற பரிசுத்தமான மேனியழகை மேம்படச் செய்கிறது...

மனோகர நறுமணமும் மிருதுத்தன்மையும் உள்ள சிந்தால் சோப் கண்களில் எரிச்சல் உண்டாக்குவதில்லை. சருமத்தை இதமாக சுத்தமாக்குகிறது.

*வியர்வை நாற்றத்தைப் போக்கி, எழிலுடன் விளங்கச்செய்யும் சோப்*

பூரண பாதுகாப்பிற்கும், புத்துணர்ச்சிக்கும், ஜி-11 கலந்த கோத்ரெஜ் சிந்தால் டாய்லெட் பவுடரை உபயோகியுங்கள் நறுமணமுள்ளது. துர்நாற்றத்தைப் போக்கவல்லது. சருமத்திற்கு இதமளிக்கிறது குழந்தைகளுக்கு ஓர் வரப்பிரசாதம்.

* படங்களுடன் கூடிய "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு கோத்ரெஜ், பம்பாய்-12 என்ற விலாசத்திற்கு எழுதுங்கள்.

Godrej கோத்ரெஜ்

**சோப்புகளில் முதன்மையான பெயர்**

# நிர்வாகக் குழு அதிபர் காண்கிறார்

## திட்டமிட்ட லூப்ரிகேஷன் மூலம் எவ்வாறு நஷ்டத்தைத் தவிர்க்கலாமென்பதை...

திட்டமிட்டு லூப்ரிகேஷன் செய்வதன் மூலம் உற்பத்தியை பெருக்கலாம், இயந்திரங்களின் ஆயுட்காலத்தை நீடிக்கலாம், காலத்தைக் குறைக்கலாம், அதாவது அதிக உற்பத்தி, லாபம் இவற்றின் ஜீவாதார அம்சங்களைப் பெறலாம் என்பதை விழிப்புடனுள்ள தொழிலதிபர்கள் வெகுவாக உணர்ந்து வருகிறார்கள்.

**திட்டமிட்டு லூப்ரிகேஷன்** செய்து நஷ்டத்தை நிறுத்துங்கள் என்ற கால்டெக்ஸின் புதிய சிறு நூல் இவ்விதம் செய்வதால் கிடைக்கும் விசேஷ அனுகூலங்களை விளக்கிச் சொல்கிறது: கால்டெக்ஸ் லூப்ரிகேஷன் என்ஜினியர்கள் எவ்வாறு உங்கள் பராமரிப்புச் செலவை உண்மையாகவே மீதம் பிடிக்க உதவுகிறார்கள் என்பதையும் அது கூறுகிறது.



*Company executives can obtain a free copy of this booklet by writing on their official letter-head to their nearest Caltex office.*




**CALTEX (INDIA) LIMITED**

**Bombay • New Delhi • Calcutta • Madras**

CAL-29 01P



# புதுவெள்ளம்

### அத்தியாயம் பதினொன்று

## வல்லான் வகுத்த வாய்க்கால்

‘நல்லவர்களே பெரியவர்கள்’ என்ற காலத்தை மாற்றி, பணக்காரர்கள் பெரியவர்கள் என்ற காலத்தைத் தோற்றுவித்தவர்கள் அந்தக் காலத்து மேலை நாட்டு வியாபாரிகளே. அந்த வியாபாரிகளில் வெற்றி பெற்றவன் வெள்ளைக்காரன்,-ஆங்கிலேயன்.

வெள்ளைக்காரன் சுரண்டல் வாணிப நோக்கத்தோடு இந்த நாட்டுக்கு வந்தவன். பணத்தின் வலிமையை அதிகமாக அறிந்தவன். டில்லி பாதுஷாவின் ஆட்சியைக் குலைத்துத் தனது செல்வாக்கை விரிவுபடுத்திக் கொள்வதற்காக அவரது அரசாங்க அதிகாரிகள் பலருக்கு வாரி வாரி லஞ்சம் கொடுத்தவன். லஞ்சப் பணத்தால் அதிகாரத்தை விலைக்கு வாங்கி, திருட்டுச் சலுகைகள் பெற்று, வாணிபம் என்ற பெயரால் நம்மைக் கொள்ளையடித்து இங்கிலாந்தில் புதிய பிரபுக்களை உற்பத்தி செய்தவன்.

**அகிலன்**

கள்ளப் பணத்தின் வலிமைக்கு இந்த நாட்டில் புது வேகம் ஏற்பட்ட காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்க காலம். வாய்ச் சொல்லால் நாணயத்தைக் காப்பாற்றி வந்த நன்மக்களின் செல்வாக்குச் சீரழியத் தொடங்கிய காலம் அது. லஞ்சம், பொய்க்கணக்கு, மறைமுகத் திருட்டு இவற்றுக்குப் பெரிய அளவில் வழிகாட்டியவர்கள் முதன்முதலில் கிழக்கிந்தியக் கம்பெனி என்ற பெயரில் இந்த நாட்டில் வாணிபம் செய்ய வந்தவர்களே.

நல்லவன் பெரியவன் என்ற எண்ணத்தின் ஆணி வேரைக் களைந்தெறிந்து விட்டு, வல்லவன் பெரியவன், பணக்காரன் பெரியவன் என்ற எண்ணத்தை நிலைநாட்டத் தொடங்கியவன் வெள்ளைக்காரன். வெள்ளைக்கார ஆட்சியிலிருந்துதான் நாம் விடுதலை பெற்று விட்டோமே தவிர, அவனது எண்ணத்தின் ஆட்சிக்கு இன்னும் நாம் அடிமைகளே.-தன்னலப் பேய்களான பல கறுப்பர்களின் கறுப்புத்தனத்துக்குள்ளே இன்னும் வெள்ளைக்காரன் வளர்ந்து கொண்டுதான் இருக்கிறான்!

பெரியபாளையம் கிராமத்தின் வரலாற்றைத் தெரிந்துகொள்ள மேற்கண்ட செய்திகள் முக்கியமானவை. பெரிய பாளையம் கிராமமோ முருகையனுக்கு முக்கியமானது. ஆகவே, முருகையனின் தகப்பனாரான சிவப்பிரகாசத்தையும் அவரது நண்பரும் உறவினருமான குமரவேலையும் பற்றிச் சொல்வதற்கு முன்பு இவைகளையும் சொல்ல வேண்டியிருக்கிறது.

பெரிய பாளையத்தின் உயிர்நாடி விவசாயம். முருகையனின் தகப்பனாருக்கும் அதுவே தொழில். தாராளமாய் நெல் விளைந்தது; சிவப்பிரகாசம் ஏராளமாய்ச் செலவு செய்தார். மனிதர்களின் வாய்ச் சொல்லில் நம்பிக்கை வைக்கும் பழைய காலத்து மனோபாவம் அவருக்கு. வெளுத்ததெல்லாம் பால் என்று நினைத்தவர். -தம்முடைய ஒரே மகன் முருகையனுக்காகவே மனைவி இறந்த பிறகும்

அவர் மறுமணம் செய்து கொள்ள வில்லை; முருகையனை ஒரு சப்-கலெக்டராகவோ, தாசில்தாராகவோ பார்த்து விடவேண்டுமென்ற ஆசை அவருக்கு.

இந்த ஆசைகூட அவருடைய நண்பர் குமரவேல் தூண்டிவிட்ட ஆசைதான். குமரவேல் தமது மகன் செல்வரத்தினத்தைச் சென்னையில் இன்ஜினீயரிங் கல்லூரியில் படிக்க வைத்துக் கொண்டிருந்தார். அவரைப் பின்பற்றிச் சிவப்பிரகாசமும் முருகையனைத் திருச்சிக்கு அனுப்பினார்.

குமரவேலுடன் சிவப்பிரகாசம் நட்புக் கொண்டிருந்ததற்குக் காரணம் சிவப்பிரகாசத்துக்கு யாரிடமும் பகை கொள்ளத் தெரியாது. இருவரும் தூரத்துப் பங்காளிகள். குமரவேல் ஓரளவு படிக்கத் தெரிந்து கொண்டிருந்தார். சிரித்துப் பேசவும் சமயம் தெரிந்து நடந்து கொள்ளவும் பழகியிருந்தார். ஒரே மாதிரி வாழ்க்கை வசதி படைத்தவர்கள் பரம்பரையாகப் 'பெரிய குடும்பங்கள்' என்ற வழியில் வந்தவர்கள்.

ஆனால், குமரவேல் சிவப்பிரகாசத்தைப் போல் நிலத்தை மட்டும் நம்பிக் கொண்டிருக்கவில்லை. பெரிய விவசாயிகளிடம் கூடப் பணப் புழக்க மில்லாத காலம் அது. குமரவேல் நெல் விளைவிப்பதைவிட, பணத்தை அறுவடை செய்வதிலே தமது கவனத்தைத் திருப்பியிருந்தார்.

கள் இறக்குவதற்காகத் தென்னந் தோப்புக்களைக் குத்தகை எடுப்பது, வீட்டின் ஒரு பகுதியில் பலசரக்குக் கடை நடத்துவது, உழவர்களுக்குக் கடன் கொடுத்து வாங்குவது போன்ற பல தொழில்களில் அவர் ஈடுபட்டிருந்தார். அவற்றோடு கோர்ட்டு விவகாரம், பாண்டுப் பத்திரம், பஞ்சாயத்துப் போர்டு முதலிய விஷயங்களும் அவரிடம் வந்தன.

தென்னந்தோப்புக்களில் கள் இறக்க முடியாத காலம் வந்தவுடன் அவர் காந்தியைத் திட்டிக் கொண்டு தமது மற்றத் துறைகளில் கவனம் செலுத்தினார். பலசரக்குக் கடையை விரிவாக நடத்துவதன் மூலம் விவசாயிகளின் வயிறுகளை அடமானம் பிடிக்கும் வாய்ப்பு அவருக்கு எளிதில் கிடைத்து விட்டது.

கூலிக்கு விவசாயம் செய்தவர்களுக்கு ஆண்டுக்குச் சிலமுறை நெல்தான் கூலியாகக் கிடைக்கும். ஆனால் வயிறோ ஆண்டுக்குச் சிலமுறை பசிப்பதில்லை. தினமும் மூன்று வேளை பசித்தது. பாழும் பசியை அடக்கித் தொலைப்பதற்குள் தான் எத்தனை எத்தனை பொருள்கள் தேவைப்படு கின்றன! உப்பு, புளி, மிளகாய், பருப்பு, விறகு முதலிய பலவகைப் பட்டாளங்களை விலை கொடுத்து வாங்கியல்லவா வயிற்றுப் போராட்டம் நடத்த வேண்டியிருக்கிறது!-நெல்லைக் கொண்டு போய்க் குமரவேலின் கடையில் கொட்டினார்கள். அவர் கொடுத்த பொருள்களை வாங்கிக் கொண்டு வந்து அடுப்பில் கொதிக்க வைத்தார்கள்.

மற்ற சில சில்லறைக் கடைகள் இருந்தாலும் அவைகளில் அதிகக் கூட்டம் கூடுவதில்லை. குமரவேல் சிரித்துப் பேசினார்; கடன் கொடுத்தார். களத்துக்கே போய் அவர்களுக்குச் சிரமமில்லாமல் நெல்லை அள்ளிக் கொண்டு வந்தார்; அவர்கள் கொடுத்த நெல்லையே அவர்கள் கேட்டபோது 'காகக்குக் காக மட்டும்' லாபம் வைத்து விற்றார். இந்த மாதிரித் திறமை மற்றக் கடைக்காரர்களுக்கு இல்லை. ஆகவே பெரியபாளையத்துக்கே முடிசூடா மன்னராக உயர்ந்து கொண்டு வந்தார் குமரவேல்.

சிலந்திப் பூச்சி பின்னிக் கொண்டு வரும் வலையில் சிறிதளவு தேனும் தடவி விட்டால் ஈக்கள் கூட்டம் மொய்க்காமல் என்ன செய்யும்? வயிறுகளைப் படைத்த மனிதர்கள் எல்லோருமே அவருடைய தயவை நம்பித்தான் வாழ வேண்டியதிருந்தது. வயிறு படைக்காதவர்கள் யார்?

விதை நெல்லுக்குச் சிலர் அவரிடம் பணம் கடன் கேட்டு வருவார்கள். கடன் கொடுக்கும்போது வாங்குகிறவர்கள் வட்டி அதிகம் என்று நினைத்து விடக் கூடாதென்பதற்காக, "ஒரு நெல் விதைச்சால் நூறு நெல் விளையுதில்லே? நான் ஒரு ரூபாய்க்கு நூறு ரூபாயா வட்டி கேக்கிறேன்? ரூபாய்க்கு ரூபா கொடுக்கிறது நியாயந்தானே தம்பி?" என்பார்.

வாங்குகிறவர்களோ, "நீங்க எதையும் தர்மநியாயமாத்தான் செய்வீங்க!" என்று சொல்லி வாங்கிக் கொண்டு போவார்கள். ஆறு மாதத்துக்கு ரூபாய்க்கு ரூபாய்; அதுவும் நெல்லாக வரும்போது ரூபாய்க்கு இரண்டு ரூபாயாகக் குட்டி போட்டு விடும்!

முருகையனின் தகப்பனார் சிவப்பிரகாசமும் தமக்கு வேண்டியதெல்லாம் குமரவேலிடம்தான் வாங்கிக் கொண்டு வந்தார். கேட்கும்போதெல்லாம் கடன் கிடைக்கும்; அறுவடைக் காலத்தில் பணத்தைத் திருப்பிக் கொடுத்தாலும் சிவப்பிரகாசத்திடம் குமரவேல் வாங்கிக் கொள்ள மாட்டார்.

"தம்பி! உன்னோட பணத்துக்கு இப்ப என்ன அவசரம்? இன்னிக்கு எனக்கு அவசரப்பட்டுக் கடனைக் குடுத்திட்டு நாளைக்கு நீ ஏன் செலவுக்குச் சிரமப் படணும்? தேவைப்பட்டால் நானே கேட்டு வாங்கிக்கிறேன்" என்பார் குமரவேல். ஆனால், தேவை என்பது

சிவப்பிரகாசத்துக்குத்தான் அடிக்கடி ஏற்படும். 'எவ்வளவு வாங்கினேம்? எப்போது வாங்கினேம்?' என்ற கவலையே இல்லாமல், அவ்வப்போது அவர் பணம் வாங்கிக் கொள்வார். குமரவேல் எழுதி வைத்துக் கொள்ளுகிற கணக்குப் புத்தகத்தில் சிவப்பிரகாசத்துக்கு அசைக்க முடியாத நம்பிக்கை.

சிவப்பிரகாசம் தமது பட்டணத்துத் தங்கையோடு அதிகாலையில் குமரவேலின் கடைக்கு வந்திருந்தார். ஒட்ட நறுக்கிய வட்டக் கிராப்பு. பனியன், மூக்குக் கண்ணாடி இவற்ரோடு கல்லாப் பெட்டியில் அமர்ந்து கணக்கெழுதிக் கொண்டிருந்தார் குமரவேல். நண்பரையும் அவர் தங்கையையும் கண்டவுடன் அவசரம் அவசரமாய்க் கணக்குப் புத்தகத்தை மூடி வைத்து விட்டு, ''வாங்க தம்பி! வா தங்கச்சி!'' என்று சிரித்துக் கொண்டே வரவேற்ருர். விசுப் பலகையில் உட்காரச் சொல்லி உபசரித்தார்.

''தங்கச்சி ரெண்டு நாளையிலே பட்டணத்துக்குக் கிளம்பணும்னு சொல்லுது. அதுக்குள்ளே ஒரு நாள் உங்களையும் கருருக்கு அழைச்சிட்டுப் போய் அதுக்குக் கொஞ்சம் துணிமணி எடுத்துக் குடுக்கலாம்னு பார்க்கிறேன்.''

''தாராளமாச் செய்திட்டாப் போகிறது! நாளைக்கே புறப்படுவோம்.''

''அத்தோட இங்கே பருப்பு புளி மிளகாயெல்லாம் தரமாய்க் கிடைக்கறதாலே, அதிலேயும், கொஞ்சம் ஊருக்கு வாங்கிட்டுப் போகச் சொன்னேன்.''

''ஓ! கொண்டு போகட்டுமே! தலையிலேயா சுமந்துகிட்டுப் போகப் போறுங்க? கப்பலாட்டமாகக் கார் கொண்டு வந்திருக்காங்க; சாமான்களை அதிலே போட்டு அடைச்சு வச்சாப் போகுது. ஆறு மாசத்துச் சாமான் போட்டு வைக்கச் சொல்றேன். வேணுங் கிறதைச் சொல்லிடுங்க.''

பட்டியலைக் கொடுத்த பிறகு சிவப்பிரகாசம் குமரவேலின் மகன் செல்வரத்தினத்தைப் பற்றி விசாரித்தார். குமரவேல் முருகையனைப் பற்றியும் சித்திராவைப் பற்றியும் விசாரித்தார். வியாபாரத்துக்கு வேறு சில ஆட்கள் வரவே இவர்களைக் கும்பிடு போட்டு அனுப்பி வைத்தார் குமரவேல்.

பெரும்பாலான வியாபாரம் நெல்லுக்கும் கடனுக்கும்தான் நடந்தன. காலணு அரையணுக்களே காசுகளாய் வந்தன. நெல்லை மில்களில் கொடுத்து அரிசியாக்கிப் பிறகு காசாக்குவது குமரவேலின் உப தொழில்களில் ஒன்று.

அப்போது தெருவழியே தமது பரிவாரத்துடன் போய்க் கொண்டிருந்த அந்த வட்டத்து ரெவின்யூ இன்ஸ்பெக்டர் குமரவேலின் கண்களில் பட்டு விடவே,

''சாமி! இதென்ன பராமுகமாய்ப் போய்க்கிட்டிருக்கீங்க?'' என்று கல்லாப் பெட்டியிலிருந்து கீழே குதித்தார்.

ரெவின்யூ இன்ஸ்பெக்டர் சிரித்துக் கொண்டே வந்து பலகையில் உட்கார்ந்தார். மணியகாரர் பக்கத்தில் வந்து நின்றுகொண்டார். தலையாரி விலகி ஒதுங்கி நின்ருன்.

''ஊருக்கு வந்தா உங்களைப் பார்க்காமல் போறதுண்டா? அவசர வேலைகளை முடிச்சிட்டு வரலாம்னு பார்த்தேன்.''

''பாவம்! எப்பவுந்தான் வேலை— வேலைன்னு அலைஞ்சுக் கிட்டிருக்கிங்க. கொடுக்கிற வரிப் பணத்தை ஒளுங்காக் குடுக்கணும்கிற அறிவு நம்ம சனங்களுக்குக் கிடையாது. உங்களுக்கெல்லாம் ரொம்பத் தொல்லைதான்.''

இப்படி அவர் மனம் குளிரும்படி சில வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, அவர் வயிறு குளிரும்படி ஒரு 'கலர்' உடைத்துக் கொடுத்தார் குமரவேல். வெற்றிலை பாக்கை எடுத்து நீட்டினுர். அவருடைய குடும்ப நலன்களை விசாரித்து விட்டு, 'அன்போடு' விடை கொடுத்து அனுப்பினுர்.

கடையில் சாமான் வாங்கிக் கொண்டிருந்த ஓர் இளைஞனுக்குக் குமரவேல் பேசிய ஒரு வார்த்தை சுருக்கென்று தைத்துவிட்டது. ரெவின்யூ இன்ஸ்பெக்டர் அதை விட்டுக் கிளம்பிப் போனவுடன், ''நம்ம சனங்களுக்கு வரி கொடுக்கணுமேங்கிற அறிவில்லாட்டியும் பயம் இருக்கு; ஆனல் பணந்தான் இல்லே!'' என்று சிறிது எரிச்சலோடு கூறினுன்.

''நம்ம சனங்களோட கஷ்டம் எனக்குத் தெரியாதுன்னு நினைக்கிறே?'' என்று ஒரு மழுப்பல் சிரிப்புச் சிரித்தார் குமரவேல். ''நீகூட பார்த்தியா அதிகாரிக்கு முன்னுலே உண்மையைச் சொல்லப் பயந்துகிட்டு, அவர் போனவுடனே சொல்றே! அப்படித்தானப்பா உலகம் இருக்கு. நம்ப அவுங்களோட தயவைச் சம்பாதிக்கக்கணும் தம்பி; வம்பை விலைக்கு வாங்கிக்கக் கூடாது.''

''தாராளமா நீங்களே அவுங்களை விலைக்கு வாங்கிக்கிங்க!''

குமரவேல் அதிர்ச்சியுற்ருர். தம்முடைய உள்நோக்க ரகசியத்தை அவன் தெரிந்து கொண்டு விட்டானே என்ற பரபரப்பு அவருக்கு. ஆனல் அந்தக் கிராமவாசியோ தனக்குத் தெரியாமலே ஓர் உண்மையைச் சொல்லி விட்டான்.

எங்கே பணம் அதிகாரத்தை வளைத்துத் தன் கைக்குள் போட்டுக் கொள்ளப் பார்க்கிறதோ, எங்கே அதிகாரம் பணத்தாசைக்குப் பணிந்து கொடுக்கிறதோ அங்கே மீளாத அடிமைத்தனமே நிலவும் என்ற பேருண்மை அந்தக் கிராமவாசிக்குத் தெரியாது.

அத்தியாயம் பன்னிரண்டு

# தோட்டத்து மருக்கொழுந்து



கிணற்றுக்குள்ளே குதித்த முருகையனை வெளியில் காணாத ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாகத் தோன்றியது சித்திராவுக்கு. கண்களில் பொங்கிய கண்ணீரைத் துடைக்காமல், செடிகளுக் கிடையில் தென்பட்ட தாத்தாவைத் திரும்பிப் பார்த்தாள். உதவிக்கு அவரைக் கூப்பிடலா மென்றாலோ அவரால் ஒன்றும் செய்ய முடியாது.

இந்தச் சமயத்தில் கிணற்றுக்குள்ளிருந்து பெரியதொரு நீர்த்தாமரை குபுகுபுவென்ற சத்தத்துடன் மலர்வது போல் தோன்றியது. நீர்த்திவலைகள் பொங்கிப் பூரித்துச் சிதற, முருகையனின் தலை தாமரையின் மத்தியிலுள்ள வண்ணக் குமிழ்போல் மேலே எழுந்தது. அழுத கண்ணீரை ஆனந்தக் கண்ணீராக்கினாள் சித்திரா.

கிணற்று மேட்டில் நிற்கும் சித்திராவை முருகையன் தலைதூக்கிப் பார்க்கவில்லை. தன் ஆவல் தீர நீரில் அளைந்து திரிந்தான். கிணற்றின் அடித் தளத்துக்குப் போய் வெகு நேரம் மூச்சை அடக்கிக் கொண்டிருப்பது அவனுக்கு விளையாட்டு. சிறிது நேரம் சென்றவுடன் கிணற்றின் விளிம்பிலிருந்த ஒரு பாறையைப் பற்றிக் கொண்டு, அதன் ஒழுங்கில்லாத படிகளில் வேகமாய்த் தாவி ஏறினான். அது போன்ற படிகளில் பட்டணத்து மனிதர்கள் காலூன்றவே பெரிதும் பயப்படுவார்கள். 'கரணம் தப்பினால் மரணம்' என்று சொல்வார்களே, அது போன்ற ஆபத்தான படிகள்.

'நல்ல அத்தான் இவர்!' என்று நினைத்துக்கொண்டு சித்திரா சட்டெனத் தோட்டத்தைச் சுற்றிலும் ஒரு கண்ணோட்டம் விட்டாள். திரும்பிய பக்கமெல்லாம் ஒரே பசுமை. மரம், செடி கொடிகளில், புல் வெளிகளில் மருக்கொழுந்துப் பாத்தியில் எங்கும் மரகதப் பசுமை குலுங்கிச் சிரித்தது. இதற்கு முதல் நாள் சித்திரா அங்கு வந்தபோது கூடத் தோட்டம் இவ்வளவு அழகாக இருக்கவில்லை. திடீரென்று இளமையழகும், புதுமைப் பொலிவும் அதற்கு எங்கிருந்து வந்தன? முருகையனைக் கண்டுவிட்ட கண்களால் உலகத்தைக் காணும்போது அந்த உலகமே புத்துயிர் பெற்று விடுகிறதா?

கிணற்று மேட்டுக்கு அவன் வந்தவுடன் சித்திரா தன்னை மறந்து விட்டு, ''அத்தான்!'' என்று கூவினாள்.



நீர் சொட்டச் சொட்ட அங்கு நின்று கொண்டிருந்த முருகையனுக்கு எதிர் பாராமல் சித்திராவைக் கண்டவுடன் வெட்கம் பிடுங்கித் தின்றது. பதில் ஒன்றும் சொல்லாமல் ஒரே ஓட்டமாக அருகிலிருந்த கூரைக் கொட்டகைக்கு ஓடினான். அதில் மறைந்தவாறே தன் உடலைத் துவட்டிக் கொண்டு, வேஷ்டியைப் பிழிந்து உடுத்திக் கொண்டான். மெல்ல எட்டிப் பார்த்தான். அதற்குள் சித்திராவே அங்கு வந்து விட்டாள்.

''கொஞ்சங்கூட உங்களுக்குப் பயமே கிடையாதா, அத்தான்?''

அவள் என்ன கேட்கிறாள் என்று அவனுக்குப் புரியவில்லை. 'உனக்குப் பயந்து கொண்டுதானே இங்கு ஓடி வந்தேன்' என்று சொல்வது போல் அவளைப் பார்த்தான்.

''கிணற்றுக்குள்ளே நீங்கள் குதித்தவுடன் எனக்கு அழுகையே வந்துவிட்டது. வெகு நேரம் உங்களைக் காணாமல் நான் பதறிப் போனேன்'' என்று கண் கலங்கக் கூறினாள் சித்திரா.

முருகையன் சிரித்தான். ''அப்படியென்றால் பட்டணத்தில் உள்ளவர்கள் குளிப்பதே இல்லையா? குளிப்பதற்குக்கூடவா பயப்பட வேண்டும்?''

''கிணற்றுக்குள்ளே தலை குப்புற விழுவதற்குப் பெயர்தான் குளிப்பதாக்கும்! எங்கள் வீட்டில் குழாயைத் திருகி விட்டால் தண்ணீர் தாரானமாய்க் கொட்டுமே? இதற்கெல்லாம் நாங்கள் ஒன்றும் சர்க்கஸ் வித்தை செய்ய மாட்டோம்.''

''உங்கள் பட்டணம் மாதிரி திருச்சியிலும் குழாய்த் தண்ணீர் தான். ஆனால் எனக்கென்னமோ கிணற்றில் குதித்து நீந்திக் குளிக்கிற ஆனந்தம் அதிலெல்லாம் கிடைப்பதில்லை. இந்தத் தோட்டத்தையும் கிணற்றையும் என்னால் மறக்கவே முடியாது. ஐந்து வயதிலிருந்து திருச்சிக்குப் போகிறவரையில் நான் இப்படித்தான் குளிப்பது வழக்கம்.''

''என்ன! ஐந்து வயதிலிருந்தா?''

''ஆமாம்.''

சித்திரா தனது வட்டக் கரிய விழிகளை அகலத் திறந்து கொண்டு அவனை அதிசயத்தோடு உற்றுப் பார்த்தாள். நாகரிகம் மிகுந்த அவளுடைய சென்னை நகரத்தில் இப்படியொரு கிணறும் இல்லை; அதில் குதிப்பவர்களுமில்லை.

சித்திராவுக்கு முருகையன் ஏனோ ஒரு புது வகையான இளைஞனாகத் தோன்றினான். சென்னை நகரத்தில் அவள் கண்களில் பட்ட எத்தனையோ இளைஞர்களிடம் தென்படாத ஒரு தனித்தன்மை அவனிடம் இருந்தது. கலையாத கிராப்பும், கசங்காத சலவைச் சட்டையும், முகப் பூச்சும், வழுவழுப்பான தோற்றமும் கொண்ட மற்ற இளைஞர்களைப்

போல் முருகையன் காட்சி கொடுக்க வில்லை. எளிமை, முரட்டுத்தனம், கூரிய கண்கள் இவற்ரேடு கூடிய இயற்கை யின் குழந்தையாக அவன் நின்றுகொண் டிருந்தான்.

கிராமத்து மண்ணின் மாநிறமும், செதுக்கிச் சேர்த்தது போன்ற தசை நார்களும் கொண்ட உருவம் அவனு டையது. அவள் அவனை வேடிக்கை பார்த்தது போலவே அவனும் அவளை வியப்போடு நோக்கினுன்.

''அத்தான்! உங்களைப் பார்த்தால் எனக்கு வேடிக்கையாக இருக்கிறது!'' என்று குழந்தை போல் கூறினுள் சித்திரா.

'உன்னைப் பார்த்தால் எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது' என்று சொல்ல நினைத்தான் அவன். ஆனுல் அவனுல் சொல்ல முடியவில்லை. பேச்சில் சித்திராவுக்கு இருந்த துணிவு முருகைய னுக்குக் கிடையாது. இவ்வளவு நெருக்க மாக ஒரு பெண்ணின் அருகில் அவன் நின்றதுமில்லை; பேசியதுமில்லை.

சித்திரா சிரித்துக்கொண்டே அந்தக் கொட்டகையைச் சுற்றிப் பார்த்தாள். அரிவாள், மண்வெட்டி, கலப்பை முதலிய விவசாயக் கருவிகள் ஒரு மூலை யில் கிடந்தன. கயிற்றுக் கட்டிலொன்று ஓரமாய்ச் சாய்த்து வைக்கப்பட்டிருந் தது. அதை எடுத்துப் போட்டு அதன் மேல் உல்லாசமாக அவள் உட்கார்ந்து கொண்டாள்.

முருகையனுக்குச் சித்திரா தன்னரு கில் அப்படி நெருங்கி யிருப்பது வெட் கமாகவும் இருந்தது: மகிழ்ச்சியாகவும் இருந்தது. அவளை விட்டு அவன் உடனே விலகிப் போய் விட வேண்டுமென்றும் நினைத்தான்; அருகில் அமர்ந்து நேரம் போவது தெரியாமல் பேசிக்கொண் டிருக்க வேண்டுமென்றும் நினைத்தான்.

''வீட்டுக்குப் போவோமா?''

''இப்போது என்ன அவசரமாம்! உங்களுக்குப் பசிக்கிறதா?''

மாதக்கணக்கில் பழகியவள் போல் கலகலவென்று பேசும் சித்திராவின் புதுமைப் போக்கில் ஒரு விந்தை நிறைந் திருந்தது. அவளுடைய ஆடை அணிக ளில்கூட அவள் புதுமைப் பெண்ணுகவே விளங்கினுள். உள்ளும் புறமும் சித்திரா விடம் தென்பட்ட புதுமை வெறுப்பைத் தரும் புதுமையில்லை; விருப்பத்தைக் கவ ரும் புதுமை.—ஏதோ கனவு காண்பது போன்ற நிலையில் கட்டுண்டு நின்ருன் முருகையன்.

கொட்டகைக்குள்ளே சுழன்ற மருக் கொழுந்து வாசனையை மனம் கொண்ட மட்டும் இழுத்துவிட்டு '' உங்கள் தோட்டத்துத் தவனத்துக்குத்தான் எவ்வளவு வாசனை பார்த்தீர்களா?'' என்று கேட்டாள் சித்திரா.

''தவனமா?''

''அதோ பாத்தி பாத்தியாய் மண்டிக் கிடக்கிறதே, அதற்கு நீங்கள் என்ன பெயர் சொல்கிறீர்கள்?'' என்று சுட்டிக் காட்டினுள்.

''மருக்கொழுந்தைச் சொல்கிருயா?'' கூரையில் சொருகியிருந்த சிறிய கத்தியை எடுத்துக்கொண்டு மருக் கொழுந்துப் பாத்திக்குச் சென்ருன் முருகையன். பாத்தியில் ஓர் அடி உய ரத்துக்கு மேல் அடர்ந்து வளர்ந்து, காலைக் காற்றில் ஒய்யாரமாக அலை மோதிக் கொண்டிருந்தன கொழுந்துச் செடிகள். ஒரு பிடியை அறுத்துக் கொண்டு வந்து சித்திராவிடம் கொடுத் தான். கண்களால் அவனுக்கு நன்றி சொல்லிக்கொண்டே, அதை ஆவலோடு வாங்கி முகர்ந்து பார்த்து விட்டு, தன் தலையில் சூடிக் கொண்டாள் சித்திரா. இரட்டைச் சடைப் பின்னலில் அதை அவள் வைத்துக் கொண்ட முறையிலும் ஒரு புதுமையழகு மிளிரத்தான் செய் தது. அடாடா! பட்டணத்துப் பெண் எவ்வளவு தூரம் அழகுக் கலையில் தேர்ச்சி பெற்றிருக்கிருள்!

இதற்குள் காய்கறிக் கூடையைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு, அங்கு வந்து சேர்ந்தார் தாத்தா. கூடை நிறையக் கத்திரிப் பிஞ்சுகளும் தக்கா ளிப் பழங்களும் நிறைந்திருந்தன. செடி களிலிருந்து காய்களைப் பறித்தறியாத தாத்தா சின்னஞ்சிறு கத்திரிப் பிஞ்சு களைக் கூட விட்டு வைக்கவில்லை.

''முருகையா! உன் தோட்டத்துக் காய்களைப் பச்சையாகவே மென்று தின்றுவிடலாம் போலிருக்கிறது!'' என் ருர் தாத்தா.

''பல் இருந்தால் அதையும்தான் செய்து விடுவீர்கள்!'' என்று கூறிச் சிரித்தாள் சித்திரா. தாத்தா கட்டி யிருந்தது பொய்ப்பல் என்பது அப்போது தான் முருகையனுக்குத் தெரிந்தது.

மிகவும் வேலை செய்து விட்டவர் போல் கட்டிலில் உட்கார்ந்து கொண்டு ''பண்ணையாள் யாரையுமே காணுமே! இருந்தாலும் தாகத்துக்கு ஒரு இளநீர் பறித்துப் போடச் சொல்லலாம்'' என்று தமக்குள் முணுமுணுத்துக் கொண்டார் அவர்.

தோட்டத்தைச் சுற்றிலும் வேலி போல் தென்னங் கன்றுகள் நின்றன. குலை குலையாய் அவற்றில் இளநீர்களைக் கண்டவுடன் அவருக்கு நேரம் காலை நேரம் என்பதையும் மறந்து போய்த் தாகம் எடுத்தது.

முருகையன் சரேலென்று அரிவாளை எடுத்து இடுப்பில் சொருகிக் கொண்டு வெளியேறினான். சித்திராவும் அவனைப் பின்பற்றி ஓடினாள். அந்தத் தோட்டத்தின் மூலையில் இரண்டு மூன்று செவ்விளநீர்த் தென்னைகள் செழித்து வளர்ந்திருந்தன. காலை நேரத்துச் சூரியனின் பொன்னொளி பட்டு அந்தக் குலைகள் மின்னிய காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

முருகையன் சரசரவென்று மரத்தின் மேல் ஏறினான். சித்திரா திறந்த வாய் திறந்தபடி அவனைப் பார்த்துக்கொண்டு நின்றான். இளநீர்கள் குலைகுலையாய்த் தரையில் சரிந்து விழுந்தன. ஒரு கையால் அடிமட்டையைப் பிடித்துக் கொண்டு, மறு கையால் அவன் வெட்டித் தள்ளியதைப் பார்த்த சித்திரா, 'சரியான காட்டுமிராண்டி அத்தான் இவர்!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். அப்படிச் சொல்லிக் கொண்டபோது அவளுடைய சொற்களே அவளுக்குத் தேனாகச் சுவைத்தன. தோட்டத்திலிருந்து மூவரும் வீட்டுக்குத் திரும்பியபோது, வீட்டில் முருகையனின் தகப்பனார் சிவப்பிரகாசமும் சித்திராவின் தாயார் பொன்னம்மாளும் அவர்களுக்காக வாசலில் காத்துக் கொண்டிருந்தார்கள். சிவப்பிரகாசத்துக்கு முருகையன் எந்தக் காரணத்தால் கிராமத்துக்கு வந்திருந்தான் என்ற விஷயம் தெரியாது. அவரே திருச்சிக்குச் சென்ற ஒரு மனிதரிடம் அவனை நாலு நாட்கள் விடுமுறையில் வந்து போகும்படி சொல்லியிருந்தார். இப்போது அவன் தன் விருப்பப்படி வந்திருக்கிறான் என்றுதான் நினைத்தார்.

"பார்த்தியா தங்கச்சி! உங்களையெல்லாம் பார்த்துவிட்டுப் போகலாம்னு இவனை லீவு எடுத்துக்கிட்டு வரச்சொல்லியிருந்தேன். உடனே கிளம்பி வந்து விட்டான்!" என்றார் பெருமையோடு.

இதைக் கேட்டவுடன் முருகையனுக்குத் 'திக்'கென்றது. அவன் விடுமுறை பெற்று வரவில்லையென்பதையும், விலக்கப்பட்டு வந்திருக்கிறான் என்பதையும் எப்படி அவரிடம் எடுத்துச் சொல்வது? (தொடரும்)

## SHANKAR'S CHILDREN'S ART NUMBER 1961

குழந்தைகளின் மழலைப் பேச்சின் இன்பத்துக்கு இணையானது இந்த உலகில் வேறு எதுவுமில்லை என்பது நமக்குத் தெரியும். குழந்தைகளின் பேச்சில் மட்டிலுமா இன்பம்? அவர்களின் ஒவ்வொரு செயலுமே இன்ப மயமானதுதானே? அப்பா எழுதுவதைப் பார்த்து, அவர் இல்லாத சமயத்தில், பேனாவை எடுத்து எழுதிப் பார்க்கும் குழந்தையின் ஆர்வத்தைக் கண்டு நாம் ஆத்திரப் படக்கூடாது. அதை வளர்க்கவேண்டும். சுண்ணாம்புக் கட்டியாலும், கரித்துண்டினாலும் சுவரிலும் தரையிலும் படம் வரையும் குழந்தையின் கற்பனா சக்தியைக் கண்டு பாராட்ட வேண்டும். அப்படிச் செய்தோமானால் அவன் நாளைக்கே ஜனாதிபதியின் தங்கப் பதக்கத்தைப் பெறும் சித்திரத்தை வரையும் திறமைசாலியாகலாம். உபஜனாதிபதியின் தங்கப் பதக்கத்துக்குத் தகுதி வாய்ந்த கட்டுரை எழுதும் எழுத்தாளனாகலாம். யார் கண்டார்கள்! குழந்தைகளிடம் அடங்கிக் கிடக்கும் அற்புத சக்திகளை வெளிப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்தியாவின் பிரபல கேலிச்சித்திர நிபுணரான சங்கர் ஒரு திட்டத்தை 1949ம் ஆண்டு ஆரம்பித்தார். 1960ல் இந்தப் போட்டியில் கலந்து கொண்ட நாடுகள் 74; போட்டிக்குப் பதிவான படங்கள் 70,000; இலக்கியப் படைப்புகள் 3000 என்றால் பன்னிரண்டு ஆண்டுகளில் இதன் வளர்ச்சி எத்தனை மகத்தானது என்பதைச் சொல்லவாவேண்டும்? போட்டிக்கு வந்து பரிசுபெற்ற படங்களையும் கட்டுரைகளையும் கொண்ட மலர் ஒன்று வருடாவருடம் வெளியிடுகிறார்கள். இவ்வாண்டும் அந்த மலர் வெளியாகி இருக்கிறது. இம்மலர் முழுதும் குழந்தைகளின் கைவண்ணம்தான். உலகக் குழந்தைகளின் விதவிதமான கற்பனைகளையும் மனோபாவங்களையும் இதில் பக்கத்துக்குப் பக்கம் கண்டு மகிழலாம். குழந்தை உள்ளத்தைக் காண வேண்டுமானால் சங்கர்ஸ் வீக்லி குழந்தைகள் மலரைப் பார்த்தால் போதும்.



கிடைக்குமிடம்: Secretary, Shankar's International Children's Competition, Odeon Building, Connaught Place, New Delhi. *(விலை ரூ. 5.)*



நரிவேட்டை ௨௨
கதை: ஜெயந்தி
சித்திரம்: விஜு
லோஷா தப்பி ஓட உடந்தையாக இருந்தவன் வின்ஸி என்பதை உணர்ந்ததும் அவன் மீது குமாருக்குக் கோபம் பொங்குகிறது. 'துரோகி' என்று பழித்தவாறு ஆத்திரத்துடன் அவனை நெருங்குகிறான்.




குமாரின் ஆவேசத்துக்கு அணை போடுகிறார் இன்ஸ்பெக்டர்.
துரோகி என்கிறாயே; வின்ஸிக்கு நீ புரிந்து விட்ட நம்பிக்கைத் துரோகத்தை மறந்து போனாயா?
அது தேச நலனுக்காக விருப்பமின்றியே நான் செய்த காரியம்.




நல்ல முடிவை அடைய மட்டமான வழிகளைக் கையாளலாம் என நினைப்பது தவறு, குமார்! என் கருத்தில் நீங்கள் இருவருமே குற்றவாளிகள்தான்!




குமார் தலை குனிகிறான்.
போகட்டும், அவர்கள் திபெத்திய எல்லையை அடையத்தான் விரைந்திருப்பார்கள். நாமும் வேகமாய்ச் சென்றால் அவர்களைப் பிடிப்பது ஒருவேளை சாத்தியமாகலாம்.




இங்கே நமக்குத் தேவையான சாட்சியங்கள் ஏதேனும் அகப்படலாமல்லவா? அதனை ஆராய வேண்டாமா?

இன்ஸ்பெக்டர் சிரிக்கிறார்.

இந்தக் களேபரத்தின் காரணம் புரியவில்லையா உனக்கு? சாட்சியங்கள் எதையும் விட்டுச் சென்று விடக் கூடாது என்பதற்காகத் தானே எல்லாவற்றையும் தேடித் துருவிப் பார்த்திருக்கிறார்கள்!

அப்படியானால் சரி, வாருங்கள் போகலாம்.







வின்யிக்கு ஆறுதல் கூற முற்படுகிறார் இன்ஸ்பெக்டர்.

வின்யி! தன் மனைவியைப் பற்றிய கவலையை விட உன்னை வஞ்சித்து விட்டதனால் உண்டான சுய வெறுப்புத்தான் குமாருக்கு அதிகமாயிருக்கிறது. இப்போது உன் மீது அவனுக்குக் கோபமில்லை; தன் மேலேதானே நொந்து கொண்டிருக்கிறான்.






உங்கள்
டார்ச்சில்
எஸ்ட்ரெலா
பொருத்தி
இரவில்







எஸ்ட்ரெலா

ப்ளாஷ் லைட் பாட்டரிகள்
டார்ச்கள் மற்றும் பல்புகள்



ER. G. 10. TAM.



தங்க, வைர
நகைகளுக்கும்
வெள்ளிப்
பாத்திரங்களுக்கும்
நம்பிக்கையான
இடம்



நட்வர்லால்
கோவிந்த்ஜி ஜவேரி

அம்ருத்லால் மேன்ஷன்
லக்ஷ்மி நப்பூ ரோடு.
மாதுங்கா பம்பாய்–19

டெலிபோன்: 61728

எங்கள்
ஏர்கண்டிஷன் ஷோருமிற்கு
விஜயம் செய்யுங்கள்

AG-75



பவுன் சூரியன்
மார்க்
புகையிலை

குணமும்
மணமும்
கொண்டது!

M/S N. ஆறுமுகம் பிள்ளை
காரைக்குடி

BS

# வாழ்வில் ஒரு நாள்

மலையாளக் கதை: பாறப்புறத்து

தமிழில்: சௌரி

அந்தப் பார்வை அவளுக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. என்னவோ காணாத அதிசயத்தைக் கண்டுவிட்ட மாதிரி முகத்தை விட்டுக் கண்ணைத் திருப்பாமல் அப்படி என்ன உறுத்த பார்வை வேண்டிக் கிடக்கிறது? தின மும் அறிமுகமில்லாத ஆயிரம் ஆயிரம் கண்கள் அவள் பேரில் வியப்புடன் பதிந்து விலகுகின் றன. ஆனால் இந்த ஆளின் பார்வையைப் போல் அவையெல்லாம் உறுத்த வில்லை. பொறுமையைச் சோதிக்க வில்லை. நேற்றும் அவனை அவள் பார்த்திருக்கிறாள். புள்ளி போட்ட ஓர் அழுக்குத் துண்டைக் காசுக்காக எதிரே விரித்துப் போட்டுக் கொண்டு அவள் தன்மயத்துடன் பாடும் போது, இந்த ஆள் தான் வெகு நேரம் நின்று பார்த்துக் கொண் டிருந்தான். ஒரு முழு ரூபாயை எடுத்து அவள் எதிரே போட்டவனும் அவன்தான். நேற்றும் அவன் பதிலிறுப்போல் இதே மாதிரிதான் உற்றுப் பார்த்தான்.

அவனுடைய பார்வையும் கருத்தும் அலாதி யாக இருப்பதாகத்தான் அவளுக்குத் தோன் றின. முகத்தில் சோர்வுக் களை: சவரனைக் கண்டு இரண்டு வாரமாகி யிருக்கும். நெற்றி யில் சுருண்டு விழும் கேசக் குழைகள். கிழிந்த சட்டையினூடே விரிந்த மார்பு தெரிகிறது. எல்லாவற்றையும் விட எடுப்பாகத் துலங்கு வது அவனுடைய கண்கள்தான். அடக்க முடி யாத ஒரு தாகம் அவைகளில் பளிச்சிடுகிறது. அவளுக்குப் பொறுக்க வில்லை. அவன் அருகில் சென்று கேட்டு விட்டாள்: "ஏனையா, பெண் களையே நீங்கள் பார்த்ததில்லையோ?"

அவன் குற்றம் செய்து விட்டவனைப் போல் நாணிப்போய் முகத்தைக் கவிழ்த்துக் கொண் டான். அவள் மீண்டும் அதே கேள்வியைக் கேட்டாள். "ஏன் இப்படி உற்றுப் பார்த்துக் கொண்டு நிற்கிறீங்க?"

"ஓ! அதுவா?... சும்மாத்தான் பார்க் கிறேன்." அவன் கூச்சத்துடன் சொல்லி விட்டு அசட்டுச் சிரிப்பாகச் சிரித்தான்.

"உங்களுக்கு ரூவைக் கோளாறு ஏதாவது உண்டோ?"-கேலிக் குரலில் கேட்டாள்.

"அப்படி யொன்றுமில்லை...." அவன் முகத்தில் அதே அசட்டு முறுவல்தான்.

"நேற்று உன் பாட்டைக் கேட்டதும், எனக்கு அடங்கா ஆவல் ஏற்பட்டு விட்டது. அதனால்தான் இன்றைக்கும் வந்திருக்கிறேன். உன்னைக் கண்டதும் வேறு எதையும் என்னால் காண முடியவில்லை."

"ஓ! அப்படியா!"

"தவறாக நினைத்துக் கொள்ளும்படி நான் நடந்துகொண்டதற்கு வருத்தப்படுகிறேன்."

"உங்களுக்கு எங்கே வேலை?"

"வேலை என்று நிலையாக எதுவும் கிடை யாது. பாட்டுகள் இட்டுக் கட்டுகிறேன்."

"நீங்கள்தானே நேற்று எனக்கு ஒரு ரூபாய் போட்டு விட்டுப் போனது?"

"ஆமாம். என்னுடைய கையில் இருந்தது அவ்வளவுதான்."

"அப்போ நேற்றைக்கு நீங்கள் ஒன்றும் சாப்பிட வில்லையா?"

"ம்ஹும்! சாப்பிடா விட்டால் என்ன? நிறைய விருந்துச் சாப்பாடு சாப்பிட்ட திருப்தி எனக்கு ஏற்பட்டிருக்கிறதே!"

"பாட்டு எழுதுவேன் என்று சொன்னீங் களே. அதிலே பணம் ஏதாவது கிடைக் குமா உங்களுக்கு?"

"சில சமயம் கிடைக்கும்."

அவளுக்கு இப்போது கழிவிரக்கம் ஏற்பட் டது. 'ஏன் இவரைப் பற்றித் தவறாக நினைத்தோம்? நல்லவரை நல்லவரென்று புரிந்து கொள்ளக் கூடத் தெரியாமல் இருக் கிறேனே? கவிஞராமே! எனக்கும் ஒரு பாட்டு எழுதிக் கொடுக்கச் சொல்லிக் கேட்டால் என்ன? தினமும் பாடின பாட்டுக்களையே பாட வேண்டி யிருக்கிறது.'

ஆனால் அவள் வாய் திறந்து அவனிடம் ஏதும் கேட்கவில்லை.

அன்றும் அவள் பாடினாள். மகிழ்ச்சியும் உற்சாகமும் இனிமை கூட்டின. அவனுக்கா கப் பாடினாள். கேட்பவர்கள் தெரு வழியே போகிறவர்களாக இருந்தாலும், அவளைச் சுற் றிச் சிறு கூட்டம் சூழ்ந்திருந்தாலும் அவள் மதிப்புக்கும் பற்றுதலுக்கும் உரியவனான ஒரு கவிஞனும் அக் கூட்டத்தில் இருக்கிறான் என்கிற உணர்வுதான் அவளது உவகைக்கு காரணம். அவனுடைய கண்கள் கவிஞ னின் உணர்ச்சிகளை ஆராய்ந்து கொண்டிருந் தன. நல்ல ரசிகன்தான் அவன்.

கூட்டம் கலைந்தது. கடைசியாகப் பிரிந்த அந்த அன்பன் "நாளைக்கும் வருகிறேன்" என்று சொல்லி விட்டுச் சென்றான். அவள் அவனைப் பற்றியே நினைத்துக் கொண் டிருந்தாள்.

அந்த நகரத்தில் அவளை அறியாதவர் யாரும் இல்லை. பகல் முழுதும் அவள் வீதி யெல்லாம் பாடிக் கொண்டே நடப்பாள். இரவு வந்ததும் ஏதாவது ஒரு கடைத் திண் ணையிலோ, கோவில் மண்டபத்திலோ, தெருத் திண்ணையிலோ படுத்து விடுவாள். அந்த நகர வாசிகளின் கண்ணெதிரிலே சிறுமியாக இருந் தவள்தான் இப்போது வாலிப்பமடைந்து யுவதி யாக வளர்ந்திருக்கிறாள். அவளுடைய இனிய குரல் அந்நகரவாசிகள் அத்தனை பேருக்கும் அறிமுகமானதுதான்.

தன் பாட்டிலேயும் தன்னிடத்திலேயும் இவ்வளவு மதிப்பு வைத்திருக்கிற ஒரு மனி தனை – அதிலும் நல்ல இளைஞன் ஒருவனை– அவள் தன் வாழ்நாளிலேயே இப்போதுதான்

முதல் முறையாகச் சந்திக்கிறாள். இந்தக் கிளுகிளுப்பான நினைவு அவளை அன்று இரவு முழுதும் தூங்க விடவில்லை. 'இதயமுள்ள மனிதர்! தன் கையிலே இருந்த ஒரே ரூபாயை எனக்குக் கொடுத்து விட்டாரே! சாப்பிடக் கூடப் போகாமல் என்னுடைய பாட்டைக் கேட்கவே நின்று கொண்டிருந்தார். அதற்காகவே வந்தார்!'

அந்தக் கலா ரசிகரின் உருவமும் கருத்தும் அவள் எதிரே வந்து நின்றன. ஆவல் பெருகும் தோற்றம்; சுருட்டை மயிர், இறுக்க சட்டை, அகன்ற மார்பு.

அடுத்தநாள் அவள் பிழைப்புக்காகப் பாடிக் கொண்டு தெருவில் புறப்பட்டபோது, முதலில் சந்தித்தது அவனைத்தான். அவன் முறுவல் புரிவதைக் கண்டதும் அவள் முகம் மலர்ந்தது.

''நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் தெருப் பாடகி.

''கொஞ்ச தூரத்தில்'' என்றான் அவன்.

''இன்றைக்கும் என் பாட்டைக் கேட்பதற்காகத்தான் வந்தீர்களா?''

''அது மட்டுமல்ல. உனக்காக ஒரு பாட்டும் எழுதிக்கொண்டு வந்திருக்கிறேன்.''

''அப்படியா?'' அவள் உற்சாகத்துடன் அவன் அருகில் போய் நின்று அவன் கையில் இருந்த காகிதத்தை வாங்கிக் கொண்டாள். ஆவலோடு படித்துப் பார்த்தாள்.

''உனக்கு வாசிக்கத் தெரியுமா?''

''கொஞ்சம் தெரியும்'' என்று சொல்லி விட்டு அந்தப் பாட்டை அழகாகப் பாடிக் காட்டினாள். ''நாளைக்கு நான் வரும்போது, இந்தப் பாட்டை மனப்பாடம் செய்து, தெருவில் பாடி வர வேண்டும்'' என்று சொல்லிச் சென்றான். அவள் தலையசைத்தாள்.

ஆனால் ஏனோ, இரண்டு நாட்களாக அவன் வரவில்லை. மனத்தை மகிழ்வித்துக் கொண்டிருந்த ஏதோ ஓர் இனிய அநுபவம் நஷ்டமடைந்து விட்டாற்போல் அவள் விசனப் பட்டாள். நெஞ்சுக்குள் குமைந்திருந்த ஏக்கம் அவள் கருத்திலும் குரலிலும் புலப்படத்தான் செய்தது.

மூன்றாம் நாள் அவன் வந்தான். தெருப் பாடகி அவன் புனைந்து தந்த பாட்டை உவகையோடு பாடிக் காண்பித்தாள். இதற்குத்தான் இரு நாட்களாக அவன் ஏங்கிக் கொண்டிருந்தது. தன் பாட்டை இவ்வளவு கவி உணர்வோடு மிக இனிமையாக இதுவரையில் யாரும் பாடிக் கேட்டதில்லை அவன். பெருமை பூரித்தது அவனுக்கு. அவளைப் பெரிதும் அவன் பாராட்டினான்.

அவளுக்கு மட்டும் பெருமை கொஞ்ச நஞ்சமா? இந்தப் பாட்டைப் பாடியதால் அவளுக்கு நிறைய வரும்படி வந்திருக்கிறதாம். அதன் கருத்துச் செறிவைப் பலர் பாராட்டினார்களாம். அன்புடன் அளவளாவி விட்டு, அவன் பிரிய முற்பட்டபோது லஜ்ஜை நிழலாட ''இவ்வளவு அவசரமாக எங்கே போகவேண்டும் உங்களுக்கு?'' என்று கேட்டாள்.



பிசுக்கேறிய கந்தல் புடவைக்கு இடையிலே அவளுடைய மேனியின் வனப்பை அவன் களிப்புடன் காணத் தவறவில்லை. அழகாய் அகன்று நீண்டுள்ள கண்கள், துடிப்பான உதடுகள், புஷ்டியான கன்னங்கள், பூரித்த யௌவனம். ஓரிரு நிமிடங்கள் இருவரும் பேச்சொழிந்து பரஸ்பரம் பார்வையிலேயே லயித்திருந்தார்கள். பேச வேண்டியவைகளை யெல்லாம் அவளுடைய விழிகளே விளக்கிக் கொண்டிருந்தன.

''உன் வீடு எங்கேயிருக்கிறது? தாய் தகப்பன் எல்லோரும் இருக்கிறார்களில்லையா?'' என்று அவன் கேட்டான்.

அவள் முகம் சோர்ந்தது. கண்கள் கலங்கி விட்டன.

"எனக்கு யாரும் இல்லே" என்றாள். "இறந்து விட்டார்களா?" என்று கேட்டதும், "அம்மா காலராவிலே செத்திட்டாங்க. அப்பாவைப் பற்றி எனக்கு ஏதும் தெரியாது" என்று அழாக்குறையாகப் பதில் சொன்னாள்.

அவள் கதை உருக்கமாக இருந்தது.

ஒரு பெரிய வீட்டில் வேலைக்காரியாக இருந்தாள் அவளது தாயார். அந்தப் பெரிய வீட்டின் பெரிய மனிதர் ஒருவரின் சந்ததியாக அவள் பிறவி பெற்றாள். நிறை மாதக் கர்ப்பிணியாக இருந்த போதே அவள் தாய் அந்த வீட்டை விட்டு வெளியேற்றப்பட்டாள். தர்ம ஆஸ்பத்திரியில் பிரசவம். பத்து வயது வரையில் தாய் அவளை வளர்த்தாள். கடைசியில் ஒரு நாள் கோவில் மண்டபத்தில் காலராவுக்குப் பலியானாள். அன்றுமுதல் அவள் அநாதை. அவள் அவளுக்கும் நன்றாகப் பாட வருமாம்.

இதைக் கேட்டதும் அவன் தன் அநுதாபத்தைத் தெரிவித்தான். அவள் அவனைப் பற்றி விசாரித்தாள். அவனோ பிடி கொடுத்து ஏதும் சொல்லவில்லை. தனியாகத்தான் வசித்து வருகிறான். பாட்டுக்களும் கதைகளும் எழுதி வருகிறான். பல வருஷங்களாக எந்த வேலையும் பார்க்கவில்லை. வேலைக்காகத் தேடி அலைந்ததுமில்லை. இப்போதுதான் வேலைக்காக அலைந்து கொண்டிருக்கிறான். யாரும் வேலை கொடுக்க விரும்பவில்லை. இவ்வளவு தான் அவளுக்கு அவனைப் பற்றித் தெரியும்.

அன்று முதல் தினமும் இருவரும் சந்தித்து வந்தார்கள். ஒரு நாள் சந்திக்காவிட்டாலும் இருவருக்குமே இருப்புக் கொள்ளாது தவித்துப் போவார்கள். அவள் பாடுவதற்காகத் தினமும் அவன் புதுப் புதுப் பாட்டு புனைந்து கொடுப்பான். அவைகளை அவள் கவலை சிறப்புடன் பாடி அவனை மகிழ்விப்பாள். அவை மூலம் அவள் வருவாயும் அதிகரித்தது.

நாட்கள் கடந்தன.

ஒரு நாள் "எனக்கொரு வேலை கிடைத்திருக்கிறது. அச்சாபீஸில் எழுத்துக் கோக்கும் வேலையாக்கும்" என்று அவளிடம் சொன்னான் அந்த வாலிபன்.

மகிழ்ச்சியுடன் "உங்களுக்கு எவ்வளவு சம்பளம் கிடைக்கும்?" என்றாள்.

"நூறு ரூபாய்."

"நூறு ரூபாயா?" அவள் துள்ளிக் குதித்தாள். அவன் இரு கைகளையும் பற்றிக் குலுக்கியபடியே, "முதல் சம்பளம் கிடைத்ததும், எனக்கொரு சில்க் புடவை வாங்கித் தர வேண்டும். என்ன? அப்புறமும் நான் இப்படியே பாடிப் பிழைக்கும்படி விடமாட்டீங்க, இல்லையா? அப்புறம் எனக்கும் ஒரு ஜோடி வாங்கித் தருவீங்களில்லையா? சின்ன ஜோடியானாலும் சரி, போதும்" என்றாள்.

அவள் வெகு கலகலப்பாகப் பேசினாள். அவள் மகிழ்ச்சியைக் கண்டு அவன் புன்முறுவல் பூத்தான். சட்டென்று அவளுக்கொரு சந்தேகம். "வேலைக்கு இந்தக் கிழிசல் சட்டையோடா போகப் போகிறீர்கள்?"

அவனுக்கே இந்த விஷயம் இப்போது தான் நினைவுக்கு வந்திருக்கிறது. வேறு வழி? இத்துடன்தான் போக வேண்டும். புது உடுப்பு தயார் செய்யப் பணம் இல்லை. அவன் தலையைச் சாய்த்துக் கொண்டு ஆலோசித்தான். அவள் கையில் இருப்பவையெல்லாம் சில செப்புக் காசுகள்தான். வேதனை நெஞ்சை அழுத்தியது. தனது இல்லாமை—ஏலாமையைப்பற்றி நினைத்தபோது அழக்கூட அழுது விட்டாள் பேதை.

அவன் ஆறுதல் கூறிவிட்டுச் சென்றான். இரண்டு நாட்களுக்குள் வேலையை ஒப்புக் கொள்ள வேண்டும். பிறகு இப்படி வந்து சந்திக்க முடியாது.

அடுத்த நாள் அவனைக் காண அவள் வந்த போது அங்கே ஒரு சிறு கும்பல் கூடியிருந்தது. போலீஸ்காரர்களுக்கு இடையில் அவன் இருந்தான். கண் கலங்கி முகம் தொங்க, குன்றிப் போயிருந்தான். கையில் நல்ல கோட்டும், பேண்டும் இருந்தன. அவள் தன் அன்பன் கவிஞனைக் கண்டதும், உரக்க அழுது விட்டாள். அவன் அந்த உடுப்புக்களைத் திருடியிருக்கிறான் என்பது தெரிந்தது. அவனுடைய கன்னத்தில் கை விரல்கள் பதிந்து புடைத்திருந்தன.. போலீஸ்காரர்கள் அப்படி அவனை அடித்திருக்கிறார்கள் போலும்!

அவள் போலீஸ்காரர்களைத் தனியாக அழைத்து, ஏதோ சொல்லி அனுப்பி வைத்தாள். உடுப்புகள் உடைமைக்காரரிடம் திருப்பி அனுப்பப்பட்டன.

வேலை கிடைத்து விட்டதால் அவன் அவளை அடிக்கடி வந்து சந்திக்க முடியவில்லை. விடுமுறை நாட்களிலும் சில நாள் இரவுகளில் மட்டுமே சந்தித்து வந்தார்கள். முதல் தேதி வந்





"பாருங்க! அவரும் உங்க ஆபீஸ்தானே! உடனொத்தவர் சமையல் அறையை எவ்வளவு சுத்தமா வைத்துக்கொண்டு அழகா உட்கார்ந்து கொண்டு சமைக்கிறார்!"

தும் அவன் கேட்டுக் கொண்டபடியே ஒரு சில்க்குப் புடவை வாங்கி வந்தான். அவளுக்கு ஆனந்தம் கண்களில் பளபளத்தது; முகத்தில் பொலிந்தது. உடலில் பூரித்தது. உள்ளத்தில் இன்ப அலை பாய்ந்தது.

புடவையைத் தன் உடலோடு சேர்த்து வைத்துப் பார்த்தாள். நல்ல பொருத்தம். தெரு விளக்கின் ஒளிப் பொழிவில் தன் அன்பனை அவள் ஆசை தீரப் பார்த்தாள். நன்றியும் உவகையும் பெருக்கெடுத்து வந்தன. பேச முடியாத பரவச நிலையில் அவள் நெகிழ்ந்து நின்றாள். அவன் அன்புக் காணிக்கைக்கு மதிப்பளிக்க, சிறு அன்பளிப்பைத் தரக் கூடத் தனக்கு வக்கு இல்லையே என்பதை எண்ணிய போது அவள் குன்றிப் போனாள். முகத்தைக் கவிழ்த்துக்கொண்டு "எத்தனை நாளைக்கு நாம் இப்படியே இருக்கிறது?" என்றாள் மெள்ள.

"பின்னே?"

'இது கூட உங்களுக்குப் புரிய வில்லையா?' என்ற கருத்துடன் அவள் அவனைப் பார்த்தாள். 'ஐயோ, ஏன் இவள் கண்கள் கலங்கியிருக்கின்றன?' அவனுக்குத் தாளவில்லை. துண்டை எடுத்து அவள் கண்களைத் துடைத்து விட்டான். கவனத்தைத் திசை மாற்றத்தானோ என்னவோ அவன் சொன்னான்:

"நாளை மாலையிலே தான் இங்கே வருகிறேன். நாம் இருவரும் சினிமாவுக்குப் போய் விட்டு வரலாம்."

"சரி. நான் இந்த இடத்திலேயே காத்து நிற்பேன்." – குழந்தை மாதிரி குதூகலம் பொங்கச் சொன்னாள்.

மறு நாள் மாலை அவன் வந்து சேர்ந்தான். முன்னைப் போல் கால் நடையாக அல்ல. காரில் வந்து இறங்கினான். அவன் வாங்கித் தந்திருந்த சில்க் புடவையை உடுத்தி, முகம் கழுவிப் பொட்டிட்டுக் கொண்டு, துடிப்பும் துப்புரவும் துறுதுறுப்புமாக அவள் காட்சியளித்தாள்.

காருக்குள் அன்பனுக்கு அருகில் இணைந்து அமர்ந்து கொண்டாள். கார் காற்றில் மிதப்பது போல் பறந்தது.

கார் ஒரு பெரிய மாளிகைக்குள் நுழைந்தது. அவன் இறங்கி மாளிகைக்குள் சென்றான். அவள் பின்தொடர்ந்தாள். அங்கு உள்ளவர்கள் அவனைக் கண்டதும் எழுந்து நின்றதையும், மதிப்புடன் நோக்கியதையும் கண்டபோது அவளுக்குப் பெரும் வியப்பாக இருந்தது. ஒரு பெரிய அறைக்குள் இருவரும் நுழைந்தார்கள்.

அலங்காரமான அறை. நவீன சாதனங்கள் நிறைந்த அற்புதமான வசதி. அவளுக்குத் தெரியாத எத்தனையோ பொருள்கள் அந்த அறையில் காணப் பெற்றன.

"உட்காரேன்."

அவள் உட்காரத் தயங்கினாள். வியப்பில் அதிர்ச்சி அவளுக்கு இன்னும் அடங்கிய பாடில்லை. அவன் வற்புறுத்திக் கூறவே அவள் தயக்கத்துடன் அமர்ந்தாள். அலமாரியைத் திறந்து பெரிய புத்தகமொன்றை அவன் எடுத்தான். அதன் முகப்பில் 'பாடகி' என்ற வண்ண எழுத்துக்களில் எழுதப் பட்டிருந்தது. அவளுக்கு ஒன்றும் புரியவில்லை.

அவன் மெள்ளச் சொன்னான். "வாழ்க்கையை ஒட்டியதும், ஆனால் அபூர்வமானதுமான ஒரு சமூகக் கதையை எழுதத்தான் நான் அங்கே வந்தேன். என் வெகு நாளைய ஆவலை நிறைவேற்ற வரப்பிரசாதமாக நீ கிடைத்தாய். நாம் சந்தித்தது முதல் சமீபத்தில் நிகழ்ந்தது வரையில் எல்லாவற்றையும் இதில் எழுதியிருக்கிறேன். இந்த அரிய நவீனத்துக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுப்பதாக ஒரு சினிமாக் கம்பெனி முன் வந்திருக்கிறது. இந்தக் கதையை உருவாக்க உதவிய உனக்கும் தொகையில் பங்குண்டு. அதை இதோ வைத்திருக்கிறேன். எடுத்துக் கொள்" என்று சொல்லி ஒரு கத்தை நோட்டை அவளிடம் கொடுத்தான். ஆனால் அந்த இளைஞனுக்கு அந்தக் கருப் பாடகியின் முகத்தைப் பார்ப்பதற்குத் துணிவில்லை.

நிலம் சரிந்து, பெரும் பிளவாய்ப் பிளந்து, அவளை அப்படியே அதள பாதாளத்தில் தள்ளி விட்டாற்போல் இருந்தது அவளுக்கு.

கண்களா அவை! தீப்பிழம்பு போல் தகதகத்தன அவள் விழிகள். அவன் பயந்தேவிட்டான். நா எழவில்லை. அவள் அவன் கையிலேயிருந்து பணத்தை வாங்கி, அவன் முகத்திலேயே வீசி எறிந்தாள். அவளால் பொறுக்க முடியவில்லை. கதறி அழுதே விட்டாள். மறு கணமே அந்த அறையை விட்டு வேகமாக ஓடினாள் தெருவைப் பார்த்து.

மறு நாள் காலையில் அவள் எப்போதும் உட்கார்ந்து பாடிக் கொண்டிருக்கும் மரத்தடியில் அவள் மரித்துக் கிடப்பதை அவன் கண்டான். தேடி வந்த அவனுக்கு சில்க்புடவை ஒன்று மடித்து வைக்கப் பட்டிருந்தது கிடைத்தது. அவள் உடலைப் பழைய கந்தல் புடவை - அவளது சொந்த ஆடை - மறைத்திருந்தது. எப்போதும் தெளிந்திருக்கும் அவளது குறுகுறுப்பான களங்கமற்ற முகம் ஏனோ அந்த நிலையிலும் வெறுப்பினால் கறுத்திருந்ததுபோல் தோன்றியது அவனுக்கு.


FEDDERS

# அன்பே

அத்தியாயம் இருபத்துமூன்று

தகப்பனார் வரா விட்டால் அவள் மேலும் சொல்லிக் கொண்டிருப்பாள் போலிருந்தது. செவிடர்களுக்கே உள்ள சந்தேகப் பார்வையோடு அவர் நாலு பக்கமும் பார்த்து விட்டு டொக்கியிடம் சர்க்கரையைக் கொடுத்தார். "ஸ்டோரிலே கூட்டமா யிருந்தது. நாழியாகி விட்டது" என்றார் அனந்தசாமியைப் பார்த்து.

காப்பியைக் கலந்ததும், அனந்தசாமியைச் சமையலறைக்குள் கூப்பிட்டாள் டொக்கி. போய் உட்கார்ந்து கொண்டார் அவர். காப்பியைச் கடக்கட அவர் முன் வைத்து, "நான் ஆற்றித் தருகிறேன்...... அப்பா! அம்மாவுக்கும் குழந்தைக்கும் இதைக் கொடுத்து விட்டு வாருங்கள்" என்று ஒரு டபராவையும் டம்ளரையும் வைத்தாள். தகப்பனார் இரண்டையும் எடுத்துக் கொண்டு கூடத்தைக் கடந்து எதிர் அறைக்குள் சென்றார்.

அவர் போனதும், "அருண்குமாரைத் தெரியுமாமே, உங்களுக்கு?" என்று கேட்டாள் டொக்கி.

"யார் சொன்னார்கள்?"

"ரங்கன்."

"டான்ஸ் ஒத்திகைக்கு உன்னை நேத்திக்கு அழைச்சிண்டு போனாராமே, அருண்குமார்."

பதில் பேசவில்லை டொக்கி. காப்பி துரையைப் பார்த்துக் கொண்டே எங்கோ நினைவாக உட்கார்ந்திருந்தாள். உதட்டைக் கடித்து, கருவுகிறாற்போல் பெருமூச்செறிந்தாள். கண்ணில் நீர் ததும்பி வழிந்தது.

"என்னம்மா?"

வாயைத் திறக்காமல் தலையசைத்தாள் டொக்கி. நாலைந்து விநாடி கழித்து "இவன் எல்லாம் ஒரு மனுஷனாக நடமாடுகிறானே" என்று வெம்பினாள். பிறகு, "மாமா! இப்ப ஒன்றும் கேட்காதீர்கள்" என்றாள்.

அனந்தசாமிக்குக் காப்பியைச் சாப்பிடுவது போலவே இல்லை. "உங்கள் வீடு ரங்கன் மாமாவுக்குத் தெரியுமோ?" என்று கேட்டாள்.

"தெரியும்!"

"நான் வரலாமோ அங்கே?"

"என்னம்மா இப்படிக் கேட்கிறாய்?"

"இல்லை மாமா, நான் உறவுக்காரர்கள் வீட்டுக்குப் போவதில்லை. ஒரு தினுசாகப் பார்க்கிறார்கள், எல்லாரும்."

"நான் உனக்கு உறவுக்காரன் இல்லையே. நீ தாராளமாக வரலாம்."

"ரங்கன் சாரோடு வந்து நான் எல்லாவற்றையும் சொல்லி ஆற்றிக் கொள்ள வேண்டும்."

இவ்வளவு சிறிய இருதயத்தில் இவ்வளவு கசப்பு எப்படி வந்தது என்று பொருமினார் அனந்தசாமி. பேச்சை



# ஆரமுதே

மாற்றியாவது அவள் மனத்தைத் திருப்ப வேண்டும் போலிருந்தது அவருக்கு.

''நீ சாப்பிடலை, காப்பி?'' என்றார்.

''இதோ'' என்று கூறி விட்டு டொக்கி பால் கெட்டியில் இருப்பதை ஒரு சின்ன டம்ளரில் கவிழ்த்துச் சாப்பிடத் தொடங்கினாள்.

''பாதி டம்ளர் கூட இல்லையேம்மா. இந்தா, எனக்கு இவ்வளவு வேண்டாம். கொஞ்சம் எடுத்துக் கொள்.''

''வேண்டாம், மாமா!'' என்று டம்ளரைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள். சாப்பிடவும் இல்லை. டம்ளரைக் கையால் மூடியவாறு எங்கேயோ நினைவிழந்திருந்தாள். அவள் முகம் சிணுங்கிற்று.

''என்னம்மா?''

''நினைக்க நினைக்க உடம்பெல்லாம் கூசுகிறது, மாமா! வெளியிலே தலைகாட்ட முடியாது போலிருக்கிறது. நினைத்தாலே 'திக் திக்' என்கிறது. உயிரை விட்டுவிட்டால் தேவலைபோலிருக்கு......''

''எதை நினைத்தால்?''

''நேற்று ராத்திரி நான் ஒத்திகைக்குப் போகவில்லை, மாமா!'' என்றாள் டொக்கி அழாக்குறையாக.

''பின்னே?''

''அப்படிச் சொல்லித்தான் அழைத்துப் போனான். கார் போய்க் கொண்டேயிருந்தது. ஸ்டுடியோவும் எதுவும் வரவில்லை. தாம்பரம் தாண்டிப் போயிற்று கார். மேலெல்லாம் நட்சத்திரம்; இரண்டு பக்கம் மரம்-பொட்டல்வெளி. 'எங்கே போகிறோம்' என்று கேட்டேன். எனக்குப் பயமாயிருந்தது. அருண்குமார் சிரித்தான். சொல்லுகிறேன் என்றான். சிரித்துச் சிரித்துப் பேசினான். வேடிக்கை பண்ணினான். எனக்குப் பயம் தெளிந்துவிட்டது. கடைசியில் வண்டி பாண்டிச்சேரிக்குப் போய் விட்டது. ஒரு ஹோட்டல் வாசலில் போய் நின்றது.

அவள் முகம் மீண்டும் சிணுங்கிற்று.

''மாமா! என்னை ஒன்றும் கேட்காதீர்கள், மாமா!'' என்றாள்.

''இல்லை'' என்றார் அவர். அவளுடைய சமாதானத்துக்காகத்தான் இல்லையென்றார். அவர் ஒன்றுமே கேட்கவில்லை. அவளாகத்தான் எல்லாவற்றையும் சொல்லிக் கொண்டிருந்தாள்.

அவளுக்கு மேலும் தைரியம் ஊட்டுவதற்காக ''எனக்கும் எல்லாம் தெரியுமம்மா. ரங்கன் சொன்னார் எல்லாவற்றையும்'' என்றார்.

தி. ஜானகிராமன்



"தெரிந்து கொண்டா இங்கே மறுபடியும் வந்தீர்கள்?" என்று நன்றி கலந்த குழப்பத்தில் கேட்டான் அவன்.

"நான் உனக்கு உறவுக்காரன் இல்லேயே?" என்றார்.

"ரங்கன் எல்லாம் சொன்னாரா?"

"ஆமாம், நீ முதலிலேயே ஒரு தடவை போனயாமே பாண்டிச்சேரிக்கு?" என்று கேட்டார் அவர் காயத்தை அறுப்பது போல.

"ஆமாம், மாமா. அப்பொழுது பகல். நிஜமாகவே அப்பொழுது எங்கேயோ ஷூட்டிங் நடந்தது. நான் அவன் கூட இருந்து பார்த்தேன். பாண்டிச்சேரியில் அரை மணிகூடத் தங்கவில்லை, அவன். அது பகல் காலம் மாமா. சூரியன் காப்பாற்றினார். நேற்று அவர் இல்லை; கைவிட்டு விட்டார்."

தலையைக் குனிந்துகொண்டான் டொக்கி.

"ரங்கன் வந்து மத்தியானம் கத்தினார். நான் என்ன செய்வேன்?" என்றான் அவன்.

வயதுக்கு மீறிய புத்தி அவனுக்கு. குடும்பத்தில் அடிபட்டு, அடிபட்டு, பேச்சு முதிர்வு. நினைத்து நினைத்து மறுகுகிற இளக்கம் எல்லாம் அவனிடம் அளவு மீறியிருந்தது. எல்லாம் இருந்து ஏமாந்துவிட்டானே என்று நினைத்தார்.

"காப்பி சாப்பிட்டீர்களா?" என்று விசாரித்துக் கொண்டே வந்தார் ராஜாங்கமய்யர்.

"ஆயிற்று."

அவரும் கலகலப்பாகப் பேசவில்லை.

முக்கியமில்லாத ஒரு காரியம் ஞாபகம் வந்தது போல, "மாமா! உங்கள் மருந்து ஒரு வேளை சாப்பிட்டதே பலம் வந்திருக்கிறாற் போலிருக்கிறதாம், அம்மாவுக்கு" என்றான் டொக்கி.

கிழவரும் வெகு நேரம் பேசவில்லை. ஆனால் ஏதோ சந்தேகமாகப் பார்த்துக் கொண்டேயிருந்தார். அனந்தசாமி விடைபெற்றுக் கொள்ளும்போது அவரும் கூடவே அவரோடு நடந்தார்.

"நீங்கள் நின்று கொள்ளுங்கள்" என்றார் அனந்தசாமி.

"பரவாயில்லை" என்று கூடவே வந்தார் அவர். அவர் ஏதோ தம்மிடம் சொல்ல நினைப்பதுபோல் தோன்றியது அனந்தசாமிக்கு.

கிழவர் ஏதோ சொல்ல நினைத்தார். ஆனால் இன்னும் சொல்லவில்லை. அனந்தசாமி அவரைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வந்தார். தெரு விளக்கின் வெளிச்சத்தில் கிழவரின் முகம் நன்றாகத் தெரிந்தது. ஒரு கணப்பொழுது தெரிந்த அந்தக் கண்ணில் உதட்டின் கோய்வில், புருவத்தின் தூக்கலில் அனந்தசாமியின் மனம் செருகிக் கொண்டு நின்றது. சொல்ல முடியாத துக்கத்தை நெஞ்சில் நிறுத்தி, வெளியேயும் விடாமல், உள்ளேயும் தள்ளாமல் கிழவர் பரப்பது போலிருந்தது. அனந்தசாமிக்கு இரக்கம் சுரந்தது. அதற்குக் காரணம் தெரியவில்லை. காரணம் மட்டும் இருக்க வேண்டும். டொக்கி சொன்னது ஏதாவது இந்தச் செவிட்டுக் காதில் விழுந்து விட்டதா? இல்லை, காதின் உதவி யில்லாமல், இவருடைய மனமே நேராக அவன் மனத்திலின்றே கேட்டு விட்டதா?

மந்தை வெளியிலிருந்து சந்து பொந்தெல்லாம் நுழைந்து வளைந்து கபாலி கோயில் தெற்கு மாட வீதி வந்து ஏறினார்கள் இருவரும். கிழவர் இன்னும் ஒன்றும் சொல்லவில்லை. தனக்கு ஏதும் அறிய ஆவல் இல்லை என்று காண்பிப்பதற்காக, "நான் வருகிறேன். நீங்கள் நின்று கொள்ளுங்கள்" என்றும் ஜாடையும் பேச்சுமாகச் சொல்லி நின்றார் அனந்தசாமி.

"இல்லை, பஸ் ஸ்டாண்ட் மட்டும் உங்களுடன் வருகிறேன்."

"நான் நடந்துதான் போகப் போகிறேன்..." என்றார் அனந்தசாமி.

"வீடு வரையிலா?"

"ஆமாம்."

"ராயப்பேட்டை வரைக்கும் ரொம்பத் தூரமாச்சே."

"பழக்கம் அப்படி."

அவருடைய விலாசத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டார். மறுபடியும் மென்று மென்று விழுங்கினார்.

"என்ன?"

"மனிதர்கள் இல்லாத இடமாகப் பார்த்து ஒரு பத்து நிமிஷம், கால்மணி எனக்குக் கிடைத்தால் போதும். உங்களிடம் வேகமாகச் சொல்லி விடுவேன்" என்று இடுப்பில் இரு கைகளையும் வைத்துத் தரையைப் பார்த்தார் கிழவர். அவர் செவிடானதால், உலகம் முழுவதற்கும் காது ரொம்பக் கூர்மை என்ற நினைத்து விட்டாற் போலிருக்கிறது.

கூட நடந்து கொண்டே வந்தவர், "வாருங்களேன்... இப்படித்தான் போவோம்" என்று மறுபடியும் கிழக்கே கையைக் காண்பித்தார். "உங்களுக்கு அவசரமாகப் போக வேண்டுமோ?"

"இல்லை."

"காற்றாட பீச்சுக்குப் போய் உட்கார்ந்து விட்டு வரலாமே."

"ம்.."

கச்சேரி ரோட்டில் ஏறி நடந்து இருவரும் சாந்தோம் கடற்கரையின் படிக்கட்டுகளில் இறங்கி, 'மணலை அளைந்து

# பின்டெக்ஸ்




## கைத்தறித் துணிகள்

அழகானவை; நீடித்து
உழைப்பவை;
சாயம் போகாதவை

**பின்னி**யால் விற்பனை செய்யப்படுபவை

| லுங்கிகள் | தலையணை உறைகள் | புடவைகள் |
| --- | --- | --- |
|  |  |  |
| படுக்கை விரிப்புகள் | வேஷ்டிகள் | அலங்காரத் துணிகள் |
|  |  |  |

டவல்கள்



பின்டெக்ஸ் கைத்தறித் துணிகளை தயங்காமல் வாங்குங்கள். நெசவாளர்களுக்கு, அறுகாத கடினமான நூலை கொடுக்கவும், சிறந்த ஆலோசனை கூறவும், நல்ல டிசைன்களை தேர்ந்தெடுத்துக் கொடுப்பதிலும் பின்னி உதவுகிறது. பின்டெக்ஸ் துணிகள் நீண்ட நாள் உழைக்க வல்லதென்றும், சாயம் போகாததென்றும் பின்னி உறுதியளிக்கிறது.

ஷர்ட்டிங்குகள்



இந்த அடையாளம் காணப்படும் அனுமதி பெற்ற பின்னி மில் கடைகளில் பின்டெக்ஸ் கைத்தறித் துணிகள் கிடைக்கின்றன




பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்
மதராஸ்

JWT/BY/BX-1396

கொண்டே, அலைக்கருகில் உட்கார்ந்து கொண்டார்கள். பீச்சில் கூடியிருந்த மாலைக் கூட்டம் சிறிது சிறிதாகக் கரைந்து கொண்டிருந்தது. இங்கு மங்குமாக ஏதேதோ மனித உருவங்கள் தெரிந்தன. வீடில்லாதவர்கள், வீடிருந்தும் இல்லாதவர்கள். அலையின் இரைச்சலில் தங்கள் அழுகையை அமுக்க அடிக்க வந்தவர்கள், தீவிரமாகக் கவலைப்படுகிறவர்கள், தீவிரமாகச் சிந்திக்கிறவர்கள், சிந்தனை செய்தே பழக்கமில்லாமல் மனமே சோம்பேறியாகப் பிறந்த சாதுக்கள் - அனந்தசாமி எல்லாவற்றை ஈம் பார்த்தார்.

தொப்பென்று ஓர் அலை ஓங்கியடித்து விழுந்து மீண்டும், விடாமல் உறுமிய ஹோஹாகாரத்தில் கலந்து கொண்டது.



"குழந்தை ஏதாவது சொன்னாளோ உங்களிடம்?" என்று கேட்டார் கிழவர்.

"அவள் ஏதோ ஜாடை மாடையாகச் சொன்னாள்."

"இனிமேல் உங்களைப் போன்ற சிநேகிதர்கள் தான் அவளை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்..! நான் மத்தியானமும் இதையே சொல்லி யிருப்பேன், மரியாதைக்காக. ஆனால் இப்பொழுது மனப்பூர்வமாக, ரொம்பத் தாங்க முடியாமல் சொல்கிறேன்."

அவர் மேலே என்ன சொல்லப் போகிறார் என்று பார்த்தார் அனந்தசாமி. சற்று நின்று விட்டு மேலே தொடர்ந்தார் கிழவர். "ஏன் அப்படிச் சொல்கிறேன் என்றால், இனிமேல் அவள் திரும்பி வரமுடியாது." கிழவரின் குரல் நடுங்குவது போல் தோன்றிற்று.

புரியாமல் அவரைப் பார்த்தார் அனந்தசாமி.

"ஏதோ வந்தோம். அவள் மனோரதம் நிறைவேறினால் சரி; இல்லாவிட்டால் திரும்பி ஊருக்கே போய், ஒரு கலியாணத்தைப் பண்ணிவைத்து விடலாம் என்ற யோசனையோடுதான் வந்தேன். இப்பொழுது அந்த மாற்று யோசனை மிதிபட்டுச் செத்துப் போய் விட்டது." இவ்வளவு அழுத்தமான சொற்பிரயோகத்தை, அவரிடமிருந்து கேட்டதும் அனந்தசாமிக்குச் சுருக்கென்றது. சற்று முன்பு பட்ட பூரக்கத்துக்குக் காரணம் எங்கேயோ அடிவானத்தில் உதயமாவது போலிருந்தது.

"காலையில் நீங்கள் வந்தீர்களே, அப்பொழுதெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது. ஒத்திகைக்குப் போயிருந்தாள் என்றுதான் நினைத்திருந்தேன். அப்புறம் ரங்கன்கூட வந்து கேட்டார்: 'எங்கே போயிருந்தாய்?' என்று. 'ஒத்திகைக்கு' என்றுதான் டொக்கி சொன்னாள். அவர் துருவித் துருவிக் கேட்டார். எனக்குக் கூட இப்படிக் கேட்கிறாரே என்றிருந்தது. இவ்வளவு சுவாதீனமாகக் கேட்கிற போது கோபம் கூட வந்தது. அப்புறம் சாயங்காலம் ஐந்தரை மணி ஆறு மணி இருக்கும்—நீங்கள் வருவதற்கு அரை மணிமுன்னால்தான் ஒரு ஆள் வந்தான். அருண்குமார் கொடுத்துவிட்டு வரச்சொன்னார் என்று ஒரு கவரைக் கொடுத்துவிட்டுப் போனான் குழந்தையிடம். குழந்தை அதை வாங்கிப் பிரித்தாள். நூறு ரூபாய்நோட்டாக ஆறு இருந்தது. வேறு கடுதாசா இடுதாசா ஒன்றும் இல்லை. அப்படியே அம்மாவிடம் கொண்டு கொடுத்தாள். என்னை நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை. அப்படியே சுவரில் சாய்ந்து காலை மடக்கி உட்கார்ந்து விட்டாள். பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்திருந்தாளாம். தானே சிரித்துக் கொண்டாளாம். நிஜச் சிரிப்பு இல்லை. கோபமும் வெறுப்புமாகச் சிரித்தது மாதிரி இருந்ததாம். 'என்னடி என்னடி?' என்று அம்மா கேட்டதற்குப் பதில் சொல்லவில்லை. சற்றுக் கழித்துக் கண்ணால் தாரை தாரையாக ஜலம் கொட்டியிருக்கிறது. அம்மா ஒன்றும் புரியாமல் அவள் மனசைத் திருப்புவதற்காக ரூபாய் நோட்டுகளை அவள் கையில் கொடுத்து, 'சரி, இதை எடுத்து உன்னை பத்திரமாக வை' என்று சொன்னாளாம். அவ்வளவுதான்; டொக்கி அந்த நோட்டுக்களைக் கசக்கி மூலையில் எறிந்தாளாம். உடனே இந்த ராக்ஷசிக்குப் பதறிப் போய் விட்டது. சிக்காகக் கிடக்கிறவளுக்கு எங்கிருந்தோ

பலம் வந்து விட்டது. உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு எழுந்து மூலையில் எறிந்த நோட்டுகளை எடுத்துப் பத்திரப் படுத்தி யிருக்கிறாள்.''

முதன் முதலாகத் தம் மனைவியைப் பற்றி இப்படிப் பேசினார் கிழவர். வீட்டில் பார்த்த கிழவருக்கும் இங்கே பேசுகிற கிழவருக்கும் எத்தனை வித்தியாசம்!

''அப்பொழுது நான் அகஸ்மாத்தாக உள்ளே போனேன்'' என்று மேலும் தொடர்ந்தார் கிழவர்.

டொக்கி அவர் உள்ளே வந்ததும் இன்னும் அதிகமாகக் கண்ணீர் விட்டிருக்கிறாள். அவரோடு பேசுவதென்றால் இரைந்து கத்த வேண்டும். ஒரு காகிதத்தையும் பென்சிலையும் எடுத்துக்கொண்டு வெளியே போனாள். கிழவர் கூடவே ஓடி யிருக்கிறார். நல்ல வேளையாக அவள் வாசலுக்கு ஓடவில்லை. சமையலறைக்குள்தான் போனாள். அவர் பார்க்கும்படியாக, பயந்து போகாமலிருக்க, அவர் எதிரேயே உட்கார்ந்து என்னமோ விறு விறு என்று எழுதினாள். மனைவியைப் பார்த்து ''என்ன? என்ன?'' என்று கேட்டார் அவர். அவள் உதட்டைத்தான் பிதுக்கினாள். ஐந்து நிமிஷங்களில் டொக்கி உள்ளே வந்து, அவரிடம் கடுதாசைக் கொடுத்து விட்டு எதிரேயே உட்கார்ந்து விட்டாள்.

''அப்பா, எனக்கு இனிமேல் உங்கள் முகத்தில் விழிக்க யோக்கியதை இல்லை. நேற்று ராத்திரியிலிருந்து அப்படி ஆகிவிட்டேன். இதுவரைக்கும் அதை மறைத்து மூடினதற்காக என்னை மன்னித்து விட வேண்டும். இல்லா விட்டால் நீங்கள் என்ன தண்டனை கொடுத்தாலும் ஏற்கத் தயாராயிருக்கிறேன். உங்களை ஏமாற்றிய இந்தக் கிராதகிக்குத் தகும். நேற்றிரவு புதுச்சேரிக்குப் போய்ச் சேர்ந்ததும் எனக்கு எல்லாம் போய் விட்டது. எல்லாம் இழந்தபிறகு இப்பொழுது எனக்குப் பயமாயிருக்கிறது. வெளிச்சத்தைப் பார்ப்பதற்கே கூசுகிறது. தெருவைப் பார்க்கவே முடியவில்லை. மெட்ராசுக்குப் போக வேண்டும் என்று நான்தான் அடம் பண்ணினேன். வஞ்சனையில்லாமல் நீங்கள் அழைத்து வந்தீர்கள். அதற்குக் கைமேல் பலன் கிடைத்து விட்டது. நீங்கள் யாருக்கும் கெடுதல் செய்யவில்லை. மாமா உங்கள் பணத்தைச் சாப்பிட்டு ஏமாற்றின போது கூட நீங்கள் கோபமாக ஒரு வார்த்தை சொல்லவில்லை. உங்கள் நல்ல சுபாவம் இந்தப் பாவிக்கு நல்ல புத்தி கொடுப்பதற்குப் பதிலாக அசாத்திய அசட்டுத் தைரியத்தைக் கொடுத்து விட்டது. கிணற்றில், குளத்தில் விழுந்து உயிரைப் போக்கிக் கொள்ள வேண்டும் போலிருக்கிறது. ஆனால் அது உங்களுக்கு நேர்ந்த அவமானத்தை இன்னும் அம்பலப்படுத்தி உங்களைத் துடிக்க வைத்து விடுமே என்று அந்தத் தைரியமும் இல்லாமல் தவிக்கிறேன். மறுபடியும் நிஜத்தைச் சொல்கிறேன். அருண்குமார் எனக்கு ஏதாவது வழிகாட்டி விடுவான் என்று நம்பிக் கொண்டுதான் எல்லாவற்றையும் மறைத்து விட்டேன் இன்று காலை. ஆனால் இந்த ரூபாயைக் கொடுத்தனுப்பி யிருக்கிறான் அவன். எந்தவிதத்திலும் கட்டுப் பட்டவன் இல்லை என்று காண்பிக்கத் தான் இப்படிச் செய்திருக்கிறான். இவன் மனுஷன் இல்லை, மிருகம்.

உலகமே சுற்றிக் கொண்டிருக்கிறது மூளை மனசு எல்லாம் கலங்கிக்கிடக்கின்றன. என்ன செய்கிறோம் என்று ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை.

உண்மையைச் சொல்லி விட்டேன். நீங்கள் என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடுங்கள். அடுத்த வீடு, அண்டை வீட்டுக்குத் தெரியாமல், கத்தாமல், இரையாமல், பெற்று அனுபவிக்கிறேன்.''

வாசித்து விட்டு நிமிர்ந்திருக்கிறார் கிழவர். டொக்கி விசித்து விசித்து அழுதுகொண்டிருந்தாள். முகத்தில் விழிக்கக் கூசினவள்தான். ஆனால், அவருக்கு எதிரேயே குறுத்துப் போன்ற அந்த மனம் படுகிற பாட்டைப் பட்டுக் கொண்டிருந்தது. மறைவில் போய் அழ அவளுக்கு முடியவில்லை போலிருக்கிறது. போகமுடியாமல் ஏதோ அவளைக் கட்டிப் போட்டு அங்கேயே கிடத்தி யிருந்தது.

பேசிக் கொண்டே கிழவர் நிறுத்தினார். கண்ணைத் துடைத்துக் கொண்டு, ''ஸ்வாமி, எனக்குக்கூடத் தூக்கு மாட்டிக் கொண்டு தொங்க வேண்டும் போலிருக்கிறது. ஆனால் அது மானத்தைக் காப்பாற்றுகிற வழி இல்லையே. குழந்தை எழுதி யிருக்கிறாளே, அது மாதிரி இன்னும் அவமானத்தைத் தமுக்கடித்துச் சொல்கிறாற் போலத்தானே. எனக்கு ஒன்றும் புரியவில்லை. தலையில் கையைவைத்து உட்கார்ந்து விட்டேன். கண் பஞ்சு பறக்கிறது. காது அடைக்கிறது. அப்பொழுது தான் நீங்கள் வந்தீர்கள். உங்களிடமும் மறைத்து விடலாம் என்றுதான் பார்த்தேன். குழந்தை உங்களிடம் சொன்னதாக ஜாடையாகச் சொன்னாள். பிறகு தைரியம் வந்து விட்டது. முன்னாலேயே உங்களிடம் சொல்லித் தீர்த்து விட்டால், இன்னுமாவது பரவாமலிருக்கும் என்று நம்பிக்

கொண்டே இப்பொழுது சொல்லி விட்டேன்'' என்று தொலைவில் பார்த்தார் பெரியவர்.

அனந்தசாமியும் தொலைவில் பார்த்தார். நெடுந் தொலைவில் நீதி மன்றத்தின் கலங்கரை விளக்கம் மங்குவதும் ஓங்குவதுமாக மாறி மாறி விழித்துக் கொண்டிருந்தது. நீதி மன்றத்தின் மீது இந்த விளக்கை வைக்க வேண்டும் என்று யாருக்குத் தோன்றியது என்று உள்ளேயே கேட்டுக் கொண்டார் அவர்.

எது பெரிய காரியம், எது சின்ன விஷயம் என்றே அவருக்குப் புரியவில்லை. எவ்வளவு பெரிய காரியத்தை, சர்வ சாதாரணமான, சின்ன விஷயமாக நினைத்து விட்டான் இந்த அருண்குமார். இம்மாதிரி அடாத செயல்களைக் கிராமப் புறங்களில் இப்படித் துணிச்சலாக, சுலபமாகச் செய்து விட முடியுமா? ஏன் முடியாது! இந்த உலகத்தில் எதுவும் பெரிய காரியம் என்றோ, சின்னக் காரியம் என்றோ சொல்வதற்கில்லை. எதுவும் நடக்கும். பெற்றவர்கள் கலியாணம் செய்வதற்காகப் படாத பாடு படுகிறார்கள். காலம் காலமாகக் காத்து, கவலையைச் சுமந்து அலைகிறார்கள். இங்கே எதிர் பாராமல்...

## சொன்னபடி செய்தால்.....?










என்ன இது....?

யார் நாம்? நம் இஷ்டப்படி நம்மை இயக்கிக் கொள்கிற ஜீவன்களா? இல்லை, காலத்தின் சூறைக் காற்றில் சிக்கிப் பறக்கின்ற துரும்புகளா? சூறைக் காற்றில் கூட வேண்டாத, சிறு காற்றிலேயே லட்சியத்தை நழுவ விட்டு மிதக்கும் இலவ விதைகளா?.. எப்படி? எப்படி இந்தநாசம் இவ்வளவு சுலபமாக நிகழ்ந்து விட்டது?

அனந்தசாமிக்குக் கோபம் வரவில்லை. துயரமும் எண்ணத்தைக் கூடச் செயல்படாமல் ஒடித்துப் போடுகிற ஒரு மந்தமும் அவர் மனத்தில் காடி துரையாக நொதித்து கிடந்தன. அந்த நொடியில் புத்திக் கூர்மை கூட மழுக்கப்பட்டு விட்டது போல் எங்கேயோ பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். தெளிவாக எதையும் நினைத்து, அலச முடியவில்லை.

(தொடரும்)

# கிருஷ்ணபுரத்து வேங்கடநாதன்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

சோழநாட்டில் ஒரு ராஜகுமாரி. அடுத்துள்ள பாண்டி நாட்டிலே ஒரு வீரன். ஊழ்வினை வசத்தால் எடுப்பாரும் கொடுப்பாரும் இன்றி ஒருவரையொருவர் பார்க்கின்றனர். காதல் கொள்கின்றனர். ஆனால் இரண்டு நாட்டுக்குமோ தீராப் பகை. அதனால் சோழ நாட்டு ராஜகுமாரியைப் பாண்டிய நாட்டு வீரன் மணம் முடிப்பது என்பது இயலாத காரியமாக இருந்தது. இருந்தாலும் இவர்களது காதல் தாபம் தணியவில்லை. கடைசியில் ராஜகுமாரியை அவளது கட்டுக்காவலிலிருந்து வீரன் அழைத்துச் சென்று விடுவது என்று ஏற்பாடு செய்து கொள்கிறான். அதற்கிசைகிறாள் ராஜகுமாரியும். குறிப்பிட்ட நாளிலே வீரன் ராஜகுமாரியை உடன் அழைத்துச் சென்று விடுகிறான். செய்தி தெரிந்து விடுகிறது சோழநாட்டு வீரர்களுக்கு. பாண்டிய நாட்டு வீரனை மடக்கி மங்கையை மீட்டுச் செல்ல முனைந்து வருகிறார்கள். அதற்கெனக் குதிரைகளிலே ஏறிப் பாண்டிய நாட்டு வீரனைப் பிடிக்க வருகிறார்கள். வீரனோ ராஜகுமாரியையும் இழுத்துக்கொண்டே செல்ல வேண்டியிருக்கிறது. அவளாலோ விரைந்து நடக்க முடியவில்லை. ஆதலால் அவளை அப்படியே தன் தோளின் மீது ஏற்றிக் கொள்கிறான்; அவளைச் சுமந்து கொண்டே ஓடுகிறான். சோழ நாட்டின் எல்லையைக் கடந்து பாண்டி நாட்டிற்குள் நுழைந்து விட்டால் சோழநாட்டு வீரர்களால் ஒன்றும் செய்ய முடியாதல்லவா? எல்லை நெருங்குகிறது. அதற்குள் நெருங்கி விடுகிறார்கள் சோழ நாட்டு வீரர்கள். குதிரையிலிருந்தே நீண்ட ஈட்டியை ஓடும் வீரனின் விலாவில் பாய்ச்சுகிறார்கள். ஈட்டி பாய்ந்த இடத்தில் ரத்தம் பெருகுகிறது. பாண்டிய நாட்டு வீரனோ பகை அரசரின் வீரர்களோடு போரிட்டு அவர்களையெல்லாம் வெல்லக் கூடியவன்தான். என்றாலும் தன்னுடன் வந்திருக்கும் ராஜகுமாரியைச் சோழநாட்டு மண்ணிலே இறக்கிவிட விரும்பவில்லை. ஆதலால் விரைந்தே ஓடிப் பாண்டிய நாட்டின் எல்லையை அடைந்து விடுகிறான். வெற்றி அவனுக்கே. இந்த நிலையில் வீரனின் தோள்களில் ஆரோகணித்து இருந்த ராஜகுமாரிக்கோ ஒரே மகிழ்ச்சி. காதலனுடன் சென்று அவனுடன் இன்ப வாழ்வு நடத்தப் போகிறோம் என்ற உள்ளத்தில் எழும் பூரிப்பு அவள் முகத்திலே பிரதிபலிக்கிறது.

இப்படி ஒரு கதை. ஆனால் இவ்வளவும் உண்மையாய் நடக்கவில்லை. தமிழ் நாட்டுச் சிற்பி ஒருவன் ஒரு நாள் மாலை ஊருக்கு வெளியே உலாவப் புறப்படுகிறான். அங்கே ஒரு பாறையைப் பார்க்கிறான். அப்பாறையில் இயற்கையாகச் செந்நிற ரேகைகள் ஓடுவதைக் காண்கிறான். அந்தப் பாறையையும் அதில் ஓடிய செந்நிற ரேகைகளைச் சுற்றிச் சுற்றி அவன் எண்ணம் ஓடியிருக்கிறது. பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கையில் 'உடன் போக்கு' எல்லாம் உண்டு என்பதை அறிந்தவன் ஆயிற்றே. அதனால் அவனது எண்ணத்தில் ஒரு கற்பனை. ஆம்! முன் கூறிய கற்பனைக் கனவு உருவாகி யிருக்கிறது. அந்தப் பாறையை வெட்டிச் செதுக்கி அதில் தன் சிற்றுளி வேலையைக் காட்ட முனைகிறான்.



வீரபத்திரன்

அவ்வளவுதான் கல்லிலே உருவாகி விட்டார்கள் கன்னி, காதலன், சோழ நாட்டு வீரர்கள், அவர்கள் குதிரைகள், அவர்கள் ஏந்திய ஈட்டிகள் எல்லாம். பாறையில் கண்ட சிவப்பு ரேகைகள் வீரனின் விலாவில் வடியும் ரத்தப் பெருக்காக அமைந்து விடுகின்றன. கல் உயிர் பெற்று விடுகிறது. இந்தச் சிலை வடிவை ஒரு தூணாக நிறுத்திவிடுகிறான் சிற்பி கிருஷ்ணபுரத்துத் திருவேங்கடநாதன் சந்நிதியில். அந்தக் கிருஷ்ணபுரத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

கிருஷ்ணபுரம் திருநெல்வேலியிலிருந்து கிழக்கே எட்டு மைல் தூரத்தில் உள்ள சிற்றூர். திருநெல்வேலி திருச்செந்தூர் ரோட்டில் செல்லும் நெடுஞ்சாலைப் பொறியர்கள் கிருஷ்ணபுரம் கலைச் சிற்பங்கள் என்று எழுதி ஒரு போர்டு நாட்டிக் கோயிலுக்குச் செல்லும் வழியைக் குறிப்பிட்டிருப்பார்கள். ரயிலிலே செல்பவர்கள் செய்துங்க நல்லூர் (ஆம் செய்து உண்க நல்லூர் அல்ல, ஜெயதுங்கன் நல்லூர்தான்) ஸ்டேஷனில் இறங்கி வண்டி வைத்துக் கொண்டு மேற்கு நோக்கி இரண்டு மைல் வரவேணும். அப்படி வந்து ரோட்டை விட்டு இறங்கி இரண்டு பர்லாங்கு

பணந்தோப்பு வழியாக நடந்தால் திருவேங்கடநாதன் கோயில் வாயில் வந்து சேரலாம். இந்தத் திருவேங்கடநாதன் புராணப் பிரசித்தி சரித்திரப் பிரசித்தி எல்லாம்பெற்றவர் அல்ல. காரணம் இக்கோயில் ஒரு பெரிய சிற்பக்கலைக் கூடமாகவே இருக்கிறது. கோயில் வாயிலில் ஒரு நல்ல கோபுரம். அந்தக் கோபுரத்தையும் முந்திக்கொண்டு ஒரு மண்டபம். மண்டபத்தைக் கடந்து கோயில் வாயிலுள் நுழைந்தால் முதல் முதல் நாம் காண்பது ரங்க மண்டபம். அந்த மண்டபம் தெற்கே பார்த்திருக்கிறது. அதன் முகப்பில் ஆறு தூண்களில் ஆறு அழகிய சிற்ப வடிவங்கள். அதில் ஒன்றுதான்



ரதிதேவி

நான் முன்னர் குறித்த சிற்ப வடிவம். வீரனின் தோள்களில் சோழ ராஜகுமாரி உட்கார்ந்திருக்கிற நேர்த்தியும், அவள் வெயிலுக்காகத் தன் முந்தானையை விரித்துத் தலைக்கு மேல் பிடித்திருக்கிற அழகும் சிறப்பாயிருப்பதைப் பார்ப்போம். வைத்த கண் வைத்த படியே பார்த்துக் கொண்டிருக்கச் செய்யும் சிலா வடிவம். மற்றைய தூண்களிலோ பாசுபத அஸ்திரம் பெறத் தவக்கோலம் பூண்ட அர்ச்சுனன், அவனோடு தீராப் பகைமை பூண்ட அந்த அங்க தேசத்து மன்னன், புகழ் பெற்ற கொடையாளி கர்ணன், இன்னும் அரசிளங் குமரனைச் சுமந்து நிற்கும் குறப் பெண் ஒருத்தி, இன்னும் இரண்டு பெண்களின் சிலை வடிவங்கள். பெண்களின் வடிவெல்லாம் கண்டார் கண்ணையும் கருத்தையும் கவர்வன. பாசுபதம் பெறப் பல மாத காலம் ஊண் உறக்கம் இன்றிப் பசுபதியை நோக்கித் தவம் செய்தவன் அல்லவா அருச்சுனன். ஆதலால் தாடி, சடை எல்லாம் நீண்டு வளர்ந்திருக்கின்றன. அவனுக்கு முகத்திலே ஓர் அசாதாரணக் களை. பெருந் தவசிகளுக்கு இருக்க வேண்டிய சாந்தம், பொறுமை எல்லாம் கனிகின்றன. தவக்கோலமே என்றாலும் வில் தாங்கிய வீரன்தான் அவன். அவன் பாசுபதம் பெறுவதே தன் வில்லாற்றலையும் மல்லாற்றலையும் காட்டத்தானே. இத்தனை அழகோடு விளங்கும் அர்ச்சுனனுக்குப் பக்கத்திலேயே கர்ணன். இவன் நாகபாசமேந்திய கையனாய் நிற்கிறான். வீரனுக்கு உரிய காம்பீர்யம், வில் வித்தையில் சிறந்தவன் என்பதனால் உள்ள மிடுக்கு எல்லாவற்றையுமே பார்க்கிறோமே இந்தச் சிலையில்.

இச் சிலைகளைப் பார்த்தபின் மகா மண்டபத்தில் நுழையலாம். கோயிலுள் நுழையும் போதே கொஞ்சம் பயபக்தியுடன் தான் நுழைய வேண்டும். உள்ளே சென்றதும் நம்மை உறுத்து விழித்து நோக்குபவன்தான் வீரபத்திரன். கனல் உமிழ் கண்களுடன் தென் வரிசைத் தூண்களில் முதலிலேயே நிற்பான் அவன். சிவபிரானை மதியாத மாமனார் தக்ஷனையும் அவன் செய்த வேள்வியையுமே அழிக்கப் புறப்பட்டவன் ஆயிற்றே.

> பார்த்த திக்கினில்
> கொடுமுடி ஆயிரம் பரப்பி
> ஆர்த்த திண்புய
> வரை இரண்டாயிரம் துளக்கி
> போர்த்த தாள்களில்
> அண்டமும் அகண்டமும் பெயர
> வேர்த் தெழுந்தனன்
> வீரரில் வீரரில் வீரன்.

என்று திரிகூட ராஜப்ப கவிராயர் பாடியிருக்கிறாரே இவனைப் பற்றி. அந்த வீரருள் வீரனைக் கேடயமும் வாளும் ஏந்திய கையனாய்க் காலை வீசி வளைத்துப் போருக்குச் செல்லும் கோலத்தில் நேருக்கு நேர் பார்த்தால் நம் உள்ளத்தில் அச்சம் எழுவதில் வியப்பில்லை. இவனது துணைவனான வீரன் ஒருவனும் எதிர்த்தூணில் இருக்கிறான். இந்த வீரபத்திரனை அடுத்தே மன்மதன்.

> தேர் இளம் தென்றலாக
> செழுங்குடை மதியமாக
> தூரியம் கடல்களாகச்
> சொற்குயில் காளம் ஆக
> நாரியர் சேனையாக
> நறைவண்டு விடுதூதாகப்
> பாரினில் விஜயம் செய்யும்
> படைமதன்

ஆயிற்றே அவன். ஆனால் இங்கே கரும்பு வில் ஒன்றை மட்டுமே ஏந்திய கையனாய், மற்றப் படைக்கலங்களை யெல்லாம் துறந்து நிற்கின்ற கோலத்தில் காண்கிறோம். ஆனாலு



# எவ்வளவு கிராம்கள் கொண்டது ஒரு சேர்?

மெட்ரிக் எடைகள் பழக்கத்திற்கு வந்துவிட்டன. விலைகள் மெட்ரிக் யூனிட்டுகளில் கூறப்படுகின்றன. எனினும் வியாபாரத்தில் கணக்கிடுதல் இன்னும் தொந்தரவாக இருக்கிறது.

**ஏன்?**

மெட்ரிக் முறைத்தத்துவத்தை சரியானபடி பின்பற்ருததுதான் காரணம். பொருள்கள் பழைய எடையிலோ அல்லது அதற்குச் சமமான மெட்ரிக் எடையிலோ பின்வருமாறு கேட்கப்படுகின்றன.

ஒரு சேருக்குப்பதிலாக 930 கிராம்கள்
ஒரு பவுண்டுக்குப்பதிலாக 454 கிராம்கள்

இதற்குப் பதில் கீழ்க்கண்டவாறு கேட்பதுதான் சரியான முறை.

1 கிலோகிராம் (1000 கிராம்)
500 கிராம்

இதனுல் பரிவர்த்தனைகள் சுலபமாகும். கணக்கிடுதல் மிக எளிதாகும்.

உங்கள் தேவைகளை

**மெட்ரிக் யூனிட்டுகளில்**
கேளுங்கள்

இதனுல் உங்களுக்கும் வியாபாரிக்கும் சிரமம் இருக்காது.

இந்திய அரசாங்கத்தால் வெளியிடப்பட்டது

DA 61/348

பாருவாக இவள் இல்லை. கொஞ்சம் கட்டுக் குட்டென்றே நிற்கிறாள். இவனுக்கு எதிர்த்த தூணில் அன்னத்தின்மீது ஆரோகணித்து வரும் ரதி தேவியோ பெண்மைக்கே ஓர் எடுத்துக் காட்டு. காமனும் கண்டு காமுறும் இம் மங்கை தன் அழகை, கையில் ஏந்திய கண்ணாடியில் கண்டு மகிழ்கிறாள். 'நிலவு செய்யும் முகமும், காண்பார் நினைவு அழிக்கும் விழியும், கலைவென்ற மொழியும், தெய்வக் கனி துலங்கு நகையும்' உடைய இந்தப் பெண்ணணங்கு, நமது உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொள்கிறாள்.

இப்படித் தேர்ந்த அழகுக்கு எல்லையாக ரதிதேவியை வடித்துக் காட்டிய சிற்பி, நல்ல அவலக்ஷணத்துக்கு ஓர் எல்லை காட்டுகின்றான். ரதிதேவியின் சிலைக்குப் பக்கத்திலுள்ள தூணில் ஓர் அழகிய மங்கையும் ஓர் அவலக்ஷணமான மனிதனும் உருவாகி யிருக்கிறார்கள். அழகே வடிவமாக இருந்த ஒரு முனிவர் அந்தப் பெண்ணின் காதலைச் சோதிக்க வேண்டி இப்படி உருமாறினார் என்றும் அந்த நிலையிலும் அவரையே மணக்க இசைந்து நின்றாள் அவள் என்பதும் கதை. இதற்கு எதிர்த் தூணிலேதான் புருஷாமிருகமும் வீமனும், இருவருக்கும் நியாயம் வழங்கும் தர்ம புத்திரரும். எல்லாம் ஏழு எட்டு அடி உயரத்தில் காத்திரமான சிற்ப வடிவங்கள். இத்தாலியப் பேராசிரியர் பாதர் ஹீராஸ் போன்ற அறிஞர்கள் எல்லாம் கண்டு தலை வணங்கி நின்ற சிற்ப வடிவங்கள் இவை. இக்கலைக்கூடத்தை உள்ளடக்கி வைத்துக் கொண்டிருப்பவரே திருவேங்கடநாதன்.

நாமும் வேங்கடவனை அந்த வேங்கடத்திலும் இன்னும் பல தலங்களிலும் கண்டு களித்திருக்கிறோம்.

வேங்கடமே விண்ணோர்
தொழுவதுவும், மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினை நோய்
தீர்ப்பதுவும்—வேங்கடமே
தானவரை வீழத் தன்
ஆழிப் படைதொட்டு
வானவரைக் காப்பான்மலை

என்று வேங்கடமலையைப் பற்றியெல்லாம் தெரிந்தவர்கள்தாம் நாம் என்றாலும் இத் தனை கலைப் பிரசித்தி உடைய சந்நிதியிலே கொலு வீற்றிருக்கும் வேங்கடவனை இங்கு தான் காண்கிறோம். கோயில் கருவறையில் நிற்கும் வேங்கடவர் நல்ல சிலா வடிவினர். செப்புச் சிலையாகவும் பூதேவி ஸ்ரீதேவி சமேதராக நின்று கொண்டிருக்கிறார்.

இந்தக் கோயிலையும் இங்குள்ள சிலாவடிவங்களையும் நிர்மாணித்தவர், நாயக்க மன்னர்களில் புகழ் வாய்ந்தவராக இருந்த கிருஷ்ணப்பநாயக்கரே. இத்தலம் முதலில் வேங்கடராயபுரம் என்றே அழைக்கப் பட்டிருக்கிறது. பின்னர்தான் கோயிலை நிர்மாணித்த கிருஷ்ணப்ப நாயக்கர் பெயராலேயே கிருஷ்ணாபுரம் என்று நிலைத்திருக்கிறது. இல்லை, விஜயநகர மன்னனான கிருஷ்ண தேவராயருடைய பெயரையே இதற்கு இட்டிருக்கிறார்கள் என்னும் வரலாறு உண்டு. இங்குள்ள கல்வெட்டுக்களும், செப்புப் பட்டயமும், கோயில் கட்டிய மன்னனைக் கிருஷ்ண பூபதி என்றே குறிக்கின்றன. ஆதியில் கோயிலைச் சுற்றிப் பெரிய மதில்; ஊரில் குடி மக்கள் பலரும் இருந்திருக்கின்றனர். கோயிலைச் சுற்றிய மதில் சிதைந்து கிடக்கிறது. ஊரில் இன்று குடியிருப்பவர்கள் வெகு சிலரே. ஊர் முழுதும் குட்டிச் சுவர்களே அதிகம். இங்கு தெய்வச் சிலையார் என்று ஒரு பெரியவர் இருந்தார் என்றும் அவர்மீது தெய்வச் சிலையார் விறலி விடு தூது என்று ஒரு நூல் பாடப் பட்டிருந்தது என்பதும் வரலாறு. எனக்கு அந்த நூல் கிடைக்கவில்லை.

எனக்கு இந்தக் கோயிலில் அதிகம் ஈடுபாடு உண்டு. கலை அழகைக் கண்டு அனுபவிக்க நான் பயிற்சி பெற்ற பள்ளியே இக் கோயில் தான். முதல் முதல் கலைகளைப்பற்றி எழுத முனைந்ததும் இக்கோயிலில் உள்ள சிலைகளைப் பற்றித்தான். ஆதலால்தான் ஏதோ வரப் பிரசித்தியோ, புராணப் பிரசித்தியோ இல்லாத தலம் என்றாலும் உங்களையெல்லாம் இக் கலைப் பிரசித்தி உடைய கோயிலுக்கு அழைத்துச் சென்றிருக்கிறேன். சிரமத்தோடு சென்றாலும் சிலை அழகைக் கண்டு திரும்பும் போது நிறைந்த மனத்தோடேயே திரும்புவீர்கள் என்பது திண்ணம்.

# பிம்பம்

ஜெயகாந்தன்

''மது!''

அந்தக் குரலின் அழைப்பில் என்ன கனிவு, என்ன காதல்! அழைப்பது அவர் தான்....

பத்து வருஷங்களுக்கு முன் பௌருஷத்தின் சொருபமாய் என் முன் தோன்றி வெறும் புன்னகையால் என்னைக் கன்னி மழித்துப் பின் மாலையிட்டு ஆறு மாதங்கள் ஊன் பொதிந்த உடலின் அதிர்ச்சியிலும் உருவ மற்ற உள்ளத்தின் சிலிர்ப்பிலும் எனக்கும் அவருக்கும் விளைந்த உறவின் நித்தியத்வத்தை என் ஹிருதயத்தில் முத்திரையிட்டு விட்டுப் பின்னொரு நாள் பத்து நாள் கொள்ளையில், உடல் செயலற்று உள்ளம் சிரழிந்து படுக்கையில் கிடந்தபோது உள்ளம் நலுங்காமல் உணர்ச்சியைத் தேனுய்த் தேக்கிய ஆண்மையின் நாதக் கரகரப்புடன் அவர் என்னை அழைத்த அந்தக் குரல்....

''மது....'' என்று ஒலித்த அவர் குரலில் கலக்கம் இல்லை. ஒலிக்காத என் குரலில், நெஞ்சக் குழியில் கழித்து அமிழ்ந்து போன அந்த விம்மலில் எதிர்காலத்தில் இன்று வரை நான் அனுபவிக்கும் தனிமைத் துயரின் தவிப்பும், இனி இறுதிக் காலம்வரை படவிருக்கும் அவஸ்தைகளும் அவருக்குப் புரிந்து விட்டனவா?

கட்டிலின்மீது பஞ்சு மெத்தையில் தளர்ந்து புதைந்து கிடக்க, கழுத்து வரை வெண்ணிறப் போர்வை மறைத்திருக்க—ஐயோ ஒரு வாரத்துக்குள் அவர் எப்படி உருவிழந்து போனுர்! படுக்கைக்குத் தலை மூளைத்திருப்பது போல் இருந்த அக் கோலத்தைக் கண்டு பொருமி, கண்ணீர் பெருக்கியவாறு உட்கார்ந்திருந்த என்னை அவர் அன்போடு அழைத்து வந்தி உயர்த்து, குச்சுக் குச்சாய் நீண்டிருந்த விரல்களால் என் கன்னத்தை வருடியவாறு சொன்னுர்: ''மது....! நான் செத்துப் போனுல், நீ வேற .... வேற கல்யாணம் பண்ணிக்கொள்.. வாழ்வை வீணுக்கி விடாதே......''

நான் குமுறி அழுதேன்.

அவர் மறுபடியும் அமைதியாகக் கண்களை மூடிக் கொண்டு உலர்ந்த உதடுகள் ஒட்டி ஒட்டிப் பிரிய, கரகரத்த குரலில் மிகவும் சிரமத்துக்கிடையே பேசினுர்:

''அழாதே, மது.... அழறதனுலே சாவு திரும்பிப் போயிடாது. இன்னும் ஒரு மணி நேரத்துக்கு அப்புறமோ, இன்னக்கி ராத்திரியோ, இல்லாட்டி நாளைக்குக் கார்த்தாலேயோ நான் செத்துப் போறது நிச்சயம். நேத்து ராத்திரியே பயங்கரமா விக்கல் வந்து



வந்து படுத்திச்சே ஒரு மணி நேரம், டாக்டர் ஒரு ஊசிபோட்டு விக்கலை நிறுத்தினரே, அதுக்கப்பறம் நான் உயிரோடு இருந்தாலும் கொஞ்சம் கொஞ்சமாகச் செத்துக்கிட்டே இருக்கேன்னு நல்லாத் தெரியுது. ...அழாதே மது... சாவை—செத்துப் போகிறதை நினைச்சு நான் எத்தனை தடவை பயந்திருக்கிறேன்.....உனக்குத் தெரியுமே..... நீ தூங்கிண்டிருக்கிறபோது திடீர்னு உன்னை எழுப்பறப்போ, நீ திடுக்கின்னு எழுந்து 'என்ன, என்ன'ன்னு கேக்கறப்போ முகமெல்லாம் வேர்க்கும்.... பயந்து போய்க் குழந்தை மாதிரி உன்னை இறுகக் கட்டிக்கிட்டு 'நான் செத்துப் போற மாதிரி கனவு கண்டேன்'னு சொல்றப்போ, நீ என்னென்னவோ பேசிச் சிரிக்க விளையாடி என்னை வதைக்கும் அந்த உணர்ச்சியைப் போக்கித் தூங்க வைப்பியே.... உண்மையிலேயே மது.... சாவு அப்படி ஒன்னும் பயமா இல்லே. அது சுகமாகவே இருக்கு. உடம்பு லேசா, லேசாப் பஞ்சமாதிரி தோணுது.... ஒவ்வொரு அங்குலமா பூமிக்கும் எனக்கும் இருக்கிற உறவே 'பட்பட்'னு விட்டு விலகிக்கிட்டே இருக்கு.....அழாதே, மது.... நான் செத்துப்போனப்பறம் நீ அழலாம். இப்போ நீ என்னோடே பேசு. ஆறு மாசம் நீ என்னோடே வாழ்ந்திருக்கே.... என்னோட உன் வாழ்க்கையே அஸ்தமிக்க வேண்டாம். எனக்குப் பிறகு நீ வேற.....''

நான் குமுறி அழுதபோது அவர் வார்த்தைகள் என் காதில் விழவில்லையோ, அவரே அதற்குமேல் சொல்லாமல் நிறுத்திக் கொண்டு விட்டாரோ?....

சற்று நேரத்துக்குப் பின் நான் அழுது ஓய்ந்து அழுகையின் தொடர்ச்சியாய் விட்டு விட்டு விம்மிக் கொண்டிருக்கையில் அவர் மீண்டும் என்னை அழைத்தார்.

''மது... இதோ கால் பக்கமிருக்கே அந்தத் தலையணையை எடுத்துக் கழுத்துக்குக் கீழே வெச்சுக் கொஞ்சம் நிமிர்த்தின மாதிரி என்னைச் சாத்தி வையேன்.''

உடம்பு வெறும் எலும்புக் கனமா யிருந்தது. அவரைத் தூக்கிக் கட்டிலின் தலைப்பக்கம் தலையணையை நிறுத்தி அவர் சொன்னது போல் உட்கார வைப்பதற்குள் எவ்வளவு ஸ்ரமம்! அவருக்குச் ஸ்ரமம் தெரியவில்லையோ, கழுத்துத் திருப்பிக் கொண்டு எக்கச் சக்கமாய் முகவாய்க்கட்டை நெஞ்சுக் குழியில் புதைந்து நான் பதறிப்போய் அவர் முகத்தை நிமிர்த்துகையில் அவஸ்தையோ, அவசரமோ இல்லாத ஒரு புன்னகையே அவர் முகத்தில் தவழக் கண்டேன்.

வறண்டிருந்த அவர் முகத்தில் வளர்ந்திருந்த ரோமங்களில் நான் முகத்தைப் புதைத்துக் கொண்ட போது உலர்ந்து தோலுரிந்த உதடுகள் என் கன்னத்தை ஸ்பரிசிக்க, அவர் குரல் என் செவி அருகே கரகரத்தது. ''மது... உணர்ச்சிகள் பொய்யென்று நான் சொல்லலே; ஆனா உண்மையை அது மறைக்கிற அளவு பெருகிடக் கூடாது. செத்துப் போகிறவன் கிட்டே பேசாமல் அவன் சாவை நினைச்ச



அழுறது அசட்டுத்தன மில்லையா? சொல்லு மது......''

''நீங்க என்னென்னமோ சொல்றதைக் கேட்டா எனக்குப் பயமா யிருக்கு.... நீங்க நல்லபடி பிழைச்சு எழுந்திடுவீங்க. என்னே வருத்தப் படும்படியா ஒண்ணும் சொல்ல வேண்டாம்'' என்று நான் விம்மினேன்.

''சரி, மது... எனக்கு மட்டும் இல்லையா அந்த ஆசை? இனிமே அதுக்கு அர்த்த மில்லே. நான் பிழைச்சி எழுந்தால் சரி; இல்லேன்னு, நான் செத்துப் போனப்புறம் நீ என்ன பண்ணுவே?...''

எனக்குக் கொஞ்சம் கோபம் கூட வந்தது.

''என்ன பண்ணுவேன்? என் அம்மாவும் பாட்டியும், இன்னும் ஒவ்வொரு ஹிந்து ஸ்திரீயும் என்ன செய்தாளோ அதையேதான் நானும் செய்வேன். இது என்ன துக்கிரிப் பேச்சு......'' என்று சொல்லி அவரிடமிருந்து சற்று விலகி அவர் முகத்தைக் கோபமாகவே வெறித்து நோக்கினேன்.

அப்பொழுது அவர் கண்கள் மூடியிருந்தன. நெற்றியில் இரண்டொரு சுருக்கங்கள் நெளிந்தன. பிறகு இலேசான குறட்டை ஒலியுடன் அவர் கழுத்துச் சற்று ஒருக்கணித்தபோது, 'அப்படியே படுத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்ல நினைத்து, அவர் மீது கை வைத்த போது உசுப்பி விட்டது போல் அவர் விழித்துக் கொண்டு, ''மது''—

''மனசைக் குழப்பிக்காமல் படுங்க...... மருந்து சாப்பிட இன்னும் ஒரு மணி நேரம் இருக்கு. அதுவரையில் நீங்கள் கொஞ்சம் தூங்கினால் நல்லது.....''

''இல்லே மது... நான் தூங்க மாட்டேன். இனிமே நான் தூங்கக் கூடாது. இப்பக்கூடத் தூக்கம் வருதுன்னு தெரிஞ்சுதான் முழிச்சேன்... சாவும் அப்படித்தான் வரும். நான் உன்னோடு பேசிக்கிட்டே ... இல்லே மது.... அதை நான் சொல்லலே'' என்று என் முக மாறுதலைக் கண்டு தம் பார்வையை வேறு பக்கம் திருப்பிக்கொண்டார். பார்வை மாறியது போல் பேச்சும் மாறிற்று.

''உன் அம்மாவும், பாட்டியும் ஒவ்வொரு ஹிந்துப் பெண்ணும் உன்னைப் போலவா தங்கள் இஷ்டப்படி கலியாணம் செய்து கொண்டாங்க? ஒரு கிறிஸ்தவனை மணந்து கொண்டாங்க? யாருமில்லாமல் தனியாக எங்கோ ஒரு பள்ளி உபாத்தியாயினியாக வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த உன்னை ஒரு ஹிந்துப் பெண் என்று தெரிந்தோ, அல்லது அதையே காரணமாகக் கொண்டோ நான் காதலிக்க வில்லையே? ஹிந்து மதத்தினர் கூறுவது போலவோ எங்கள் மத வழக்கப்படியோ நாம் கலியாணம் செய்து கொள்ள வில்லையே. யோசித்துப் பார், மது. எனக்கும் பெற்றோர்கள் இல்லாததால் நான் ஒரு கிறிஸ்தவனாகப் பிறந்திருந்தும் நீ ஒரு ஹிந்துப் பெண்ணாக இருந்தும் சட்டத்தின் முன் பதிவுத் திருமணம் செய்து கொண்டோம். அந்தச் சட்டம் உன்னை எனக்கப்புறம் ஒரு கலியாணத்துக்கு அனுமதிக்கும். என் மதமும் அனுமதிக்கும்....'';

அவர் மட்டும்தான் பேசிக் கொண்டிருக்க வேண்டுமா? நானும் பேசினேன். அவர் விருப்பம் அதுதானே?

''எந்தச் சட்டப்படி எந்த மதத்தினனை நான் கலியாணம் செய்து கொண்டாலும் நான் உங்களை விரும்ப, காதலிக்க எந்தச் சட்டத்தின் உத்தரவையும் எந்த மதத்தின் அனுமதியையும் எதிர்பார்த்ததில்லே. நான் ஒரு பெண்! என்னை நீங்கள் வற்புறுத்துவது அழகில்லே!'' என்று உரக்கப் பேசினேன்...

அவர் என் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். அவர் கண்களின் இமை ஓரத்தில் பாதரஸம்போல் கண்ணீர் பளபளத்து முகத்தில் ஒட்டாமல் உதிரும்போது உதடுகள் சோகத்தாலோ, உணர்ச்சி மிகுதியினாலோ நெளிந்தன. நான் அவர் கைகளைப் பிடித்து முகத்தில் வைத்துக் கொண்டு அழுதேன்.

''நாம் என்னவெல்லாம் பேசுகிறோம்... இப்படிப் பேசலாமா?...'' என்று அழுகையினூடே நான் கெஞ்சினேன். அவர் விரல்கள் என் கன்னத்தை வருடின.

''மது, என்னே மன்னிச்சுக்கோ...'' என்று சொல்லிவிட்டு அவர் கண்களை மூடி மௌனமானார். பிறகு, சில நிமிஷங்கள் கழித்து நெஞ்சில் கலகலக்கும் ஓர் இலேசான சிரிப்புடன் கண்களைத் திறந்து என்னைப் பார்த்தார். ''மது...மனுசன் ரொம்பச் சுயநலக்காரன். எந்த மதத்தைச் சேர்ந்திருந்தாலும் என்ன சட்டத்தை உண்டாக்கி யிருந்தாலும் ஒரு ஆண் ஒரு பெண் என்ற உறவில்-ரொம்ப அசிங்கமான சுயநலக்காரன் மனுசன். தனக்குப் பின்னும் — தன்னை அவன் இழந்த பின்னும் தனதை இழக்க மனமில்லாமல்— இல்லாத 'தனக்கு' இருக்கின்ற தனதாக அது இருக்க வேண்டும் என்று பேராசைப் படும் சுயநலக்காரன்...அதுதான் வைதவ்யம்! இப்படித்தான் மது நான் நினைத்திருந்தேன். நினைத்திருக்கிறேன்...அதனாலே தான்...... உன்னே இவ்வளவு தூரம் வற்புறுத்தினேன். நீ இவ்வளவு நிச்சயமா, தீர்க்கமா சாகக் கிடக்கும் என்னிடம் கோபப்படும் அளவுக்கு உறுதியாக நான் இல்லாமல் போனப்புறம், இல்லாத 'எனதா'க இருப்பேன்னு சொல்றப்ப — அதைக் கேக்கறப்போ ஒரு சந்தோஷம், ஒரு ஆத்ம நிறைவு ஏன் ஏற்படுதுன்னே புரியலே மது! மது!...நானும் சுயநலக்காரன் தானு? அந்தக் கேவலமான, அற்பமான, அர்த்தமில்லாத சுயநலத்துக்கு நானும் ஆளாகி விட்டேனு?...

''இல்லே...என் மனைவி எனக்கே, என்னுடையவளாகவே இருக்கணும் என்று ஒருத்தர் நினைக்கறது சுயநலமில்லே. அப்படிப் பாத்தா, எனக்கு ஒரு மனைவி வேணும்னு கலியாணம் பண்ணி ஒருத்தியைத் தனக்கே ஆக்கிக்கறது கூடத்தான் சுயநலம்!...''

அவர் கண்கள் கூரை முகட்டை வெறித்தவாறிருக்க, கண்ணீர் பெருகி வழிந்து கொண்டே இருந்தது.

''நீங்க வீணு எதுக்கு வருத்தப்படுறீங்க?'' என்று அவர் முகத்தைத் துடைத்தேன்.

''மது...மது...சாவு இப்பத்தான் ரொம்பப் பயங்கரமா இருக்கு மது...என்னே நம்பியே என்னைக் கலியாணம் பண்ணிக்கிட்டு வாழ்க்கை முழுதும் ஆனந்தமா கழிச்சடலாம்னு எவ்வளவு கற்பனைக் கனவுகளோடு எனக்கு நீ மாலையிட்டிருப்பே? அதையெல்லாம் பொய்யாக்கிட்டு மறுபடியும் உன்னே

அனுதையாக வைதவ்யத்துக்குப் பலியாக் கிட்டு நான் போயிடப் போறேனே, மது...''

''நீங்க நிச்சயம் நல்லாயிடுவீங்க...இவ்வளவு தெளிவா எல்லாத்தையும் பத்தியும் பேசற நீங்க செத்துப் போவோம்னு நினைச்சு வருத்தப் படலாமா?''

''மது! 'நீ சாக மாட்டேன்னு' நம்பிக்கை தரும் சொல் சாவுக்கு மருந்தாகாது. நான் இவ்வளவு தெளிவாப் பேசறதுக்குக் காரணமே நான் செத்துப் போவேங்கிறதைத் தீர்க்கமா தெரிஞ்சிக்கிட்டதனுலேதான். நீ உன் மத வழக்கப்படி விதவையாகிவிடக் கூடாதுங்கிற நினைப்பிலேதான் இவ்வளவு பேசினேன்...'' என்று சொல்லும்போது அவர் முகம் வேர்த்திருந்தது. நான் சேலைத் தலைப்பால் முகத்தைத் துடைக்கும்போது, சாதாரணமாகவே சற்று மேலெடுத்த அவர் கூரிய மூக்கு மரத்தாலானது போல் கடினமாய்த் தட்டுப்பட்டது.

''என்ன, மூக்கு இப்படிக் கனத்திருக்கு? வலிக்கிறதா?'' என்று அவர் நெற்றியிலிருந்து மூக்கின் நுனிவரை ஒரு விரலால் இலேசாக வருடினேன். எப்போதும் அப்படி வருடுவது எனக்குப் பிடிக்கும். எங்களுக்குள் அது ஒரு விளையாட்டு. அவருக்கு ரொம்ப அகலமான நெற்றி. ரொம்ப நீளமான கூரான மூக்கு!

''வலியா?...என் மூக்கையும் நெற்றியையும் நீ தொடறேன்னு நினைக்கிறேன்...மூடிக்கத்தான் முடியுது...அப்பிடி மரத்துப் போச்சு!'' அவர் குரலும் கம்மி யிருந்தது.

நான் மறுபடியும் விலகி நின்று அவர் முகத்தைக் கவனித்தேன். சவக் களை என்பார்களே அது தெரிந்தது. என் நெஞ்சு வெடித்துவிடுவதை என்னுல் கட்டுப்படுத்திக் கொள்ளமுடியாதுபோல் தவித்தேன். அழுதால் அவர் மிகவும் வருந்துவார்.

'நீங்கள் பிழைத்து விடுவீர்கள்' என்று சொல்ல இப்போது எனக்கு வாய் வரவில்லை.

'நீ உன் மத வழக்கப்படி விதவையாகி விடக்கூடாது'...என்று சொன்ன அவர் வார்த்தைகள் மனசில் தோன்றின. சாகப் போகிறோம் என்று தெரிந்து இவ்வளவு விவகார ஞானத்தோடு பேசுபவரிடம் அழுவது தவறு என்ற நினைப்புடன் பதில் கூறினேன்:

''கட்டாய வைதவ்யம்தான் மத வழக்கம். அது கொடுமையும் கூட....இப்போது கட்டாய வைதவ்ய எதிர்ப்பு என்பது சமூக வழக்கமாகி விட்டதும் கூட உண்மையில் பெண்களுக்கு ஒரு வரப்பிரசாதம்தான். இந்த நிலையில் ஒருத்தி, வாழ்ந்த வாழ்வின் இனிப்பான நிகழ்ச்சிகளை எண்ணி வாழ்வைக் கழிக்கடலாம்னு முடிவு பண்ணி வைதவ்யத்தைத் தானே வலிய ஏத்துக்கறதிலே யாருக்கும் நஷ்டமில்லே. அதிலே வாழ்க்கை முழுதும் யாருக்கும் கேட்காத ஒரு தூரத்து இசையை... ஒரு நிமிஷம் கூர்ந்து கேட்டால் 'இசையே இல்லே இது உன் நினைப்பு' என்று அறிவு உணர்த்தும் ஒரு பொய்யான—உணர்ச்சிக்கு இதமான ஒரு பிரமையில், பிரமைக்குட்பட்டிருக்கும் போது உலகமே ஒரு பிரமையாகத் தோன்ற வைக்கும் அந்தப் பிரமையில் லயித்து. - அந்த இனிய மெல்லிய, அரூபமான இசைக்கு அடிமையாகி வாழ்வதில் ஒரு தனிப்பட்ட பெண்ணுக்கு ஆத்ம நிறைவு, வாழ்வின் நிம்மதியும் கிட்டும். அதனுல் நீங்கள் இறந்தாலும், இறந்து விட்டீர்கள் என்ற நினைப்பைத் தவிர, என்னேடு வாழ்பவராவீர்கள்!''

நான் பேசப்பேச அவர் கேட்டுக்கொண்டே இருந்தார். அவர் முகத்தில், இவ்வளவு ஆழ்ந்த அன்பும் தனியான குண நலமும் கொண்டவளை மனைவியாகப் பெற்ற பெருமிதம் குடி கொண்டிருந்தது...

நான் கடிகாரத்தைப் பார்த்தேன். மருந்து கொடுக்க வேண்டிய நேரம் வந்து விட்டதை அறிந்து அவுன்ஸ் கிண்ணத்தில் மருந்துடன் வந்து அவரை எழுப்பியபோதும் அவர் தூங்கிக் கொண்டே யிருந்தார்...

அவரது வெற்றுடலை நான் வெறித்து நோக்கியவாறு நின்றிருந்தேன்...

''மது!''

யாருடைய செவிப்புலனுக்கும் எட்டாமல் எனக்குமட்டும் கேட்கும் தூரத்து இசையாய், ஒரு நிமிஷம் கூர்ந்து கேட்டால் 'இசையே இல்லே, இது உன் நினைப்பு' என்று அறிவு உணர்த்தும் பொய்யாய், உணர்ச்சிக்கு இதமான அந்தப் பொய்யில் லயிக்கும்போது உலகமே ஒரு பிரமையாய்த் தோன்றவைக்கும் அந்த அரூபமான இசைக்கு அடிமையானேன்!

''மது...''

அந்தக் குரலுக்கு உரியவர் ஒரு கிறிஸ்தவர்.

அந்தக் கிறிஸ்தவரின் அன்பு மனைவியாய் வாழ்ந்து, அவருக்கு ஒரு ஹிந்து விதவையானதில் எனது வாழ்வு நிறைவுற்றது.

## 2

ஆண்டுகள்தான் பத்து ஆகிவிட்டனவே தவிர என் வயது இன்னும் முப்பதைக் கூடத்





பாரதத்தின் தேசிய கீதத்தை அவமதிக்கும் வகையில் நம் நாட்டினரே பாடுவதைப் பல சந்தர்ப்பங்களில் செவியுற்றவர்களுக்கு 'ஹார்வர்டு கிளீ கிளப்'பைச் சேர்ந்த அமெரிக்க யுவர்கள் அதனைத் தெளிவாக உச்சரித்து நன்றாகப் பாடியதைக் கேட்கச் சந்தோஷமாயிராதா? இக் கோஷ்டியினர் இரு மாதங்களுக்கு ஆசிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து மேனாட்டு இசையில் தங்களுக்குள்ள திறமையைச் சகலரும் அறியச் செய்து வருகிறார்கள்.

---

தூண்டவில்லை. இதோ என் படுக்கைக்கு நேரே நான் உறங்கிப் போகு முன்னாலும், உறங்கி விழித்த பின்னும் பார்க்கும் போதெல்லாம், உள்ளம் நலுங்காமல் உணர்ச்சியைத் தேனாய்த் தேக்கிய குரலில், ஆண்மையின் நாதக் கரகரப்புடன் ''மது!'' என்று அழைக்கும் அவர் பிம்பம்—அந்தப் புகைப்படத்தில் இருக்கும் அவருக்கு இருபத்தியேழு வயது தான்....அவரை விடவும் மூத்தவளாகி விட்டேன் நான். இப்போது நான் அவருடைய விதவை. விதவையாகி விட்டவள் வயதால் மூத்து, தமக்கையாகி, தாயாகி, பாட்டியானாலும் இளைஞனாய் இறந்துபோன ஒருவருக்கு மனைவியாகத்தான் இருக்க வேண்டும்.

ஆம்! தன்னிலும் இளையவனைக் காதலிக்கும் உரிமை விதவைக்கு உண்டு. கணவனோடு வாழ்கிறவள்தான் தன்னோடு வாழ்ந்து வரும் கிழவனையும் கூடக் கிழவியாகக் காதலிக்க வேண்டும். எனக்கு எவ்வளவு வயதானாலும் நான் காதலிக்கும் எனது அன்பருக்கு இருபத்தியேழு வயதுதான்.

அந்த இளமைக் காதலை, வாலிபக் குரலை, ஒவ்வொரு நிமிஷமும் நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்.

படுக்கையிலிருந்து அன்று நான் கண் விழித்தபோது அறையில் ஒரே இருள். அவர் பிம்பம் கண்களுக்குத் தெரியவில்லை. பொழுது விடியவில்லையோ என்ற எண்ணம் எழும் போது கடிகாரத்தின் மணியோசையும், தெருவில் ஏற்பட்ட சந்தடியும் செவிக்கு எட்ட இரவு மழை பெய்ததால் சன்னல் கதவுகளையெல்லாம் மூடிவிட்டுத் தூங்கிய நினைவு வந்தது. நான் படுக்கையில் படுத்தவாறே சன்னலைத் திறந்தபோது....

எதிர் வீட்டு மாடியில், பத்து வருஷங்களுக்கு முன் பௌருஷத்தின் சொரூபமாய் என் முன் தோன்றிய அவரது இன்னொரு பிம்பமாய்...

அகன்ற நெற்றியும், ரொம்ப நீளமான, கூரான மூக்கும் அவரைப் போலவே...அந்தப் பிம்பத்தைப் பார்த்துக் கொண்டே இரு

என்று அந்தக் கண்கள் இடும் கட்டளையை என்னால் மீறிப் போக முடியவில்லை...

''மது'' என்ற அந்தத் தூரத்து இசையில் என் நெஞ்சு குழைகிறது.

வெறும் புன்னகையால் என்னைக் கற்பழிப்பதுபோல் ,அதே சிரிப்பு....

அவரே தான்....

நானும் புன்முறுவலித்தேனா?...

என் உடல் பயத்தாலோ, மகிழ்ச்சியாலோ, திகைப்பாலோ, நாணத்தாலோ பதறியது.

வீட்டின் எந்த மூலையில் நான் நின்றாலும் ஏதோ ஒரு கோணத்தில் நின்று என் உடலெல்லாம் தேன் பொழிந்து சிலிர்க்க வைக்கும் அந்தக் கண்களின் தாக்குதலிலிருந்து என்னால் தப்ப முடியவில்லை. தப்புவதற்கு நான் விரும்பவும் இல்லை.

வீட்டுக்குள் ஊடுருவி என்னைப் பிடிக்கும் அந்தக் கண்கள் வீதியில் என்னை விட்டு விடுமா?

நான் பள்ளிக்கூடம் போகும்போது அந்தக் கண்கள் என்னைத் தொடர்ந்தன. வகுப்பில் பாடம் நடத்த இயலாமல் என்னை வருத்தியது எது?...

இது என்ன தவிப்பு? இவ்வளவு நாட்கள் இல்லாத இன்பமும் துன்பமும் கலந்த, அல்லது இரண்டுமே அற்ற இந்த உணர்ச்சிகளுக்கு நான் எப்படி இரையாகிப் போனேன்?

எனக்கு இப்போது பயம் பிறந்து விட்டது.

நான் என்னவாகிக் கொண்டிருக்கிறேன் என்று எனக்குப் புரிய ஆரம்பித்தது...

வகுப்பு முடிந்து மணியடித்ததும் நேரே வீட்டுக்குப் போய், வீட்டின் எந்த மூலையில் நான் நின்றாலும் என்னைப் பற்றிப் பிடிக்கும் அந்தக் கண்களிலிருந்து தப்பித்துக் கொள்ளத் தான் வேண்டும் என்று என் உணர்வை மீறிய அறிவு உரைத்தது.

எங்கோ, எங்கோ போய்க் கொண்டிருந்தேன். அங்கே அந்த யாருமற்ற தனிமையில் பாறைகளும் செடிகொடிகளும் மண்டிக் கிடந்த ஊருக்கு ஒதுக்கமாய் இருக்கும் அந்த இடத்தில் நின்று அருகில் தெரியும் கோயிலின்

செரக் குடும்பத்தை அர்த்தமற்று நான் வெறித்து நிற்கையில் என் அருகே யாரோ வந்து...யாரோவா?...

''யார் நீ?''

அவன் இலேசாகச் சிரித்தான்.

'ஐயோ, அப்படிச் சிரிக்காதீர்கள்! வேண்டாம், வேண்டாம்...நான் பார்க்க மாட்டேன்' என்று மனம் அலறியது. நான் முகத்தை மூடிக் கொண்டேன்.

'என்னைத் தப்பா நெனைக்க வேண்டாம்... நான் உங்கள் வீட்டுக்கு எதிரில் இருந்து எப்பவும் உங்களைப் பார்த்து...பார்த்து...' வெட்கத்தாலும் பயத்தாலும் அந்த இளைஞன் தவிப்பதைக் கண்டபோதும் எனக்கு அவர் நினைவு வந்தது.

''நான் செத்துப் போனா நீ உன் வாழ்வை வீணாக்கிடாதே'' என்ற அவர் வார்த்தைகள் இவ்வளவு நாட்களுக்குப் பிற்கு எனக்கு ஏன் நினைவு வரவேண்டும்?

''உங்கள் பெயர்?'' அவன் என்னைப் புரிந்து கொண்டுவிட்ட தைரியத்துடன் இனிமையாய்க் கேட்டான்.

''மதுரம்...''

''மது...இப்படிக் கூப்பிட்டால் அழகாயிருக்கும்!'' என்று ஆங்கிலத்தில் கூறி உள்ளம் தளுங்காமல் உணர்ச்சியைத் தேனாய்த் தேக்கிய குரலில் ஆண்மையின் நாதக் கரகரப்புடன் அவன் அழைத்தான்: ''மது!''

அந்தத் தூரத்து இசை அருகே ஒலிக்கும் போது நாராசமாய் ஒலித்தது. நான் காதுகளைப் பொத்திக்கொண்டு விலகி ஓடினேன்.

''மது!'' என்று மீண்டும் அவன் அழைத்த போது நான் நின்று திரும்பினேன். அவன் கண்கள் கலங்கி என் உள்ளத்தைக் கலக்கின.

''நான் விதவை!'' என்றேன்.

''தெரியும்!'' என்றான்.

''தெரிந்துமா?...'' என்று ஏதோ நான் கேட்கையில்...

''தெரிந்துதான்'' என்று சொல்ல முடியாமல் முடித்தான்.

நாங்கள் பேசவில்லை. ஆனால் புரிந்து கொண்டோம்.

இந்தத் தனிமையில் நான் இந்த இடத்தில் இருப்பதை எண்ணி அச்சமுற்றேன். அவனைப் பார்த்துக் கொண்டே நிற்கத்தான் மனம் விரும்பியது.

''தயவுசெய்து மன்னித்து விடுங்கள்... நான் வருகிறேன்....நாளை, காலை வீட்டுக்கு வாருங்கள். தவறாக நினைக்கக் கூடாது!'' அந்தத் திவ்ய முகத்தைப் பயமற்றுப் பார்க்க வேண்டும் என்ற ஆசையால் என்னை அறியாமல் கூப்பிட்டதற்காகத் தலை குனிந்தவாறு திரும்பினேன். அப்பொழுது அந்த இளைஞன் சொன்ன வார்த்தைகள் என்னைப் பிடரியில் அடித்துத் தாக்கின.

''மது...நாளை உங்கள் வீட்டுக்கு வருவதை ஒரு பாக்கியமாகக் கருதுவேன்...ஆனால், உங்களது அழகான நெற்றியில் குங்குமம் வைத்த கோலத்துடன் உங்கள் வாழ்க்கையின் விருந்தாளியை வரவேற்க வேண்டும்!''

அந்த வார்த்தைகளின் மூலம் அவன் அவரைப் போலவே எவ்வளவு உயர்ந்த பண்பும், ஞானமும், நயத்தக்க நாகரிகமும் கொண்டவன் என்பதை நான் புரிந்து கொண்டேன்.

ஆனால் அவன் என்னை எவ்விதம் புரிந்து கொண்டானோ?

## 3

உறங்கும் போதும் விழிக்கும்போதும் நான் தவிக்கும்—அந்தத் தூரத்து இசையைப் பொய்யாய், உலகத்தையே ஒரு பிரமையாய் என்னுள் ஒலிக்கும் அந்தத் திருவுருவத்தின் முன் கையில் குங்குமச் சிமிழுடன் நின்றிருக்கிறேன்.

'இது நீங்கள் எனக்குச் பொரிக செய்ததும் நான் நிராகரித்ததுமான முடிவு' என்று எனக்குத் தருந்தபடி கொடுத்த வாக்கை மனசால் அழிக்க முயலுகிறேன்.

அன்று அவரது தீர்க்கமான யோசனையை நிராகரித்ததன் மூலம் என்னை ஒரு பெண் என்று பிரகடனப்படுத்திக் கொண்டேனே... இன்று?....

நான் அன்று அவருக்குக் கூறியதெல்லாம் ஏமாற்றா? செத்து, தெய்வமாய்க் கிடந்த அவர் முகத்தில் ஒளி வீசிய நம்பிக்கையும் பெருமிதமும்... இறந்தவருக்குத் துரோகம் செய்கிறேனா?

'இல்லை. நான் பெண்! தவித்தும் பெண்!' என்று உறுதியாகத் தலையை உலுப்பிக்கொள்ளும்போது என் கையிலிருந்த குங்குமச் சிமிழ் கீழே விழுகிறது....

அப்பொழுது வாழ்க்கையின் விருந்தாளி வந்துவிட்டதைக் கதவை இடிக்கும் மெல்லிய ஓசை உணர்த்த நான் போகிறேன். விருந்தாளியை வரவேற்கவா?....

நான் கதவைத் திறந்ததும் புன்முறுவலோடு எதிரில் நிற்கும் அவன் முகம் வதங்கிப் போகிறது. அந்தப் புன்முறுவல் என்னை ஒன்றும் செய்யவில்லை இப்போது. அந்த வெறும் பிம்பம். உண்மையல்ல!

அவன் திரும்பிச் செல்கிறான்.

''உள்ளே வரலாம், விருந்தாளியாக அல்ல. ஒரு விஷயத்தைப் புரிந்து கொண்டால் இருவருக்கும் நல்லது.''

அவன் மௌனமாய் உள்ளே வருகிறான்.

''இதைப் பாருங்கள்!'' என்று நான் அவர் படத்தைக் காட்டும்போது அவன் கண்கள் திறக்கின்றன.

''என்னைப் போலவே...''

''ஆமாம். உங்களைப் போலவேதான். நீங்கள் அல்ல. தயவுசெய்து என்னைத் தவறாக நினைக்க வேண்டாம். எனது விதவைக் கோலத்துக்கும் யாரும் பொறுப்பல்ல. நானே மனப்பூர்வமாய் விரும்பி ஏற்றுக் கொண்டது. நான் உங்களைப் பார்த்துச் சலனமுற்றது உண்மை; இதன் பிம்பமாய் நீங்கள் இருந்ததனால்தான். என் கணவருக்கு நான் துரோகம் நினைத்ததால் விளைந்தது அல்ல, அந்தச் சலனம். அவரை நான் இன்னும் அதிகமாக நேசிப்பதின் விளைவே இந்தச் சலனம்.''

அவன் போய் விட்டான். பிம்பம் மறைந்தது. மூல புருஷனின் உருவம் என் நெஞ்சில் நிலைத்தது.

''மது!'' மதுரமிக்க அந்தக் குரல் என் செவிப் புலன்களைக் கடந்து, என் இதயத்தில் ஒலிக்கிறது. நான் என்னை, உலகை, அந்தப் பிம்பத்தை—எதையும் மறக்காமல் என் நினைவு என்ற மெய்யில் வைக்கிறேன்!




## Industrial India Annual 1961

இந்தியாவில் தொழில், வர்த்தகத் துறையில் ஈடுபட்டுள்ளவர்களில், தமது ஆற்றலையும் அநுபவத்தையும் கவர்ச்சிகரமாக எழுத்து வடிவத்தில் வழங்கக் கூடியவர்கள் மிகச் சிலரே. இவற்றைப் பெறப் போட்டியிடும் ஆண்டு மலர்களோ பெருகி வருகின்றன. எனவே தொழில் துறை சம்பந்தமான ஒரு விசேஷ மலர் தயாரிப்பதென்பது மிகவும் சிரம சாத்தியமான காரியமாகும். இந்தச் சிரமங்களை யெல்லாம் கடந்துவிட்ட சாதனைக்குச் சான்று பகர்கின்றது இந்தப் புத்தகம். பழக்கமானவையானாலும் புரிபடாத பொருளாதார விஷயங்கள் பல உண்டு. அவற்றை மிகவும் எளிய முறையில் தெளிவாகக் கூறும் அழகிய பல கட்டுரைகள் அடங்கியுள்ளன இம்மலரில்.

தொழில் குறித்து எல்லா அம்சங்களையும் உள்ளடக்கியுள்ள இம்மலரிலுள்ள பெரும்பாலான கட்டுரைகளிலும் ஆழ்ந்த, முதிர்ந்த விஷய ஞானம் பிரதிபலிக்கிறது.

எடுத்த எடுப்பிலேயே மலரின் தலையங்கங்கள் அதற்கு விறுவிறுப்பூட்டுகின்றன. "பெரும் செலவு தேவைப்படும் முதலீடுகள் மூலம் தன்னிறைவு அடைந்தால், உயர்ந்த நிலை மட்டங்களில்தான் தேவைகள் திருப்திகரமாகப் பூர்த்தி செய்யப்படும். ஆனால் ஆதாரத் தேவைகள் பூர்த்தியாகாமலே நிற்கும்" என்கிறார் திரு வி. நியுன் தமது கட்டுரையில். இந்தியாவில் பாங்கு வட்டி விகிதம் இயற்கைக்கு ஒவ்வாத முறையில் இருப்பதால் ஏற்பட்டுள்ள தேக்க நிலையை உலக பாங்கைச் சேர்ந்த திரு எம். எல். நராக்மன் வெகு சுருக்கமாக, ஆனால் அழுத்தமாகச் சொல்கிறார். சர்வதேச நிதிக் கார்ப்பரேஷனைச் சேர்ந்த திரு ராபர்ட் கார்னர், வெளிநாட்டினர் இங்கு முதலீடுகள் செய்ய வேண்டுமானால் அவற்றுக்கு யந்திரத் தொழில் நாடுகளிலிருப்பதைவிட அதிக லாபம் ஏற்படுத்தித் தரவேண்டும் என்பதை அச்சுறுத்திக் கூறுகிறார். கம்பெனிச் சட்டத்தின் புதுக் கட்டுத் திட்டங்களின் விளைவுகளைப் பட்டியல்கள் மூலம் விளக்குகிறார் டாக்டர் ராஜ் நிகம். டாக்டர் சுப்பராயன், திரு எஸ். கே. பாட்டீல், திரு எம். எஸ். ஸ்ரீநிவாசன் ஆகியோர்களின் ருசிகரமான கட்டுரைகள் பொதுப் பகுதியில் இடம் பெற்றுள்ளன.

பிரத்தியேகமாக நுட்ப விஷயங்களை ஆராயும் பகுதியில் டாக்டர் கே. எல். ராவ் நீர்வளம் பற்றியும், டாக்டர் ஏ. என். கபூர் காகிதம் பற்றியும், திரு எஸ். கே. கல்வாலா அலுமினியம் தொழில் பற்றியும் எழுதியுள்ள வியாசங்கள் பளிச்சென்று முன் நிற்கின்றன. விற்பனைத் தந்திரங்கள், மோஸ்தர்களின் முக்கியத்துவம் இவை பற்றியும், ஜவுளி, கேபிள், மருந்துகள், கண்ணாடி, பிளாஸ்டிக், தேயிலை, ரசாயனத் தொழில்கள் இவை குறித்துத் தேர்ந்த பரிச்சயம் உள்ளவர்கள் எழுதியுள்ளனர்.

அநுசக்திப் பகுதி பாமரர்களுக்கும் பல புது விஷயங்களைச் சொல்கிறது. சர் பால் கோர்-பூத் வெளிநாடுகளுடன் இந்தியாவின் பொருளாதாரக் கட்டுறைப்பு பற்றி எழுதியுள்ள கட்டுரை குறிப்பிட வேண்டியதாகும். ஜூன் 1951 லிருந்து இந்தியாவுக்கு அமெரிக்கா மட்டும் 1829 கோடி ரூபாய் உதவியிருக்கிறதெனத் தெரிகிறது.

அமெரிக்காவையும், ஐரோப்பிய நாடுகளையும் போல் !பிரம்மாண்டத் தொழிற்சாலைகளும், இயந்திர சாதனமும் பயன்படுத்தாத ஜப்பான்தான் இந்தியாவுக்குத் தக்கமுறையில் வழிகாட்ட முடியும் என்பது உலகத் தொழில் முறைகளை நேரில் கண்டறிந்தவர்களின் கருத்து. இம்மலரின் ஜப்பான் பகுதியில் எழுதும் திரு கொய்ச்சி அகி, உள்நாட்டு மூலதனத்துடனேயே ஜப்பான் துரிதமாக யந்திர மயத் தொழிலமைப்பை எப்படி ஏற்படுத்திக் கொண்டது என்பதை விளக்குகிறார். மனித சக்திதான் இந்தப் பொருளாதாரப் புனர்வாழ்வை இவ்வளவு அதிசயமான முறையில் சாதித்திருக்கிறது என்பது வெளிப்படை.

இப்புத்தகத்தின் நேர்த்தியான அமைப்பு இதனை யாவரும் வாங்கிப் படிக்குமாறு தூண்டி அழைக்கிறது. இதில் இடம் பெற்றுள்ள எல்லாக் கட்டுரைகளும் பரந்த மனப்பான்மையுடன் எழுதப்பட்டுள்ளன. வீண் சச்சரவுகளைக் கிளறி விடாத இக் கட்டுரைகளைக் காணவே ஓர் ஆறுதலாகவும் ஆனந்தமாகவும் இருக்கிறது. இந்தத் துறையில் வெளிவரும் மலர்கள் எப்படி யிருக்க வேண்டும் என்ற தரத்தை நிர்ணயிக்கும் ஓர் ஆதர்சத் தொகுப்பு இது.

—சித்ரா எஸ். நாராயணசுவாமி

Official Organ of the All-India Manufacturers Organisation, Publishers: A. Mac Rae & Co., Private Ltd., United India Buildings, Sir Phirozshah Mehta Road, Bombay-1; Price Rs. 7-50.

## 'ஸ்ரீ மஹாகணபதி ஸபர்யாபத்ததி' 'ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யத்ரிசதீ நாமஸ்தோத்திரம்'

ஸ்ரீ வித்யா மார்த்தாண்ட வி. வி. ஸ்வாமி சாஸ்திரிகள் புதிதாக இயற்றி வெளியிட்டுள்ள 'மஹாகணபதி ஸபர்யாபத்ததி' என்ற நூலும் 'ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யத்ரிசதீ நாமஸ்தோத்திரம்' என்ற நூலும் மஹாகணபதி வழிபாட்டுக்கும் ஷண்முகன் வழிபாட்டுக்கும் சிறந்த வழிகாட்டிகளாகும். 'மஹாகணபதி ஸபர்யாபத்ததி' என்ற நூலில் தியானம், ஜபம், ஆவரண பூஜை, ஹோமம் முதலியன தந்திரசாஸ்திர முறைப்படி தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. தீக்ஷாக்கிரமம், கணபதி ஸூக்தம், கவசம், வல்லபேச உபநிஷத்து, கணபதி ஸ்தோத்திரங்கள், கணபதி ஸஹஸ்ரநாமம், அஷ்டோத்தரம் ஆகியவையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்துமதம் பிரவிருத்தி, நிவிருத்தி என்ற இரண்டு சொற்களில் அடங்கும் என்று கூறினார் விவேகானந்தர். பிரவிருத்திக்கு ஷண்முகனும், நிவிருத்திக்குக் கணபதியுமாக இருவர் சிவசக்தி மானஸ புத்திரர். இவர்கள் பரசிவத்திற்குத் தாழ்ந்த தத்துவமன்று. 'தனக்குத்தானே மகனாகிய தத்துவன்' என்றபடி, சிவனே பிள்ளையார் வடிவிலும் முருகன் வடிவிலும் தம்மை இரண்டாகத் தோற்றுவிக்கின்றார். பிள்ளையார் வடிவைச் சிவனும் ஓங்காரப் பொருளைப் போற்றுகிறார். ஷண்முகன் சிவனுக்கும் ஓங்காரப் பொருளை உபதேசிக்கும் சாமியப்பனாக விளங்குகிறார். காயமே கோயிலாகக் கொண்டு யோகிகள் செய்யும் மானஸ பூஜையில் மூலாதாரமாகிய முதல் ஆதார சக்கரத்தில் மஹாகணபதி ஸ்திரமாக வீற்றிருப்பவராகவும், ஷண்முகன் ஆறு ஆதார சக்கரங்களிலும் சஞ்சரிப்பவராகவும் கருதப்படுகிறார். கணபதி மலைபோல் அசையாதிருப்பவர்; ஷண்முகன் நதிபோல் பாய்ந்து செல்பவர். இரு மூர்த்திகளும் பரசிவத்தின் இரு தன்மைகளை விளக்குகின்றனர். இவ்விரு திருமூர்த்திகளின் பூசனைக்குரிய இப் புத்தகங்கள் ஆஸ்திகர்களுக்குப் பெரிதும் பயன்படும்.

"அன்னு"

'ஸ்ரீ மஹாகணபதி ஸபர்யாபத்ததி' விலை: ரூ. 3-25.

'ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யத்ரிசதீ நாமஸ்தோத்திரம்' (நாகரலிபியில்) விலை: 25 ந. பை. பிரசுரம்: வி. வி. ஸ்வாமி சாஸ்திரி, 313 தங்கசாலைத் தெரு, சென்னை—1.

## பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை வெள்ளி விழா மலர்

காலஞ்சென்ற சேதுப்பிள்ளை அவர்களுக்குத் தமிழுலகம் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறது. அறிவும் ஆற்றலும் அரிய இனிய பண்பும் பெற்ற அந்தப் பெரியாருடன் தொடர்பு கொண்டு பயன் அடைந்தவர்கள் எண்ணிக்கை சொல்லும் தரமன்று. அவரது சேவையின் வெள்ளி விழா மலர் அவரது சென்னை சர்வகலாசாலைத் தொண்டுக்கும் பண்புக்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

டாக்டர் சேதுப்பிள்ளை அவர்களுடன் நேரில் நெருங்கிப் பழகியவர்களும் அவரிடம் மாணவ மாணவிகளாக இருந்தவர்களும் மிக அரிய கட்டுரைகள் வழங்கியிருக்கிறார்கள். திரு எஸ். மகராஜனின் கட்டுரை சிகரம் வைத்தாற் போல் விளங்குகிறது. புலவர் ந. சஞ்சீவி பேராசிரியரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றி விரிவாக எழுதியிருக்கிறார்.

இவை தவிர பல பேரறிஞர்கள் தங்கள் புலமையினின்று உதித்த ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் வழங்கியிருக்கிறார்கள். செக்கோஸ்லோவேகிய ஆசிரியர் டாக்டர் கமில் ஸ்வெலபில், ஜெர்மானிய தேசப் பேராசிரியர் டாக்டர் ஆர்னே ஹெஹ்மான், ருஷ்ய நாட்டுப் பேராசிரியர் எம். ஆண்ட்ரநோவ், மலாயா சர்வகலாசாலையின் பேராசிரியர் தவத்திரு தனிநாயக அடிகள் ஆகியோர் ஆராய்ச்சிக் கட்டுரைகள் வழங்கியிருக்கிறார்கள். பாரத நாட்டிலுள்ள பல ஆராய்ச்சி நிபுணர்களின் ஆங்கிலக் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், டாக்டர் மு. வ., ஔவை க. துரைசாமிப் பிள்ளை, திரு பு. ரா. புருஷோத்தம நாயுடு, திரு கா. அப்பாதுரை, டாக்டர் கே. கே. பிள்ளை முதலிய தமிழறிஞர்களின் பல்வேறு பொருள்கள் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும் பிரசுரமாகியுள்ளன.

பிரசுரம்: பழனியப்பா பிரசுரம், திருவல்லிக்கேணி, சென்னை-5, விலை: ரூ. 15.

## பாரதக் கதைகள்

தருமத்தின் பெருமையையும், நற்பண்புகளின் மாண்பினையும் ருசிக்க எடுத்துச் சொல்லும் மகா பாரதத்தைச் சிறுவர்களுக்குக் கவர்ச்சிகரமாக அளிக்கும் நோக்கத்துடன் நான்கு புத்தகங்களாக எழுதியிருக்கிறார் ஆசிரியர். பாரதத்தில் காண்பதற்கு மாறான காளிதாச சாகுந்தலத்துடன் தொடங்கியிருக்கிறார். அநேகமாக முக்கியமான சம்பவங்களையே விளக்கி எழுதியிருக்கிறார். இளைஞர்களுக்காக எழுதப்பட்டதால் திரைக் கதைப் பாணியைப் பின்பற்றி, ஆங்காங்கே திரைப் படங்களின் பெயர்களையே கூடப் புகுத்தியிருக்கிறார். ஓட்டமுள்ள நடை.

கௌரவர்கள்கதிரவகுலத்தினர் (நான்காம் புத்தகம், பக்கம் 7) என்பது போன்ற தவறான விஷயங்களும், மாத்திரி என்பதற்கு மித்திரி (மூன்றாம் புத்தகம், பக்கம் 30) என்பது போல் தவறான இயற் பெயர்களும் காணப்படுகின்றன. எப்படியாயினும் சிறுவர்கள் விரும்பிப் படிக்கக்கூடிய நூல்களே, விலைதான் சற்று அதிகம்.

பாரதக் கதைகள்: நான்கு புத்தகங்கள்; ஆசிரியர்: இ. மா. பக்தவத்சலன்; வெளியீடு: வள்ளுவர் பண்ணை, 137, பிராட்வே சென்னை-1. ஒவ்வொன்றும் விலை: ரூ. 1.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.



# நாளொரு மேனியாய்

# சரும எழில் மேம்பாடு



# புதிய ரெக்ஸோனா துணையோ

ரெக்ஸோனா சோப்பின் மிருதுவான நுரையில் அடங்கியுள்ள துகேடில்-எழிலூட்டும் பற்பல எண்ணெய்கள் இணைந்த விசேஷத் தைலமான கேடில் சருமத்தினூடே சென்று, அதை மென்மையுடனும், மழமழப்பாகவும் மிளிரச் செய்து....உங்கள் மேனி வனப்பை ஓங்கச் செய்கிறது. எடுப்பான நறுமணத்தினால் உங்களை மணிக்கணக்கில் புது மலர்ச்சியுடனிருக்கச் செய்கிறது. உங்கள் அன்றாட அழகுசாதனத்துக்குகந்தது ரெக்ஸோனா.






புதிய மேனுறை, புதிய வடிவழகு, புதிய பச்சை வர்ணம் ஆகியவற்றோடு கூடிய புதிய ரெக்ஸோனாவை நீங்கள் விரும்புவீர்!

## புதிய ரெக்ஸோனா—
## உங்கள் சருமத்திற்கு அனுகூலமானது

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon